# தமிழ்நாட்டில் நடராசர் வழிபாடு

முனைவர் மு. அ. மாணிக்கவேலு,
எம். ஏ., எம். ஃபில்., பி.எச்.டி., டிப்ள.இந்தி,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
சிந்திக் கல்லூரி, சென்னை-600 077.

அம்பலவாணர் பதிப்பகம்
45, அருணாசல நாயக்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600 002.

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | **தமிழ் நாட்டில் நடராசர் வழிபாடு** |
| ஆசிரியர் பெயர் | : | முனைவர் மு. அ. மாணிக்கவேலு |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | கலை, இலக்கியப் பண்பாட்டாய்வு |
| பதிப்பு | : | முதல் பதிப்பு, ஜூலை 1994. |
| படிகள் | : | 1000 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| தாள் | : | 13.7 Kg கிரிமோ பேப்பர் |
| நூல் அளவு | : | டெமி $\frac{1}{8}$ |
| அச்செழுத்து | : | 10 புள்ளி ரோமன் |
| பக்கங்கள் | : | xvi + 296 |
| விலை | : | ரூ. 70-00 |
| அச்சிட்டோர் | : | **பாவை பிரிண்டர்ஸ்**<br>142, ஜானி ஜான்கான் தெரு,<br>ராயப்பேட்டை, சென்னை-14. |
| கட்டுமானம் | : | கெட்டிக் கட்டுமானம் |
| வெளியீட்டாளர் | : | **அம்பலவாணர் பதிப்பகம்,**<br>45, அருணாசல நாய்க்கன் தெரு,<br>சிந்தாதிரிப்பேட்டை,<br>சென்னை-600 002. |

இந்நூல் திருமலை—திருப்பதி தேவஸ்தான நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப் படுகிறது. நன்றி !



THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS.



இந்நூலினை, என்னுடைய பாட்டனார்

அமரர்

**பேராசிரியர் பூ. ஆலால சுந்தரனார்**

அவர்களுக்குக்

காணிக்கையாக்குகிறேன்.

—முனைவர் **மு. அ. மாணிக்கவேலு**

## முனைவர் மு. அ. மாணிக்கவேலுவின் 'தமிழ் நாட்டில் நடராசர் வழிபாடு'

**கலைமாமணி முனைவர் இரா. குமரவேலன்**

# அணிந்துரை

தமிழரின் கலைவண்ணத்திற்குச் சான்றாகத் திகழ்வது நடராசர் உருவம். மிகத் தொன்மைக் காலந்தொட்டு சிவ வழி பாட்டில் ஈடுபாடு கொண்டிருந்த தமிழறிஞர்களும் தமிழ்க் கலைஞர்களும் சிவனைப் பல்வேறு ஆடற்கோலங்களில் கண்டு மனமகிழ்ந்திருக்கின்றனர். ஆடற்கலை காலந்தொறும் வளர வளர நடராசரின் திருவுருவத் தோற்றமும் மாறுதல்கள் அடைந்து வந்திருக்கின்றன. வளர்ச்சி நிலையில் அமைந்த ஒவ்வொரு தோற்றமும் கலைநயம் மிக்கதாகவே பொலிந்தது வியப்புக்குரிய செய்தியாகும். 'தமிழ்நாட்டில் நடராசர் வழி பாடு' என்னும் இந்நூல் இவ்வாறு வளர்ச்சி பெற்று வந்த நடராசர் உருவங்களின் செய்திகள் அனைத்தையும் தொகுத்துச் சொல்வதுடன், நுணுகி ஆய்ந்தும் முடிவுகளைச் சொல்கிறது.

முனைவர் மு. அ. மாணிக்கவேலு அறிவார்ந்த இளைஞர்; வழிவழி அருந்தமிழ் வளர்க்கும் ஆற்றல்மிக்க குடும்பத்தைச் சேர்ந்தவர்; எண்ணமும் எழுத்தும் தமிழாக வாழ்பவர்; நட்புணர்வும் நன்றியுணர்வும் நலமுறப் பெற்றவர்; கனிவான பேச்சும் கடுமையான உழைப்பும் கொண்டவர்; இன்று தமிழ்ப் பேராசிரியராகத் திகழும் இவரது ஆற்றலின் விளைவே நடராசர் வழிபாடு பற்றிய இந்த நூல் எனில் மிகையாகாது.

நடராசர் வழிபாடு பற்றி சர் ஜான் மார்ஷல், ஆனந்த குமாரசாமி, க. சி. கமலையா, சிவராமமூர்த்தி உள்ளிட்ட அறிஞர்கள் பலர் ஆய்ந்து பல நூல்களை எழுதியுள்ளனர். இவர்களது நூல்களையும், பின்னர் எழுந்த பல்வேறு நூல்கள், கட்டுரைகள், செய்திகள் முதலானவற்றையும் ஆழ்ந்து ஆராய்ந்து இந்நூலை விளக்கமாக எழுதியிருக்கிறார் நண்பர் மாணிக்கவேலு அவர்கள்.

நடுநிலையில் நின்று பல செய்திகளை ஆராய்ந்து கூறியுள்ளார் ஆசிரியர். இதற்கு ஒரு சான்று காட்டலாம்: பல இடங்களில் கமில் சுவெலபிலின் கருத்துகளை ஏற்றுப் போற்றிக் குறிப்பிடும் ஆசிரியர், பாண்டியர் காலத் திருமேனிகளில் முதன்மையானதாக விளங்கும் பொருப்புமேட்டுப்பட்டித் திருமேனியை ஆனந்த தாண்டவத்திற்கு மூல முன்மாதிரியாக இருக்கலாம் என்னும் அவரது கருத்தைப் பொருத்தமற்றது என்று மறுக்கிறார் (31). இத்தகைய முடிவுகள் ஆய்வாளரின் முனைப்பையும், உறுதியையும், நுண்ணறிவையும் எடுத்துக் காட்டுகின்றன.

'நடராசர் வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்' என்னும் முதல் இயலில் ஆசிரியர், ஆடல், கூத்து, நிருத்தம் ஆகிய சொல்லாட்சிகளைப் பற்றித் தரும் விளக்கங்கள் சிறப்பு மிக்கன. கோயில்களில் உள்ள உருவங்களைப் பற்றி ஆய்வதற்கு முன் இலக்கியத்திலும், கல்வெட்டுக்களிலும் காணப்பெறும் செய்திகளை ஆய்ந்து தருகிறார் ஆசிரியர். நடராசரின் பல்வேறு பெயர்களையும், ஆடல்வல்லானின் தோற்றம் முதலானவற்றையும், இவ்வியலில் ஆய்ந்து தந்துள்ளார்.

'எழுவகைத் தாண்டவங்களுள் ஆனந்த தாண்டவம் பெறுமிடம்' என்னும் இரண்டாம் இயலில் அறிஞர் பலர் பலவாறாகக் கூறும் பல்வேறு தாண்டவ வகைகளைச் சுட்டிக்காட்டி அவற்றுள் எழுவகைத் தாண்டவம் என்பது எது என்பதை ஆய்ந்து கூறி, அவற்றை இனிது விளக்கிச் சொல்லியுள்ள முறை மிகவும் பாராட்டத்தக்கது. சிவனை ஆடற் கோலத்தில் கண்டவாறு சமய அறிஞர்கள் விநாயகரையும் திருமாலையும் கண்டு மகிழ்ந்ததைச் சுட்டிக் கூறவும் (75) ஆசிரியர் மறக்கவில்லை. பல இடங்களில் உள்ள ஆனந்த தாண்டவச் சிற்பங்களையும், கோயிலின் விதானத்தில் உள்ள ஓவியங்கள், நூற்றுக்கணக்கான கோயில்களில் அமைந்துள்ள திருமேனிகள் ஆகியவற்றையும் இப்பகுதியில் மிகவும் நுட்பமாக ஆய்ந்து கூறியுள்ளார் ஆசிரியர். ஆசிரியரின் கூர்மையான பார்வை எந்த ஒரு நுட்பமான செய்தியையும் விட்டுவிடவில்லை என்பதைப் படிப்பார் அனைவரும் உணரலாம்.

திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, குற்றாலம் ஆகிய இடங்களில் உள்ள மணி, பொன், வெள்ளி, தாமிரம், சித்திர மெனப்படும் ஐவகை மன்றங்களைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் மூன்றாவது இயல் விரிவாகக் கூறுகிறது.

'தமிழ்ப் பண்பாட்டில் நடராசர் வழிபாடு பெறுமிடம்' என்னும் நான்காமியல் இந்நூலிற்கு மணிமுடியாகத் திகழ்கிறது. காலந்தொறும் வளர்ந்துவரும் நடராசர் வழிபாடு பற்றிய செய்திகள் அனைத்தையும் இவ்வியல் பண்பாட்டு நோக்கில் ஆய்ந்து அதுபெறும் சிறப்பிடத்தை நிறுவுகிறது.

ஆய்வு நெறிமுறையில் சற்றும் பிழையாமல் ஆசிரியர் தலைப்பினை அணுகியிருக்கிறார்; அதே நேரத்தில் எளிய மக்களும் விரும்பிப் படிக்கும் வண்ணம் அவரது நடை அமைந் திருக்கிறது. அருமையும் எளிமையும் ஒருசேர விளங்கும் இந்த நூல் கலையன்பர்களுக்கும், சிவநேசச் செல்வர்களுக்கும் கற்கண்டென இனிக்கும்; காரகிற் சந்தனமென மணக்கும்.

இருநூற்றுக்கும் மேற்பட்ட ஆலயங்களுக்குச் சென்று அங்குள்ள சிற்பங்களையும் திருமேனிகளையும் ஓவியங்களையும் நேரில் நுணுகி ஆய்ந்து தகவல்களைத் தந்திருக்கிறார் ஆசிரியர் என்பதற்குச் சான்றாக விளங்குவது நூலின் இறுதியில் அவர் இணைத்துள்ள பட்டியல்கள். ஆய்வாளரின் அரிய முயற்சிக்கும் உழைப்புக்கும் இவை எடுத்துக்காட்டுகளாகும்.

இடைப்பிறவரல், மற்றொன்று விரித்தல், கூறியது கூறல் முதலான குறைபாடுகளின்றி, எளிய தமிழில் இனிமையும் சுவையும் குன்றாது எழுதும் தமிழ்நடையினைக் கைவரப் பெற்றிருக்கிறார் ஆசிரியர் மாணிக்கவேலு. கற்றார் அனை வரையும் கவர்ந்து ஈர்க்கும் கனிவான நடை நூலுக்குப் பெருமை சேர்க்கிறது என்று பாராட்டி மகிழலாம்.

நடராசர் வழிபாடு பற்றிய இந்நூல் தமிழர்க்குக் கிடைத்த கருத்துக் களஞ்சியம்; கலைக் கருவூலம்! கோயிற் சிற்பங்களைப் பற்றியும் திருமேனிகளைப் பற்றியும் தொகுத்துத் தந்திருக்கும் செய்திகள் அறிவுச் செல்வம்; இன்பப் புதையல்! முனைவர் மு. அ. மாணிக்கவேலு அவர்கள் அழகு தமிழ் எழுதும் ஆணிப் பொன் முத்து; ஆனந்த தாண்டவத்தை ஆய்ந்தளித்த அருந் தமிழ்ச் சொத்து!

இந் நூலைத் தொடர்ந்து ஆசிரியர் உமை வழிபாடு, குமரன் வழிபாடு, விநாயகர் வழிபாடு முதலானவை பற்றியும் ஆய்ந் தெழுதித் தமிழுக்கும் சமயத்துக்கும் கலைக்கும் தொடர்ந்து தொண்டாற்றுவார் என நினைக்கிறேன்; நெஞ்சார வாழ்த்து கிறேன்!

**இரா. குமரவேலன்**

'தமிழ்',
74, இளங்கோ நகர் இணைப்பு,
விருகம்பாக்கம், சென்னை-92.

# உள்ளுறை

# முன்னுரை

நடராசர் வழிபாடு இன்று இந்தியா முழுவதும் பரவியுள்ளது. இருப்பினும், இவ்வழிபாடு எங்கிருந்து தோன்றியது என்ற ஆராய்ச்சி இன்றும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

தமிழகம் முழுவதும் நடராசர் திருமேனிகளும், சிற்பங்களும் காணப்படுகின்றன. இருப்பினும், நடராசர் என்ற வடமொழிப் பெயர் ஆய்வாளருக்கு மயக்கத்தை உண்டாக்கியது. ஆகவே, அந்நடராசர் தொடர்பான நூல்களையும், கட்டுரைகளையும் ஆராய்ந்தார்.

நடராசர் வழிபாட்டின் தொடக்கநிலை ஆய்வாக ஆனந்த குமாரசுவாமியின் ஆங்கில நூல் அமைந்தது. 'Dance of Shiva' என்ற அந்நூல் 1918-ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலில் ஒரு கட்டுரையே நடராசர் பற்றி அமைந்துள்ளது. அக்கட்டுரையில் நடராசரின் மூவகை ஆடல்களும், அதன் தத்துவ விளக்கமும் கூறப்பட்டுள்ளன.

மயிலை சீனி. வேங்கடசாமியின், 'இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்' என்ற நூல் 1948-ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலில்தான் தமிழில் முதன்முதலில் நடராசர் பற்றிய செய்திகள் இடம்பெற்றன. அந்நூலில் தாண்டவத் தத்துவமும், எழுவகைத் தாண்டவ விளக்கமும் இடம் பெற்றுள்ளன.

அடுத்து, சே.த. இராமலிங்கம் பிள்ளை, 'நடமாடும் நம்பன்' என்ற தலைப்பில் 1954-ஆம் ஆண்டு முதல் (மே-ஜூன்) 1955-ஆம் ஆண்டு (ஜூலை-ஆகஸ்டு) வரை, 'அமிர்தவசனி' என்ற மாத இதழில் கட்டுரை எழுதிவந்தார். அக் கட்டுரையில்

இறைவனின் கூத்துகளும், எழுவகைத் தாண்டவ விளக்கமும் சுட்டப்பட்டுள்ளன.

துரை அரங்கசாமியின் 'The Religion and Philosophy of Tevaram' என்ற ஆங்கில நூல், 1958-ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலில், இறைவனின் ஆடற்செய்திகள் சுந்தரர் தேவாரத்தில் இருந்து சுட்டப்பட்டுள்ளன. இறைவனின் எழுவகைத் தாண்டவமும், காஞ்சிபுரத்திலுள்ள ஆடற்சிற்பங் களும், நாட்டிய நூற் கருத்துகளும் விளக்கப்பட்டுள்ளன.

தமிழில் நடராசர் பற்றி, தண்டபாணி தேசிகர் எழுதிய 'ஆடல்வல்லான்' என்ற நூல் 1967-ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலினை, திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்டது. அந் நூலில் அவர், நாட்டிய அங்கங்களையும், தாண்டவ வகை களையும், வடமொழி நூற் கருத்துகளைக் கொண்டு விளக்கி யுள்ளார்.

சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர் கோயில் கும்பாபிஷேக மலரில் (1972), வை. தட்சிணாமூர்த்தி எழுதிய, 'ஆகமங்கள் நவிலும் எழுவகைத் தாண்டவங்கள்' என்ற கட்டுரை இடம்பெற்றுள்ளது. அக் கட்டுரையில், அவர், ஆகமங்களில் உள்ள செய்திகளைக் கொண்டு, எழுவகைத் தாண்டவங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

சி. சிவராமமூர்த்தி ஆங்கிலத்தில் 'Nataraja in Art, Thought and Literature' என்ற நூலை (1974) எழுதியுள்ளார். அந் நூலில், இந்தியா முழுவதிலுமுள்ள நடராசர் சிற்பங்களில் சிலவற்றை விளக்கியுள்ளார்; வடமொழி நூற் கருத்துகளைத் தொகுத்துரைத்துள்ளார்; கல்வெட்டு கூறும் நடராசர் செய்தி களையும் குறிப்பிட்டுள்ளார்; தென்கிழக்கு ஆசிய நாடுகளிலுள்ள நடராசர் சிற்பங்களையும் சுட்டியுள்ளார்; தமிழகத்திலுள்ள கோயில்களின் திருமேனிகளில் சிலவற்றை எடுத்துரைத் துள்ளார்.

ஆனந்தகுமாரசுவாமி சென்னை வானொலி நிலையத்தில் நிகழ்த்திய உரையின் விரிவாக, க.சி. கமலையாவின் 'ஆனந்த மாநடம்' என்ற நூல் (1978) அமைந்துள்ளது. அந்நூலிலுள்ள அக்கட்டுரை, ஆனந்தகுமாரசுவாமியின் 'Dance of Shiva' என்ற நூலைத் தழுவியே எழுதப்பட்டுள்ளது. அந்நூலையே, சோ. நடராசன், 'சிவானந்த நடனம்' என்ற பெயரில் (1980) மொழி பெயர்த்துள்ளார்.

Annie Marie Gaston எழுதிய ஆங்கில நூல், 'Siva in Dance, Myth and Iconography' *(1982)* என்பது. அந்நூலில் மூவகைக் கால கட்டங்களில் நடராசர் சிற்பங்களின் வளர்ச்சி சுட்டப் பட்டுள்ளது. இந்தியா முழுவதிலுமுள்ள சிற்பங்கள் அந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

கமில் வி. சுவெபில் எழுதிய 'Ananda-Tardava of Siva-Sada nrttamurti' என்ற ஆங்கில நூல் 1985-ஆம் ஆண்டு வெளி வந்தது. அந்நூலில், முற்கால நடராசர் திருமேனிகளும், சிற்பங் களும் விளக்கப்பட்டுள்ளன. நடராசர் வழிபாடு தென்னிந்தியா விலிருந்துதான், வடநாட்டிற்குச் சென்றது என்ற கருத்து நிறுவப்பட்டுள்ளது. இலக்கியங்களில் உள்ள ஆடற்செய்திகள் சுட்டப்பட்டுள்ளன.

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் கும்பாபிஷேக மலரில் *(1987)*, சபாரத்தினத்தின், 'சிற்சபைநாதரும் சிவாகமங்களும்' என்ற கட்டுரை இடம் பெற்றுள்ளது. அக்கட்டுரையில் அவர் சிவாகமங்கள் சுட்டும் நடராசரைக் குறிப்பிட்டுள்ளார்.

க. சி. கமலையாவின் 'Vision of the Sacred Dance' என்ற ஆங்கில நூல் 1987-ஆம் ஆண்டு வெளிவந்தது. அந்நூலில் இலக்கி யங்கள் சுட்டும் ஆடற் செய்திகள், அருங்காட்சியகத்திலுள்ள நடராசர் திருமேனிகள், திருமூலரின் திருக்கூத்துத் தரிசனத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு ஆகியன சுட்டப்பட்டுள்ளன.

மேற்கண்ட நூலாசிரியரின் மற்றொரு நூல் 'தமிழகக் கலை வரலாறு' (1988) என்பது. அந்நூலில் அவர் நடராசரின் செப்புத் திருமேனிகளை மட்டும் விளக்கியுள்ளார்.

டாக்டர் இரா. கலைக்கோவன், தமிழகத்தில் உள்ள கோயில்களின் சிறந்த நடராசர் திருமேனிகளை உலகிற்கு அறிமுகப்படுத்தி வருகிறார். அத்திருமேனிகளைப் பற்றிய கட்டுரைகள் இதழ்களில் வெளிவந்துள்ளன. அவற்றுள் சில, 'வயலூரில் ஒரு வடிவழகன்', 'ஆனந்தக் கூத்தன்', 'கரண குழப் பங்கள்' என்பன.

மேற்கண்ட நூல்களிலும் கட்டுரைகளிலும் தமிழகத்தில் நடராசர் வழிபாடு பற்றிய முழுமையான செய்திகள் இடம் பெறவில்லை; ஒரு பகுதியே விளக்கப் பெற்றுள்ளது. ஆகவே, இவ்வாய்வு, நடராசர் வழிபாடு பற்றிய முழுமையான செய்தி

களைவிளக்குகிறது. இவ்வாய்வு விளக்கமுறைப் பகுப்பாய்வாக அமைந்துள்ளது.

மேற்கண்ட நூல்களை ஆய்வாளர் படித்த பின்பும், கள ஆய்வில் ஈடுபட்ட பொழுதும் சில கருதுகோள்கள் தோன்றின. அவை:

1. நடராசர் வழிபாடு, தமிழகத்திலிருந்துதான் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

2. ஆடல்வல்லான் என்ற பெயரே பிற்காலத்தில் நடராசர் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும்.

இக் கருதுகோளை உறுதியாக்க,ஆய்வாளர் மண்டல வாரியாகக் கோயில்களிலுள்ள நடராசர் சிற்பங்களையும், திருமேனி களையும் ஆராய்ந்தார். மேலும், இலக்கியங்களில் நடராசர் என்ற சொல்லாட்சி எப்பொழுது தோன்றியது என்பதையும் ஆராய்ந்தார். அதன் விளைவாகவே, இவ்வாய்வேடு அமைந்தது.

இவ்வாய்வேடு, நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. 'நடராசர் வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்' முதல் இயலாக அமைந்துள்ளது. சிவபெருமானுடைய தோற்றம் பற்றிய ஆய்வு இங்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. அவனு டைய உருவத் திருமேனிகளுள் ஒன்றான நடராசர் திருமேனி தான் எடுத்துக் கொள்ளப்பட்டது. அந்நடராசரின் பல்வகைப் பெயர்களான அம்பலவாணன், ஆடல்வல்லான், கூத்தப் பெருமான், சபாபதி, நடராசர், நடேசன், நிருத்தன் என்பவை விளக்கப்பட்டுள்ளன. தமிழகத்திலுள்ள ஆடற் சிற்பங்களின் அமைப்புக் கூறப்பட்டுள்ளது. ஆனந்த தாண்டவமல்லாத மற்ற ஆடல் திருமேனிகளின் அமைப்பும் அழகும் சுட்டப் பட்டுள்ளன.

'எழுவகைத் தாண்டவங்களுள் ஆனந்த தாண்டவம் பெறு மிடம்' என்பது இரண்டாவது இயல். இவ்வியலில் இறைவனின் எழுவகைத் தாண்டவங்கள் விளக்கப்பட்டுள்ளன. கூத்தாடும் விநாயகரும், ஆனந்த தாண்டவ விஷ்ணுவும் சுட்டப்பட் டுள்ளனர். தேவகோட்டம், பிரகாரம், தூண், இதர சிற்பங்கள், கோபுரம், சுதை, மரம், ஓவியம், திருமேனி ஆகியவற்றில் உள்ள ஆனந்த தாண்டவ நடராசரின் அமைப்பும் அழகும் காட்டப் பட்டுள்ளன. இவை, மண்டல வாரியாக விளக்கப்பட்டுள்ளன.

தமிழகத்திலுள்ள பெரும்பாலான கோயில்களில் உள்ளவை இவ்வியலில் சுட்டப்பட்டுள்ளன.

மூன்றாவது இயலாக, 'ஐவகை மன்றங்கள்' அமைந்துள்ளது. இவ்வியலில் திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, குற்றாலம் ஆகிய இடங்களில் உள்ள மன்றங்கள் விளக்கப் பட்டுள்ளன. இந்த ஐவகை மன்றங்கள் பற்றிய கருத்து, ஓர் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

நான்காவது இயல், 'தமிழ்ப் பண்பாட்டில் நடராசர் வழிபாடு பெறுமிடம்' என்பது. இவ்வியலில், தமிழகத்தில் பெரும்பாலான கோயில்களில் நடராசர் வழிபாடு நடைபெறும் முறை விளக்கப்பட்டுள்ளது. தமிழர்களின் கடவுள் பக்தி, கலைத்திறன் ஆகியன இவ்வியலில் சுட்டப்பட்டுள்ளன.

முடிவுரையில், ஒவ்வோர் இயலின் ஆய்வு முடிவுகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. பின்னிணைப்பில், தேவ கோட்டம், பிரகாரம், தூண், இதர சிற்பங்கள், கோபுரம், சுதை, மரம், ஓவியம், திருமேனி ஆகியவற்றில் நடராசரின் அமைப்பு, மண்டல வாரியாக விளக்கப்பட்டுள்ளது. கல், சுதை, மரம், திருமேனி, ஓவியம் ஆகியவற்றில் மொத்தத்தில் நடராசர் இடம்பெறும் விதம் சுட்டப்பட்டுள்ளது. நடராசர் பற்றிய நூல்களின் பட்டியல் இடம் பெற்றுள்ளது. நூலின் இறுதியில் சிறுமணவை முனிசாமி இயற்றிய நடராஜப் பத்து இடம் பெற் றுள்ளது.

நடராசர் வழிபாடு பற்றி ஆய்வினை மேற்கொள்ள இசை வளித்ததோடு, நடராசர் பற்றிய செய்திகளைக் கூறிய மேற் பார்வையாளர் டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்களுக்கு என் நன்றி உரித்து. அவருடைய மறைவிற்குப்பின், என்னுடைய ஆய்வேட்டினைச் செம்மையாகத் திருத்திக் கொடுத்த மேற் பார்வையாளர் டாக்டர் துளசி. இராமசாமி அவர்களுக்கும் நன்றியுடையேன்.

என்னுடைய முனைவர் பட்ட வல்லுநர் குழுவில் இடம் பெற்று, பல செய்திகளைக் கூறி நெறிப்படுத்திய டாக்டர் குல. சபாரத்தினம், டாக்டர் தெ. ஞானசுந்தரம் ஆகியோருக்கு என் நன்றி உரித்து.

என்னுடைய ஆய்வேட்டினைச் செம்மையாக அமைக்கப் பல வகைகளில் உதவிகளைப் புரிந்த டாக்டர் இரா.

கலைக்கோவன், டாக்டர் முத்துக் கண்ணப்பர், டாக்டர் ந. சக்திவேலு, டாக்டர் வெ. தெ. மாணிக்கம், டாக்டர் மன். இரா. ஜெயராமன், டாக்டர் இரா. குமரவேலன், டாக்டர் தி. ரா. செல்வராசு, டாக்டர் ஆனந்த நடராஜ தீக்ஷிதர், டாக்டர் தி. பி. சித்தலிங்கையா, டாக்டர் K.R. நஞ்சுண்டன், டாக்டர் T.S. மீராதேவி, திரு. இரா. முத்துக்குமாரசாமி, திரு. S.K. ஹரிநாதன், திரு. செ. ரெ. திருநாவுக்கரசு, திரு. செ. ரெ. பாலசுப்பிரமணியம், திரு. ந. சேதுராமன், திரு. தி. ஏகாம்பர குருக்கள், திரு. தி. துரைஸ்வாமி ரத்ன தீக்ஷிதர், வித்துவான் ச. தண்டபாணி தேசிகர், பேராசிரியர் க. வெள்ளை வாரணன், திரு. வே. விஸ்வநாத முதலியார் ஆகியோருக்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றி.

கோயில்களில் உள்ள சிற்பங்களைப் புகைப்படம் எடுக்கவும், திருமேனிகளைப் பார்க்கவும் அனுமதி வழங்கிய இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் திரு. வ. இராமதாஸ் அவர்களுக்கும், தொல்பொருளாய்வுத் துறை இயக்குநர் திரு. நடன. காசிநாதன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. தமிழகக் கோயில்களின் நிர்வாக அதிகாரிகளுக்கும் என் நன்றி உரித்து.

ஆய்வேட்டினை எழுதுவதற்கு நூல்களைக் கொடுத்துதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர்கள் திருமதி அ. யோகம், திருமதி இரா. பார்வதி அவர்களுக்கும், மறைமலையடிகள் நூல் நிலைய நூலகர் திரு. A. R. வெங்கடாசலபதி அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றி. கன்னிமரா நூலகத்தாருக்கும், அடையாறு நூலகத்தாருக்கும் என் நன்றி உரித்து.

இவ்வாய்விற்கு டாக்டர் பட்டம் வழங்கியதோடு, நூலாக வெளியிட அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு என் நன்றி உரியது.

இவ்வாய்வினை, நூலாக வெளியிட நிதியுதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு என் மனங்கனிந்த நன்றி.

இந்நூலினை வெளியிட, பலவிதங்களில் உதவி புரிந்த திரு. மு. க. சண்முக சுந்தரம், திருமதி பூ. ஆ. நவநீதம்மாள், திரு. பூ. ஆ. நடராசன், திரு. மு. க. அண்ணாமலை, திருமதி அ. புனிதவதி, திரு. மு. அ. இரத்தினவேலு ஆகியோருக்கு என் நன்றி உரித்து.

இந்நூலுக்குச் சிறந்ததோர் அணிந்துரை வழங்கிய, பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் கலைமாமணி முனைவர் இரா. குமரவேலன் அவர்களுக்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றி.

குறித்த காலத்தில் நன்முறையில் அச்சிட்டு உதவிய பாவை அச்சகத்தாருக்கு என் நன்றி.

அம்பலவாணரின் அருட்கடலைப் பற்றிய செய்திகள் சமய வாதிகள் இடையே நிலவியிருந்தன. அவர்கள் அச்செய்திகளை வெளியிடத் தயங்கினர். அதனால், அம்பலவாணரைப் பற்றிய செய்திகள் ஒரு சிலரிடையே முடங்கிக் கிடந்தன. அவற்றை யெல்லாம் வெளிக் கொணரவே, இவ்வாய்வு எடுத்துக் கொள்ளப் பட்டது.

இதனால், கற்றறிந்தவர்கள் மட்டுமல்லாமல், பாமரர்களும் அம்பலவாணரைப் பற்றியும் அறியமுடியும். குறிப்பிட்ட சமயத் தினர் மட்டுமல்லாமல் எல்லா சமயத்தினரும் அவரைப் பற்றி அறிய இது ஒரு வாய்ப்பாகும். தமிழர்தம் சமயப் பண்பாட்டில் நடராசர் வழிபாடு எந்த அளவிற்கு இடம் பெற்றுள்ளது என்பதை அறியமுடியும். கலைப் பண்பாட்டிலும் நடராசர் பெற்றிருந்த இடத்தையும் அறிய இவ்வாய்வு பயன்படும்.

சென்னை-2 **முனைவர் மு, அ. மாணிக்கவேலு**

03-07-1994



## சுருக்க விளக்கப் பட்டியல்

| | | |
|---|---|---|
| ஆ. இ. | — | ஆண்டு இல்லை |
| சூ. | — | சூத்திரம் |
| தொகு. | — | தொகுப்பாசிரியர் |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| பதி. | — | பதிப்பாசிரியர் |
| பதி.இ. | — | பதிப்பு இல்லை |
| பா. | — | பாடல் |
| மு.கு.க. | — | முற்குறிப்பிட்ட கட்டுரை |
| மு.கு.நூ. | — | முற்குறிப்பிட்ட நூல் |
| மொ.பெ. | — | மொழி பெயர்ப்பாளர் |
| வெ.இ. | — | வெளியீடு இல்லை |
| A.R.E | — | Annual Report on Indian Epigraphy |
| D.E.D. | — | Dravidian Etymological Dictionary |
| Eds. | — | Editors |
| Op. Cit. | — | Opera citato |
| p. | — | Page |
| pp. | — | Pages |
| pt. | — | Part |
| S.I.I. | — | South Indian Inscriptions |
| Vol. | — | Volume |

## இயல் 1

# நடராசர் வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்

இந்தியா முழுவதும் சிவவழிபாடு பரவலாகக் காணப்படுகிறது. இவ்வழிபாடு, தமிழகத்தில் தலைசிறந்து விளங்குகிறது. இவ்வழிபாட்டில் தனிப்பெருந்தெய்வமாகத் திகழ்பவன் சிவபெருமான். இத்தகைய சிவனை, இலிங்க வடிவில் வழிபடும் வழக்கம் உலகம் முழுவதும் பரவி இருந்ததை ந.சி. கந்தையா பிள்ளை தம் நூலில் விளக்கியுள்ளார்.[1] மேலும், சிந்துவெளியில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில் பல சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன.[2] தமிழகத்திலும் குடிமல்லம், களத்தூர், குடுமியான் மலை ஆகிய இடங்களில் கிடைத்துள்ள இலிங்கங்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று சி. சத்திய மூர்த்தி குறிப்பிடுகிறார்.[3] கிடைத்திருக்கும் இலிங்கங்களைக் கொண்டு சிவவழிபாடு தமிழகத்தில் பண்டுதொட்டு இருந்து வந்திருக்கின்றது என்று கூறமுடியும். இவ்வழிபாடு எப்படி நடைபெற்றது என்பதுதான் ஆய்விற்குரியது. இதன்மூலம், தமிழகத்தில் சிவவழிபாடு காலந்தோறும் இருந்து வந்துள்ளதை அறிய முடிகிறது.

சிவபெருமானின் தோற்றம் பற்றிய ஆய்வு இங்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. அவனுடைய இருபத்தைந்து உருவத் திருமேனிகளாவன: 'நடராசர், சந்திரசேகரர், உமாமகேசர், ரிஷபாரூடர், கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, ஜலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப் பிரதர், கஜமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர்' என்பனவாகும். அவனுடைய இருபத்தைந்து உருவத்

திருமேனிகளில் முதன்மையானது நடராசர் திருமேனி. அத்தகைய திருமேனியின் தோற்றமும் வளர்ச்சியுமே இங்கு ஆராயப்படுகிறது. இத்திருமேனிகளின் மொத்த வடிவமான சிவபெருமான் சங்க இலக்கியங்களில் எப்படிச் சுட்டப்படுகிறான் என்பது முதலில் விளக்கப்படுகிறது.

## இலக்கியம் காட்டும் சிவன்

சங்க இலக்கியங்களில் சிவனுடைய உருவ அமைப்பு, பெயர்கள் மட்டுமே சுட்டப்பட்டுள்ளன. சங்கப்பாடல்களில் சிவ பெருமானைப்பற்றிப் பின்வரும் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஆலமர் கடவுள், ஆலமர் செல்வன்,[4] நீலமணி மிடற்றன்,[5] முக்கட்செல்வன்,[6] முக்கண்ணான்,[7] முதுமுதல்வன்,[8] ஆகியவை சிறப்புடையன. மேலும், அப்பாடல்களில் சிவபெருமானின் உருவ அமைப்பு சுட்டப்பட்டுள்ளது. அவன் தாழ்ந்த—நீண்ட சடையுடையவன்[9]; கொன்றை மாலையைச் சூடியவன்[10]; பிறைச்சந்திரனை அணிந்தவன்[11]; கங்கையைத் தாங்கியவன்[12]; வேதத்தை விளக்கியவன்[13]; மழுப்படைக் கொண்டவன்[14]; எட்டுக் கைகளை உடையவன்[15]; புலித்தோலைப் போர்த்தியவன்;[16] உமாதேவிக்கு ஒரு பாதியைப் பகிர்ந்தளித்தவன்[17]; ஆனேற்றைக் (ரிஷபம்) கொடியாகவும், வாகனமாகவும் பெற்றவன்[18] என்பன போன்ற பல செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. ஆனால், அவற்றுள், 'சிவன்' எனும் பெயர் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

திருமந்திரத்தில்தான் முதன்முதலில் 'சிவன்' எனும் சொல் இடம் பெற்றுள்ளது.[19] இந்நூலுக்கு முந்தியவையான மணிமேகலையிலும்[20] காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதியிலும்[21] 'ஈசன்' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. 'பிறவா யாக்கைப் பெரியோனாகக் கருதப்பட்ட சிவனுக்குக் கோயில்கள் இருந்ததைச் சிலப்பதிகாரம் செப்புகிறது[22] மணிமேகலையிலும் இச்செய்தி இடம் பெற்றுள்ளது.[23]

சிவபெருமானுடைய வழிபாட்டினைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை. ஆனால், சிவபெருமானின் பல்வேறு கோலங்களான—மூர்த்தங்களான ஆலமர் செல்வன், உமையொருபாகன் பற்றிய செய்திகளைச் சங்க காலத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள்[24] பல உள்ளன. இவையல்லாமல் 'ஆடல் வல்லான்' கோலத்தைப் பற்றிய கதைகளான கொடுகொட்டி,

பாண்டரங்கம், காபாலம் என்பன சங்ககாலப் பிற்பகுதியில் வழக்கிற்கு வந்துள்ளனவாகத் தெரிகின்றன.[25]

## சிவனின் பல்வகைப் பெயர்கள்

இத்தகைய ஆடல் கோலத்தில் அருள்பாலிக்கும் சிவபெருமானுக்குப் பலவகையான பெயர்கள் இன்று வழங்கப்படுகின்றன. அவை: அம்பலவாணன், ஆடல்வல்லான், கூத்தப்பெருமான், சபாபதி, நடராசர், நடேசன், நிருத்தன் என்பனவாகும். இவற்றுள் காலத்தால் மிகவும் பழைய பெயராகத் தோன்றுவது 'ஆடல் வல்லான்' என்பதாகும். இதற்கடுத்துச் சிறப்புப்பெற்று விளங்குவதுகூத்தப்பெருமான் என்றபெயராகும். ஆடல்வல்லான், கூத்தப்பெருமான் ஆகியவற்றின் வடமொழியாக்கமே நடராசர் என்பது. நடராசர் என்ற பெயரோ பிற்காலத்தில் சிறப்புப்பெற்று வளர்ந்த ஒன்றாகும். எனவே, 'ஆடல்' என்ற சொல் முதலில் விளக்கப்படுகிறது.

## ஆடல்: விளக்கம்

'ஆடல்' என்ற சொல் 'ஆடு' என்ற பகுதியில் இருந்து தோன்றியது என்றும், அது அசைகை, கூத்து, துன்பம், செய்கை, விளையாட்டு, புணர்ச்சி, சொல்லுகை, ஸ்நாநம் என்ற பொருள்களைக் குறிக்கிறது என்றும் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது.[26] 'ஆள்' என்ற பகுதியில் இருந்து 'ஆடு' என்ற வினை தோன்றி, அதனுடன் 'தல்' என்ற துணைவினை சேர்ந்து 'ஆடுதல்' என்ற சொல் உருவானது. அது அசைதல், உலாவுதல், சுற்றுதல், சுற்றி வருதல், நடஞ் செய்தல், கூத்தாடுதல், நாடகம் நடித்தல், விளையாடுதல், அலைதல், சண்டையில் திரிதல், அளவிற்கு மிஞ்சி அதிகாரஞ் செலுத்துதல், ஒருதுணைவினை ஆகிய பொருள்களைச் சுட்டுகிறது என்று ஞா. தேவநேயன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[27] இந்த 'ஆடு' என்ற சொல் திராவிட மொழிச் சொல் என்பதும் இங்கே கருதத்தக்கது.[28]

ஆடல் என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதிக்கு அடுத்துத் தோன்றிய மதுரைத் தமிழ்ப் பேரகராதி மேலும் பல பொருள்களை இணைத்துக் கூறுகிறது. அவை குளித்தல், நயச்சொல், பொருதல், வெற்றி, நட்புரை, வீரம், வார்த்தை, விசயம், பரதநாட்டியம், நடிப்பு, திமிர்தல், ஆடல், ஆளுதல் என்பன.[29] இதே பொருள்களே கழகத் தமிழ்

அகராதியிலும்,[30] செந்தமிழ் அகராதியிலும்[31] சுட்டப் பட்டுள்ளன.

மேற்கண்டவற்றில் இருந்து ஆடல் என்பது ஒரு பொதுப் பெயராக,பலவகைப் பொருள்களில் வழங்கிவந்துள்ளதை அறிய முடிகிறது. அவற்றுள் இறைவனின் ஆடலைக் குறிக்கும் கூத்து, நடஞ்செய்தல் என்ற பொருள்களே இங்குக் கருதப்படுகின்றன. ''ஆட்டம் என்பது கூத்தின் அடிவாரம்மே''[32] என்பது கூத்த நூலின் கருத்து. அதாவது கூத்தின் ஒரு கூறே ஆடல், மேலும், கூத்தோடு இணைத்தே ஆடல் என்ற சொல் வழங்கப்படுகிறது. இதனை, 'கூத்தாடல்' என்ற சொல்லாட்சி புலப்படுத்துகிறது. இதன்மூலம் கூத்தும் ஆடலும் ஒரே பொருள் கொண்டவையாக விளங்கியதை அறியமுடிகிறது.

## சொல்லாட்சி

பதிற்றுப்பத்தில் 'ஆடல்வல்லான்' என்ற தொடர் முதன் முதலில் ஆளப்பட்டுள்ளது. இதனை, ''கோடியர் முழவின் முன்னர் ஆடல்/வல்லானல்லன்''[33] என்ற அடிகள் சுட்டு கின்றன. இங்கு, இறைவனைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் படவில்லை. கூத்தரது ஒலிக்கின்ற முழவின் முன்னர் ஆடுதலை வல்லன் அல்லன் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.[34] இதன் மூலம், ஆடுவதில் சிறந்து விளங்குபவனுக்கு 'ஆடல்வல்லான்' என்றபெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனா கிறது. மேலும், ஆடுதலில் சிறந்து விளங்கும் கூத்தர்களும் அக் காலத்தில் இருந்தமையைச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காண முடிகிறது. இங்கு இறைவனின் ஆடல்கள் மட்டுமே ஆராயப் படுகின்றன.

## மூவகை ஆடல்

சிவபெருமானின் ஆடல் கோலத்தைப் பற்றிய கதைகள் சங்ககாலப் பிற்பகுதியில் வழக்கிற்கு வந்தன என்று முன்னரே கூறப்பட்டது. அதனை, கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடல் தெரிவிக்கிறது.

> ''நின் கையில் உள்ள பறை பல ஒலிகளை எழுப்பு கிறது. நீ பல வடிவங்களைத் தாங்கி கொடிதாகிய கொட்டி என்னும் கூத்தை ஆடுகின்றாய். அப்பொழுது கொடியையொத்த இடையினையுடைய அம்மை, தாளம் முடிந்துவிடும் காலத்திற்குரிய சீரைத் தரு கிறாள்.

முப்புரங்களை வென்று, அந்த வலியாலே அவர்கள் வெந்து வீழ்ந்த நீற்றை அணிந்து பாண்டரங்கமாகிய கூத்தை நீ ஆடும் காலத்து, மூங்கிலை ஒத்த மெல்லிய அழகிய தோள்களை உடையவளும், வண்டுகள் ஒலிக்கும் கூந்தலை உடையவளுமாகிய அம்மை தாளத்தின் இடை நிகழும் தூக்கைத் தருகிறாள்.

கொலைத் தொழிலை உடைய புலியைக் கொன்று அதன் தோலை உடுத்துக் கொன்றைப் பூவால் செய்த மாலை தோளிலே அசைய, அயன் தலையை அகங் கையிலே கொண்டு காபாலம் என்ற கூத்தை நீ ஆடுகின்ற பொழுது, முல்லையை ஒத்த பற்களை உடையவளாகிய அம்மை, தாளத்தின் முதல் எடுக்கும் காலத்திற்குரிய பாணியைத் தருகிறாள்''.[35]

என்பது அப்பாடற் பொருள். இதன்மூலம், இறைவன் ஆடும் பொழுது தாளத்திற்குப் பாணி, தூக்கு, சீர் ஆகிய மூன்றும் தேவையெனினும், ஒவ்வோர் ஆடலுக்கும் ஒவ்வொன்று சிறப்பு வகையில் கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. மேற்கண்ட கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடல் குறிப்பிடும் ஆடல் களையே பிங்கல நிகண்டும் சுட்டுகிறது.[36]

இம்மூவகை ஆடல்களைத் திருமந்திரப் பாடலும் குறிப் பிடுகிறது.[37] அப்பாடலில் இடம் பெற்றுள்ள கோடு என்பது காபாலக் கூத்தைக் குறிப்பதாக உரையாசிரியர் கூறியுள்ளார். மேலும், அவர், ஐவகைச் சங்காரத்துடன் காளிக்கூத்து, முனிக் கூத்து, இன்பக்கூத்துங் கூடிய எட்டு, ஐந்தொழிற் கூத்து, அறுசமயக் கூத்து ஆக கூத்துகள் இருபத்திரண்டு என்கிறார்[38] இதன்மூலம் காலந்தோறும் கூத்துகள் வளர்ச்சியுற்று இருக்க வேண்டும் என்பது புலனாகிறது

இறைவன் சங்கார காலத்தில் ஆடுபவன்; உயிர்கள் மாட்டுக் கொண்ட கருணையால் கட்புலனாம் வடிவு கொண்டு அருள் செய்ய வந்துள்ளான் என்று அ.ச. ஞானசம்பந்தன் கலித் தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலுக்குப் புதிய விளக்கத்தைத் தருகிறார்[39] இவ்விளக்கம், ஆடல்வல்லானுக்கு இன்று கூறப்படும் தத்துவக் கருத்திற்குப் பொருத்தமாகக் காணப்படுகிறது.

**கொடு கொட்டி**

இறைவன் அவுணர்களை அழித்து ஆடியதே கொடுகொட்டி யாகும். இவ்வாடலை அம்மை அச்சமும் வியப்பும் கொண்டு

நோக்கினாள் என்பதும், காத்தல் பொருளைக் கொண்ட தெய்வத்துதி இது என்பதும் நச்சினார்க்கினியர் காட்டும் பழம் பாடலால் புலனாகிறது.[40] கலித்தொகைக்குப்பின் சிலப்பதி காரத்தில்தான் இவ்வாடலைப் பற்றிய குறிப்பு இடம் பெற் றுள்ளது.

சிலப்பதிகாரம் பதினொரு வகையான ஆடல்களைச் சுட்டு கிறது[41] அவற்றுள் இறைவன் ஆடியவை கொடுகொட்டி, பாண்டரங்கம் என்பன. கொடுகொட்டியாவது, சிவபெருமான் திரிபுரம் எரியச்செய்தபோது, உமாதேவியாரை ஒருபக்கம் கொண்டு கைக்கொட்டி ஆடிய கூத்தாகும். இக்கூத்தின் இயல்பை நடுகற்காதையில் கூத்தச்சாக்கையர் ஆடுவதாக வரும் பகுதி நன்கு விளக்குகிறது.

> ''இறைவன் ஆட, அவரணிந்த சிலம்பு ஒலிக்கிறது; கையிலுள்ள துடி அடிபடுகிறது, கண்கள் ஆயிரக்கணக் கான கருத்துக்களை அறிவிக்கின்றன; செஞ்சடை நான்கு திசைகளிலும் பரவிச் சென்று ஆடுகின்றது; அம்மை ஆடாமல் அசையாமல் இறைவனுடைய ஆடலைக் காண்கிறாள்''.[42]

இவ்வாடலை வெற்றிப் பெற்ற சேரமன்னன் முன் சாக்கை யனும், அவன் மனைவியும் இறைவன் இறைவியாக வேடந்தாங்கி ஆடிக்காட்டினர் என்பதைச் சிலப்பதிகாரம் தெளிவாக்குகிறது.

கொடுகொட்டி என்பது கொடுங்கொட்டி, கொட்டிச்சேதம் எனவும் வழங்கப்பெறுகிறது. இதற்கு உறுப்பு நான்கு என்று சிலப்பதிகார மேற்கோள் பாடலடி தெரிவிக்கிறது.[43] இவ்வாட லைப் பற்றிய குறிப்புகள் தேவாரப் பாடல்களிலும் இடம் பெற் றுள்ளன. இதனை, 'கொட்டிசைந்த ஆடலாய்'[44] எனச் சம்பந்தர் தேவாரமும், 'குண்டைப் பூதங் கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட'[45] எனத் திருநாவுக்கரசர் தேவார மும் 'கொடுகொட்டி காலர் கழலரோ'[46] எனச் சுந்தரர் தேவாரமும் குறிப்பிடுகின்றன.

**பாண்டரங்கம்**

கலித்தொகை குறிப்பிடும் மற்றோர் ஆடல் பாண்டரங்க மாகும். இது பண்டரங்கமெனை விகாரப்பட்டும் வழங்கப்படு கிறது. இறைவன் திரிபுரம் எரித்த காலத்து அவுணர்கள் கூறு கூறான தத்தம் கொடியுடனும் படையுடனும் வேற்று வடிவம்

கொண்டு விண்மிசைப் பரவி இருந்தனர். அப்போது வென்ற தேர்முன் நின்று, திசைகள் நடுங்க, சுவையும் குறிப்பும் குறை யாமல் உயிர்கள் அங்கங்கு இருந்தாட, மைந்தரும் மகளிரும் தம் நிலை அழிய, ஊழிக்காலக் காற்றைப் போலச் சுழன்று இறைவன் இவ்வாடலை ஆடினான் என்பதை நச்சினார்க்கினியரின் மேற் கோள் பாடல் புலப்படுத்துகிறது.[47]

இறைவன் தேர்முன் ஆடியதை, 'தேர்முன் நின்ற திசைமுகன் காணப் பாரதி ஆடிய வியன் பாண்டரங்கமும்'[48] என்ற சிலப்பதி கார அடிகள் செப்புகின்றன. இதன் மூலம் இறைவன் வெண்ணீற்றை அணிந்து தேர்முன் நின்ற நான்முகன் காணப் பாரதி (பைரவி) வடிவில் தோன்றி ஆடினான் என்பதை அறிய முடிகிறது. இவ்வாடலுக்கு உறுப்புகள் ஆறு என்று சிலப்பதிகார மேற்கோள் பாடலடி பறைசாற்றுகிறது.[49]

பாண்டரங்கக் கூத்தாடும் இறைவனைத் தம் தேவாரப் பாடல்களில், 'பண்டரங்கர்'[50] எனச் சம்பந்தரும், 'பண்டரங்கன் கண்டாய்'[51] எனத் திருநாவுக்கரசரும், 'பண்டரங்கன்'[52] எனச் சுந்தரரும் சுட்டியுள்ளனர். இதன்மூலம் தேவாரக் காலத்தில் 'பாண்டரங்கம்', 'பண்டரங்கம்' என்றே அழைக்கப்பட்டது என்பதை அறிய முடிகிறது.

**காபாலம்**

இறைவன் ஆடிய மற்றோர் ஆடல் காபாலம் என்பது. இறைவன் புலித்தோல் அணிந்து, கொன்றை மாலையைத் தலையில் சூடி, அயன் தலையைக் கையிலே ஏந்தி, காபாலம் என்ற கூத்தை ஆடுகிறான். இக்கூத்தினை ஆடும்போது இறைவி பாணியை முறையாகத் தருகின்றாள் என்பது முன்னரே விளக்கப் பட்டது. இக்காபாலம் என்பது பிற்காலத்தில் கபாலம் என்று மருவி வழங்கப்படுகிறது.

சிலப்பதிகாரத்தில் காபாலக் கூத்தைப் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. திருமந்திரத்தில் கோடு என்ற பெயரில் வழங்கப்படுகிறது என்பது முன்னரே கூறப்பட்டது. கபாலக் கூத்தைப் பற்றிய குறிப்பு, தேவாரப் பாடல்களிலும் இடம்பெற் றுள்ளது. இதனை, 'கள்ள மதித்த கபாலங் கைதனிலே மிக ஏந்தி'[53] எனச் சம்பந்தரும், 'கபாலங்கை மான்மறி இட்ட மாய்'[54] எனத் திருநாவுக்கரசரும், 'கணங்கள் சூழ கபாலம் ஏந்தி'[55] எனச் சுந்தரரும் தம் தேவாரப் பாடல்களில் தெரிவித் துள்ளனர்.

காபாலம் என்பது மண்டை ஓடுகளைக் குறிக்கும். மண்டை ஓடுகள் சுடுகாட்டில்தான் நிறைய காணப்படும். எனவே, இவ்வாடல் சுடுகாட்டில்தான் நிகழ்ந்திருக்க வேண்டும். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த காரைக்காலம்மையார் தம் பாடல்களில் இறைவன் சுடுகாட்டில் ஆடுவதாகவே குறித்துள்ளார். மேலும், தேவார, திருவாசகங்களில் இறைவன் சுடுகாட்டில் ஆடுவதைப் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இதன் மூலம் காபாலக் கூத்தே, இறைவன் ஆடும் இடத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

இத்தகைய ஆடல்களைச் சிவபெருமான் ஆடிவந்ததாலேயே அவனைத் தமிழ்மக்கள் 'ஆடல்வல்லான்' என்று சிறப்புப் பெயரிட்டு அழைத்து மகிழ்ந்தனர். ஆடல்வல்லான் என்ற சொல்லாட்சி இலக்கியத்திலும், கல்வெட்டிலும் இடம்பெற்றுள்ளமை, இக்கருதுகோளுக்கு மேலும் வலுவூட்டுவதாய் அமைந்துள்ளது.

### இலக்கியத்தில் ஆடல்வல்லான்

தமிழ்மக்கள் சிவபெருமானை இயக்க நிலையில், 'ஆடல் வல்லான்' என்றே அழைத்தனர். எனவேதான், காரைக் காலம்மையார், 'அறவா நீ ஆடும் போதுன் அடியின் கீழ் இருக்க'[56] என்று வேண்டினார். 'அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்தவாறே'[57] எனத் திருநாவுக்கரசரும், 'அத்தா உன்தன் ஆடல் காண அணைவதும் என்று கொலோ'[58] எனக் கண்டராதித்தரும் பாடிப் பரவுகின்றனர்.

மேலும், 'ஆடவல்ல அடிகள்',[59] 'மாநடம் ஆட வல்லவனே'[60] எனத் திருஞானசம்பந்தரும், 'நடமாடவல்லான் தன்னை,'[61] 'அந்தியும் சந்தியும் ஆடவல்லார்'[62] எனத் திருநாவுக்கரசரும், 'நடமாடவல்லாய்',[63] 'ஆடவல்லார்'[64] எனச் சுந்தரரும், 'அரங்காடவல்லார் அவரே அழகியர்'[65] எனச் சேக்கிழாரும் இறைவனை ஆடல்வல்லானாகவே கண்டனர்.

திருமந்திரத்தில் 'ஆடவல்லார் அவர் பேறு எதுவாகுமே' என்ற அடி இடம்பெற்றுள்ளது. இறைவன் குருவாக வந்து கூறும் குறியைக் கண்டு நாடவும் பாடவும் ஆடவும் வல்லார் தேடுதற்குரிய அளவில்லாத திருவடி இன்பத்தினைப் பெறுவர் என்பது மேற்கண்ட அடி இடம்பெற்றுள்ள பாடலின் கருத்தாகும்[66]

## கல்வெட்டுக்காட்டும் ஆடல்வல்லான்

தேவாரங்களைத் தொகுக்கச் செய்தவன் முதலாம் இராச ராச சோழன். எனவே, அவ்விலக்கியங்களில் அவனுக்குப் பயிற்சி ஏற்பட்டிருக்கிறது. அதன் விளைவே 'ஆடல்வல்லான்' என்ற சொற்றொடர் அவன் மனத்தைக் கவர்ந்திருக்கிறது. அது அவன், தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலில் அமைத்த கூத்தப்பெருமான் திருமேனிக்கு 'ஆடல்வல்லான்' என்று பெயரிடுமளவிற்கு வளர்ச்சி யுற்றிருக்கிறது.

மேலும், அவன் காலத்துக் கல்வெட்டு, ஆடவல்லார் திரு மேனிக்கு வழங்கிய நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது.[67] அக்கல் வெட்டு அவனுடைய இருபத்திரண்டாம் ஆட்சியாண்டிற்குரியது (985 + 22 = கி.பி. 1007). அவனுடைய இருபத்தெட்டாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டும் அதே செய்தியைக் கூறுகிறது (985 + 28 = கி. பி. 1013).[68] முதலாம் இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டும் ஆட வல்லார், நம்பிராட்டியார் திருமேனிக்கு வழங்கிய நிவந்தத்தைச் சுட்டுகிறது.[69] அது அவனுடைய பதினெட்டாம் ஆட்சியாண் டைச் சார்ந்தது (1012 + 18 = கி.பி. 1030). அவனுடைய முப்பத்தோராம் ஆட்சியாண்டு (1012 + 31 = கி.பி. 1043)க் கல்வெட்டும் ஆடவல்லார் திருமேனிக்கு வழங்கிய நிவந்தத்தைக் குறிக்கிறது.[70]

முதலாம் இராசாதிராசன் கல்வெட்டும் ஆடவல்லான் திருமே னிக்கு அவன்வழங்கிய நிவந்தத்தைச் சுட்டுகிறது.[71] மாறவர்மன் குலசேகர பாண்டியனின் கல்வெட்டு ஒன்று ஆடவல்ல நாயனா ருக்கு வழங்கிய நிவந்தத்தைக் குறிக்கிறது.[72] அது அவனுடைய இரண்டாவது ஆட்சியாண்டில் வழங்கப்பட்டது (1268 + 2 = கி.பி. 1270). சோழர் காலத்தில் நெல் அளக்கப் பயன்பட்ட மரக்கால் 'ஆடவல்லான்' என்ற பெயரால் வழங்கப்பட்டது.[73] மேலும், 'ஆடவல்லான்' என்னும் நிறையால் பொன், வெள்ளி போன்றவை அளக்கப்பட்டன.[74] இதன்மூலம் சோழர் காலத்தில் 'ஆடவல்லான்' என்ற பெயர் சிறப்பான இடத்தைப் பெற்றி ருந்தது என்பதை அறியமுடிகிறது.

இவ்வாறு, சிவபெருமானை, ஆடல்வல்லானாகக் கண்ட தமிழ் மக்கள், அவன் ஆடிய வேறுபல—கூத்துகளையும் ஆடல் வகைகளையும் இனங்கண்டு, அவற்றை இலக்கியத்தில் சுட்டி யுள்ளனர்.

## பல்வகை ஆடல்கள்

தேவாரங்களில் இறைவனின் ஆடல்கள்தான் சுட்டப்பட்டுள்ளன. அவற்றிற்குப் பெயர் ஒன்றும் கூறப்படவில்லை. ஆனால், காரைக்காலம்மையார் தம் பாடல்களில், 'அந்தி நிருத்தம் அனல் கை ஏந்தி அழகன் ஆடுமே'[75] என்று குறித்துள்ளார். அந்தி என்பது சந்தி என்று வடமொழியில் வழங்கப்படுகிறது. மேலும், அந்தி என்பது மாலை நேரத்தைக் குறிக்கும். எனவே, அக்காலத்தில் ஆடப்பட்ட ஆடல் 'சந்தியா தாண்டவம்' என்று வடமொழியிலும் 'அந்தி நிருத்தம்' என்று தமிழிலும் அழைக்கப்பட்டிருக்கிறது.

திருநாவுக்கரசரும் தம் பாடல்களில் 'சதுரநடம் ஆட்டுகந்த சைவர்'[76] என்றும், 'சந்திக்கண் நடமாடுஞ் சதுரனை'[77] என்றும் ஆடல்வல்லானைச் சுட்டியுள்ளார். மாணிக்கவாசகரும் 'சதுரப் பெருமான்'[78] என்றும், 'சதுரன்'[79] என்றும் தம் பாடல்களில் குறித்துள்ளார். இந்தச் சதுரநடம் என்பதே இன்று வழக்கிலுள்ள சதுர தாண்டவத்தைக் குறிக்கிறது. சதுரப்பெருமான் என்பது சதுரநடம் ஆடும் இறைவனைச் சுட்டுகிறது. அடுத்து, பெயர் குறிக்கப்படாத ஆடல்கள் இங்கு ஆராயப்படுகின்றன.

## சுடுகாட்டில் ஆடல்

காபாலக் கூத்து சுடுகாட்டில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது முன்னரே கூறப்பட்டது. அத்தகைய சுடுகாட்டில் இறைவனின் ஆடலை அருளாளர்கள் பாடிய விதம் இங்கே விளக்கப்படுகிறது.

கொங்கை சுருங்கி, நரம்புகள் புடைத்து, உருண்ட கண்ணுடன், குழிவிழுந்த வயிற்றுடன். நீண்ட கணுக்காலை உடைய பெண் பேய், சுடுகாட்டில் தங்கியுள்ளது. அது சினக்குறிப்புத் தோன்ற ஒலிக்கிறது. அத்தகைய காட்டில் தாழ்ந்த சடைகள் எட்டுத்திசையும் பரவ, அங்கம் குளிர்ந்து எங்கள் அப்பன் ஆடுகிறான். அவன் ஆடுமிடம் திருவாலங்காடே என்று காரைக்காலம்மையார் தம் பாடல்களில், சுடுகாட்டில் இறைவன் ஆடும் ஆடலைச் சுட்டுகிறார்.[80]

சம்பந்தர், பழையனூர் ஆலங்காட்டில் இரவில், பேயோடு சுடலையைக் கைக்கொண்டு இறைவன் ஆடும் ஆட்டத்தைக் காண்கிறார்.[81] மேலும், அவர் பேய்கள் பாடப், பெரு நட

மாடிய பெருமானைத் திருநெய்த்தானத்தில் வணங்கி மகிழ்கிறார்.[82] காட்டில் நின்றாடும் கருத்துடையவராகவும்,[83] மயானத்தில் ஆடுவதில் மகிழ்ச்சி உடையவராகவும்[84] இறைவன் விளங்கியதைத் திருநாவுக்கரசர் தம் பாடல்களில் தெரிவித்துள்ளார். சுடுகாட்டில் பேயோடு ஆடல் புரிபவனாக இறைவனைக் காண்கிறார் சுந்தரர்.[85] பேய்களோடு காட்டிடை நாடகமாடுபவராக மாணிக்கவாசகர் இறைவனைக் காணுகின்றார்.[86]

**இருளில் ஆடல்**

நள்ளிருளில் நடமாடிய நம்பன் உறைவிடமாகத் திருநெய்த்தானத்தைக் கருதுகிறார் சம்பந்தர்.[87] அவர் திருநாரையூர் இறைவனை, நள்ளிருள் நட்டமாடுபவராக போற்றுகிறார்.[88] சுட்டநீற்றை உடலில் பூசி, நள்ளிருளில் பேயோடே சுடலையில் திருநெய்த்தானத்தார் ஆடல் புரிவதாகக் கூறுகிறார் நாவுக்கரசர்[89] மேலும் அவர், துஞ்சிருளில் ஆடுவதற்கு விரும்புவனே என்று இறைவனைப் போற்றுகிறார்.[90]

பேய், பூதங்களோடு நள்ளிருளில் நட்டமாடுபவராக திருப்பூவணநாதரைக் காண்கிறார் சுந்தரர்.[91] அவர், தசையற்ற என்புத் தலையைச் சடைக்கண் அணிந்த செல்வன், நள்ளிருளில் பேய்கள் சூழ, இருள் சூழ்ந்த காட்டில் ஆடுவதாகக் கூறுகிறார்.[92] நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனாகத் தில்லைக் கூத்தனைக் காண்கிறார் மாணிக்கவாசகர்.[93] 'கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க'[94] என்று அவர் இறைவனை வாழ்த்துகிறார். மூன்று உலகங்களிலும் மிகுந்த இருளில் திருநடனம் செய்பவர் ஈசன் என்கிறார் கருவூர்த் தேவர்.[95] தூங்கிருளில் நடுநல்யாமத்தே ஆடுபவர் உறையுமிடம் திருவிடை மருதூர் என்று அவர் கூறுகிறார்.[96]

சுடுகாட்டில் ஆடும் ஆடலும், இருளில் ஆடும் ஆடலும் சங்கார தாண்டவம் எனும் ஊழிக்கூத்தாக இருக்க வேண்டும். சங்காரம் என்பது அழித்தல் தொழிலைக் குறிக்கும். எனவே, மேற்கண்ட ஆடல்கள் இரண்டையும் இணைத்துப் பிற்காலத்தில் சங்கார தாண்டவம் என்ற பெயரை அதற்கு வழங்கியிருக்க வேண்டும்.

**அந்தியில் ஆடல்**

அந்தி என்பது மாலை நேரத்தைக் குறிக்கும். இதனை, 'அந்தி நட்டம் ஆடும் அடிகளே'[97] எனச் சம்பந்தரும், 'அந்தியும்

சந்தியும் ஆடவல்லார்'[98] எனத் திருநாவுக்கரசரும் தம் பாடல்களில் குறித்துள்ளனர். காரைக்காலம்மையார் 'அந்தி நிருத்தம்' என்று தம் பாடலில் குறிப்பிட்டது முன்னரே கூறப்பட்டது. மேற்கண்ட குறிப்புகளைக் கண்டு பிற்காலத்தில் இதற்கு ஒரு புராணக் கதையைக் கற்பித்திருக்க வேண்டும். இப்புராணக் கதை இரண்டாம் இயலில் விளக்கப்படுகிறது. அதுவே இன்று சந்தியா தாண்டவம் என்றும் பிரதோஷ நடனம் என்றும் அழைக்கப்படுகிறது.

**உமையஞ்ச ஆடல்**

பேய்கள் கூடிப் பிணங்களைத் தின்ன, அச்சந்தரும் பெருங் காட்டில் சிவபெருமான் ஆட, மலையான் மகளாகிய பார்வதி அச்சத்துடன் நோக்குவதாகக் காரைக்காலம்மையார் கூறுகிறார்.[99] 'அஞ்சுரும்பார் குழலரிவை அஞ்சவே வெஞ்சுரந்தனில் விளையாடலென்கொலோ?'[100] என்று வினவுகிறார் சம்பந்தர். 'மருண்டு மாமலையான் மகள் தொழ ஆடுங்கூத்தன்'[101] என்கிறார் திருவாலியமுதனார்.

உமை அஞ்ச ஆடும் ஆடல், உமாதாண்டவமாக இருக்கலாம். ஏனெனில், ஸ்ரீதத்துவநிதி இறைவன் கால் மாறியாடியதை உமா தாண்டவம் என்று சுட்டுகிறது.[102] வழக்கமாக ஆடும் ஆடலிலிருந்து மாறுபட்ட, இறைவனின் ஆடலைக் கண்ட உமை அஞ்சி நடுங்குகிறாள். எனவே, இவ்வாடல், பிற்காலத்தில் உமாதாண்டவம் என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

**உமை காண ஆடல்**

'ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடும்'[103] எனத் திருமூலரும்; 'காடரங்காவுமை காண அண்டத்திமையோர் தொழ நாடகமாடியை'[104] எனச் சம்பந்தரும், 'இவராடுமாறும், இவள் காணுமாறும் இதுதான் இவர்க்கோரியல்பே'[105] என நாவுக்கரசரும், 'கொடியிடை உமையவள் காண ஆடிய அழகா'[106] எனச் சுந்தரரும், 'மலைமகள் காண நட்டமாடிய நம்ப'[107] என நக்கீரரும் தம் பாடல்களில் உமையவள் காண ஆடிய ஆடலைப் படம் பிடித்துக் காட்டியுள்ளனர்.

உமை காணும் இவ்வாடலே பிற்காலத்தில் கௌரிதாண்டவம் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். பிற்காலத்தில் உமை என்ற பொதுப்பெயர் நீக்கப்பட்டு, கௌரி என்ற சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், கௌரிக்காக

இறைவன் இவ்வாடலை ஆடினான் என்ற கதையையும் கற்பித்திருக்க வேண்டும். இது, மேலும் ஆய்விற்குரியது.

### காளி காண ஆடல்

காளி காண இறைவன் ஆடியதைப் பலர் தம் பாடல்களில் புலப்படுத்தியுள்ளனர். இதனை, 'காளிமுன் காண, கானிடை நடஞ்செய்த கருத்தர்'[108] எனச் சம்பந்தரும். 'ஆடினார் காளி காண ஆலங்காட்டடிகளாரே'[109] என நாவுக்கரசரும், 'உமையொடு காளிக்கருளிய திருமுகத்தழகுறு சிறுநகை இறைவன்'[110] என மாணிக்கவாசகரும் தம் பாடல்களில் சுட்டியுள்ளனர். சுந்தரரோ 'காளியின்கோபம்குறைய ஆடிய கூத்துடையானே'[111] என்று தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

காளி காண ஆடிய ஆடலே, ஊர்த்துவத் தாண்டவமாகும். ஏனெனில், 'அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன் இடம் திருவாலங்காடே'[112] என்று காரைக்காலம்மையார் தம் பாடல்களில் குறித்துள்ளார். 'அண்டமுற நிமிர்ந்தருளின நாயனார்' எனத் திருவாலங்காட்டுக் கல்வெட்டும் கூறுகிறது.[113] இதனைக் கண்டு பிற்காலத்தில் காளிக்கும் சிவபெருமானுக்கும் போட்டி நடைபெற்றது. அப்போட்டியில் சிவபெருமான் காலைத் தூக்க, காளி தோற்றாள் என்ற கதையைக் கற்பித்திருக்க வேண்டும். எனவே காளி காண ஆடிய ஆடலே ஊர்த்துவத் தாண்டவமாகும்.

### பிற ஆடல்கள்

மேற்கண்ட ஆடல்கள் அல்லாமல், சம்பந்தர் பல்வேறு தலங்களில் இறைவன் ஆடிய ஆடல்களைத் தம் பாடல்களில் குறித்துள்ளார்.[114] மேலும், சிவபெருமானின் வீரச் செயல்களான கரியை உரித்தல், காளியை வெல்லுதல், திரிபுரம் எரித்தல், நஞ்சை உண்ணுதல், இராவணனை நெரித்தல் ஆகியவற்றின் பின் இறைவன் ஆடிய ஆடல்களைக் கூறியுள்ளார்.[115]

முயலகன் மீது ஆடிய ஆடல், தாரகனை அழித்தபின் ஆடிய ஆடல், திரிபுரம் எரித்தபின் ஆடிய ஆடல், பல்வேறு தலங்களில் ஆடிய ஆடல் ஆகியவற்றைத் திருநாவுக்கரசர் தம் பாடல்களில் புலப்படுத்தியுள்ளார்.[116] இவையல்லாமல் ஆடல் தரிசனச் சிறப்பையும் அவர்தம் பாடல்களில் எடுத்துரைத்துள்ளார்.[117]

பல்வேறு தலங்களில் புரிந்த ஆடல், மன்மதனை எரித்தபின் நிகழ்த்திய ஆடல் முதலியவற்றைச் சுந்தரர் தம் பாடல்களில் கூறியுள்ளார்.[118] பல தலங்களில் இறைவன் ஆடல் புரிவதை

மாணிக்கவாசகர் தம் பாடல்களில் மொழிந்துள்ளார்.[119] திரு விசைப்பாவில் தில்லையில் ஆடல் புரியும் இறைவனைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.[120] பட்டினத்தாரும் நம்பியாண்டார் நம்பியும் தம் பாடல்களில் தில்லையில் ஆடல் புரியும் ஆடல் வல்லானைப் பற்றிக் கூறியுள்ளனர்.[121] இவ்வாடல்களின் மூலம் இறைவன் 'ஆடல்வல்லானாக'ப் போற்றப்பட்டதை அறிய முடிகிறது. இனி, கூத்தனாக—கூத்தரசனாக ஆடவல்லான் காலந் தோறும் போற்றப்பட்ட விதம் விளக்கப்படுகிறது.

### கூத்து

சங்க காலந்தொட்டே ஆடலோடு இணைந்து கூத்து என்ற சொல் வழங்கப்பட்டிருக்கிறது. இக்கூத்திற்கு வேர்ச்சொல் எது? என்பதை வீ. ப. கா. சுந்தரம் தம் கட்டுரையொன்றில் விளக்கியுள்ளார்.

> ''கூது எனும் பண்டைத் திராவிட வேர்ச்சொல் வடிவமே கூத்து என்பதற்கு வேர்ச்சொல். கூது எனும் வேர்க்கு இணைதல், சேர்தல் எனும் பொருண்மை. இப்பொருண்மையில் கூது எனும் சொல்— 'கூந்து, கூந்தல், கூத்து' எனும் சொற்களாக, நெறிமுறையாக மூக்கொலியும் வல்லொலியும் இடையில் பெற்றுவிடாது, அடிப்படைப் பொருண்மை பூண்டு கிளைத்தன எனக் கொள்ளல் வேண்டும். 'குதி' என்பது முதல் நீண்டால் 'கூத்து' என ஆகிவிட முடியாது''[122]

என்பது அவர் கருத்து. இக்கருத்து, பொருத்தமாகக் காணப்படுகிறது. கூத்தின் ஒரு கூறே குதித்து ஆடுதல். எனவே குதித்தல் அடிப்படையில் கூத்து என்ற சொல் பிறந்திருக்க முடியாது.

### இலக்கியம் காட்டும் கூத்தன்

சங்ககால மக்கள் கூத்துக்கலையில் சிறந்து விளங்கினர். இதனால்,அவர்கள் ஆடுவதில் வல்லவனான 'ஆடல்வல்லானை'க் 'கூத்தன்' என்று அழைத்தனர். அவன் ஆடிய ஆடலைக் 'கூத்து' என்று வழங்கினர். இதன் சிறப்புக் கருதியே, 'கூத்தில் சிறந்தது கூத்தன் கூத்து'[123] என்கிறது கூத்த நூல். இறைவன் ஆடலை—கூத்தை ஆடியதால், கூத்தன் என்று அழைக்கப்பட்டான்.

கூத்துக்கலையில் சிறந்து விளங்கிய கூத்தர்கள் செய்யும் தொழில் அடிப்படையில் பல்வகைப் பெயர்களால் அழைக்கப்பட்டனர். இம்முறையில் சங்ககாலந்தொட்டே கூத்தர்கள்

வாழ்ந்தனர். கோடு என்னும் கருவியை இசைத்து ஆடவல்ல கூத்தராகிய கோடியரும், பாணன் எனும் பாடல் வல்ல ஒரு சாதியினரும், ஏர்க்களத்தேனும். போர்க்களத்தேனுஞ் சென்று பாடும் கூத்தர்களாகிய பொருநரும், வயிர் என்னும் இசைக் கருவியைப் பயன்படுத்தி நிகழ்ச்சியை நிகழ்த்திய வயிரியரும், ஆடலையும் பாடலையும் தொழிலாகக் கொண்ட மங்கைய ராகிய விறலியரும் அக்காலத்தில் வாழ்ந்திருந்தனர். சங்க இலக்கியத்துள் ஒன்றான, 'கூத்தராற்றுப்படை' என்ற நூல் கூத்தர்களின் சிறப்பை விளக்குவதாக அமைந்துள்ளது. சங்க காலத்துப் புலவர்களில்கூட கூத்தன் என்ற பெயரை இறுதியில் கொண்ட புலவர்கள் இருந்தனர்.[124]

திருமுறை ஆசிரியர்கள் கூத்தில் சிறந்த இறைவனைக் 'கூத்தன்' என்றே தம் நூலில் குறித்துள்ளனர். 'ஆனந்தக் கூத்தன்'[125] எனத் திருமூலரும், 'பேரருட்கூத்தன்'[126] எனச் சம்பந்தரும், 'கூத்தப்பிரான்'[127] எனத் திருநாவுக்கரசரும், 'கூத்தன்'[128] எனச் சுந்தரரும், 'மாணிக்கக்கூத்தன்'[129] என மாணிக்கவாசகரும், 'குலாத்தில்லை அம்பலக்கூத்தன்'[130] எனத் திருமாளிகைத் தேவரும், 'கோனமர் கூத்தன்'[131] எனச் சேந்த னாரும், 'ஆடுபொற் கூத்தனார்' எனத்[132] திருவாலிய முதனாரும், 'கூத்தன்'[133] எனப் புருடோத்தம நம்பியும், 'காளத்திக் கூத்தன்'[134] என நக்கீரரும், 'அற்புதக்கூத்தன்'[135] எனப் பட்டினத்தாரும், 'சுந்தரக்கூத்தன்'[136] என நம்பியாண் டார் நம்பியும், 'ஆனந்தப் பெருங்கூத்தர்'[137] எனச் சேக்கிழாரும் கூத்தனைத் தம் பாடல்களில் சுட்டியுள்ளனர்.

**கல்வெட்டுக் காட்டும் கூத்தன்**

பல்லவர் கால இலக்கியங்களிலே பெரும்பாலும் கூத்தன் என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. ஆனால், பல்லவர் காலக் கல்வெட்டுகளில் 'கூத்தன்' என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை.

முதலாம் ஆதித்த சோழனின் கல்வெட்டு கூத்தப்பெருமானடி களுக்கு வழங்கிய நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது.[138] அக்கல் வெட்டு அவனுடைய இருபத்து மூன்றாவது ஆட்சியாண்டிற்குரி யது (871+23=கி. பி. 894) உத்தம சோழன் கூத்தப் பெருமா ளுக்கு வழங்கிய நிவந்தத்தை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[139] அக்கல்வெட்டு அவனுடைய ஆறாம் ஆட்சியாண்டைச் சார்ந் தது (971+6 = கி.பி. 977) முதலாம் இராசராசனின் ஏழாம்

ஆண்டிற்குரிய கல்வெட்டு (985+7= கி.பி. 992) கூத்தப்பெரு மாளுக்கு, அவன் வழங்கிய நிவந்தத்தைச் சுட்டுகிறது.[140]

கூத்தாடு நாயனாருக்கு முதலாம் குலோத்துங்கச் சோழன் வழங்கியுள்ள நிவந்தத்தை அவனுடைய இருபத்து நான்காம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டுக் கூறுகிறது (1070+24=கி.பி. 1094)[141] மேலும், அவனுடைய நாற்பத்தெட்டாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டு கூத்தாடும் தேவருக்கு வழங்கிய நிவந்தத்தை மொழிகிறது (1074+48 = கி. பி. 1122)[142] விக்கிரம சோழனின் ஆறாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டு, கூத்தாடுந் தேவருக்கு அவன் வழங்கிய நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது (1118+6 = கி. பி. 1124)[143] மேலும், அவனுடைய எட்டாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டு கூத்தநாயகருக்கு வழங்கிய நிவந்தத்தைக் கூறுகிறது (1118+8 = கி. பி 1126)[144] அழகிய கூத்தருக்கு, மூன்றாம் இராசராசன் வழங்கிய நிவந்தத்தை, அவனுடைய பதினைந்தாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டு கூறுகிறது (1216+15 = கி. பி. 1231)[145]

பராக்கிரம பாண்டியன் கல்வெட்டு, கூத்தாடுந் தேவருக்கு அவன் வழங்கிய நிவந்தத்தைக் குறிக்கிறது.[146] அக்கல்வெட்டு அவனுடைய ஒன்பதாம் ஆட்சியாண்டைச் சார்ந்தது (1145+9 = கி. பி. 1154) கூத்தாடுந் தேவருக்கு குலசேகரதேவன் வழங்கிய நிவந்தத்தை அவனுடைய ஒன்பதாம் ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டுக் கூறுகிறது(1162+9 = கி. பி. 1171)[147] பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குரிய பாண்டியர் கல்வெட்டுகள் கூத்தாடுந் தேவரையும்,[148] கூத்தாடுவாரையும்[149] சுட்டுகின்றன.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் எட்டு,[150] பதினான்கு,[151] பதினேழு[152] இருபத்துநான்காம்[153] ஆட்சியாண்டிற்குரிய கல்வெட்டுகள் கூத்தாடுந் தேவருக்கு வழங்கிய நிவந்தங்களைத் தெரிவிக்கின்றன.

இவையல்லாமல் கூத்தாடுந் தேவரைக் குறிப்பிடும் அரசன் பெயரில்லாத கல்வெட்டுகளும் உள்ளன.[154] சோழர் காலத்தில் கூத்தாடும் நாயனார் மடம் இருந்ததையும் ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது.[155] மேலும், ஒரு கல்வெட்டில், தில்லைக்கூத்தன்'[156] என்ற சொல்லாட்சி காணப்படுகிறது. இதன்மூலம் 'ஆடல்வல்லான்' என்ற சொல்லாட்சிக்கு அடுத்து, 'கூத்தப்பெருமான்'பெற்றிருந்த இடம் தெள்ளத்தெளிவாகப் புலனாகிறது.

## மற்ற பெயர்கள்

ஆடல்வல்லான், கூத்தப்பெருமான் என்ற இரு சொற்களின் வழக்காற்றிற்குப் பிறகு, நிருத்தன், அம்பலவாணன், நடராசர், நடேசன், சபாபதி ஆகிய சொற்கள் தமிழில் பெருவழக்குப் பெற லாயின. இவற்றுள், 'நடராசர்' என்ற சொல்லே இன்று வழக் கில் உள்ளது. வடமொழிவாணர்கள் அவரைச் 'சபாபதி' என்றே வழங்குகின்றனர். இனி, மற்ற பெயர்களின் சொல்லாட்சி விளக்கப்படுகிறது.

## நிருத்தன்

ஆடல்வல்லானுக்கு வழங்கிய பெயர்களுள் ஒன்று நிருத்தன் என்பது. ஆடலைக் குறிக்கும்போது அச்சொல் நிருத்தம் என்றே அழைக்கப்பெறும். நிருத்தத்துடன் தொடர்புடையவை நடனம், நாட்டியம், நாடகம் என்ற சொற்கள். இவற்றுள், நடனம், நாட்டியம், நாடகம் எனும் மூன்றும் மிக நெருக்கமான பொருள் பொதிவை உடைய சொற்களாகும். 'நிருத்' எனும் சொல்லே, நாட்டியம் எனும் சொல்லின் முன்னோடி என்பதும் இங்கே கருதத்தக்கது.[157]

## சொல்லாட்சி

'அந்திநிருத்தம் அனல்கை ஏந்தி அழகன் ஆடுமே'[158] என்று காரைக்காலம்மையார் இறைவன் ஆடலைப் போற்றுகிறார். 'நிரானந்தமாகி நிருத்தஞ் செய்தானே'[159] எனத் திருமூலரும் குறிப்பிடுகிறார். இந்த நிருத்தத்தைப் புரிபவர் நிருத்தன் என்றும், நிருத்தனார் என்றும், நிருத்தர் என்றும் அழைக்கப்பட்டார்.

'நிருத்தன் சடைமேல் நிரம்பா மதியன்',[160] 'நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி'[161] எனச் சம்பந்தரும், 'நிருத்த னார் நிருத்தஞ் செய்ய நீண்ட புன்சடைகள் தாழ',[162] 'நிருத் தனை நிமலன் தன்னை நீள்நிலம் விண்ணின் மிக்க'[163] எனத் திருநாவுக்கரசரும், 'நிருத்தஞ்செய் காலனை[164]' எனச் சுந்தரரும், 'நிருத்தனே நிமலா'[165] என மாணிக்கவாசகரும் ஆடல்வல் லானை நிருத்தப்பெருமானாகக் கண்டு போற்றியுள்ளனர்.

'நின்றாடும் பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி',[166] 'நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென் றறிந்தாள்'[167] எனப் பரஞ்சோதியாரும், 'நிருத்தனார் அமர்ந்தருளும் நிறைபதிகள் பல வணங்கி'[168], 'நிருத்தர் பாதம் பணிந்தன்பின்'[169] எனச் சேக்

கிழாரும், 'அண்ணனின் றாடுகின்ற வானந்த நிருத்தங் கண்டார்'[170] என உமாபதிசிவமும் தம் பாடல்களில் நிருத்தப் பெருமானைக் குறிப்பிட்டுள்ளனர்.

மேற்கண்ட சொல்லாட்சிகளின் மூலம் 'நிருத்தம்' என்ற சொல் காரைக்காலம்மையார் காலம் முதலே வழக்கில் இடம் பெற்றுள்ளது. ஆனால், 'நிருத்தன்' என்ற சொல் ஏழாம் நூற்றாண்டு முதல் இலக்கியத்தில் வழங்கப்பட்டுள்ளது.

**அம்பலவாணன்**

நிருத்தன் என்ற சொல்லிற்கு அடுத்து வழக்கில் இடம்பெற்ற பெயர் அம்பலவாணன் என்பது. அம்பலத்தில் சிறந்து விளங்குபவன் என்ற பொருளில் இப்பெயர் ஆளப்பட்டுள்ளது. ஆனால், 'அம்பலம்' என்ற சொல் சிலப்பதிகாரம்,சீவகசிந்தாமணி,திருமந்திரம் ஆகியவற்றில் முறையே ஆளப்பட்டுள்ளது. அம்பலம் என்ற சொல் ஐவகை மன்றங்கள் என்ற இயலில் விளக்கப் பட்டுள்ளது.

**சொல்லாட்சி**

அம்பலவாணன் என்ற சொல் முதன்முதலில் சுந்தரர் தேவாரத்தில் ஆளப்பட்டுள்ளது. இதனை, 'அம்பலவாணன் நின்றாடல் விரும்பும் இடம்'[171] என்ற அடி அறிவிக்கிறது. 'ஆடும் அம்பலவாண,[172] எனப் பட்டினத்தாரும், 'அம்பலவாணர் அன்பர் இத்தனை முனியக் கெட்டேன்'[173] எனச் சேக்கிழாரும், 'கமலத் தடத்தினில் மூழ்கி அம்பலவாணர்முன்'[174] என உமாபதி சிவமும் தம்பாடல்களில் ஆடல்வல்லானை, 'அம்பலவாணனாகக்' கண்டு பாடியுள்ளனர்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலே அம்பலம் என்ற சொல் இலக்கியங்களில் இடம்பெற்றுவிட்டது. ஆனால், அத்தகைய அம்பலத்தில் ஆடும் இறைவனை, அம்பலவாணனாக இலக்கியவாணர்கள் கண்டது கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தான். அதுமுதல் அம்பலவாணன் என்றும், அம்பலவாணர் என்றும் ஆடல்வல்லானை இலக்கியவாணர்கள் அழைத்தனர் என்பது மேற்கண்ட சொல்லாட்சிகளினால் புலனாகிறது.

**நடராசர்**

சிவபெருமானை முழுமுதற்கடவுளாகப் போற்றி வழிபட்டு வந்த தமிழ் மக்களுள் ஒருசாரார், இறைவனைச் சிவலிங்க

வடிவில் இருப்பு நிலையிலும் (Being) ஆடல்வல்லானாக இயக்க நிலையிலும்(Becoming)இருவேறு சிறப்பு வடிவங்களாகப் போற்றி வழிபடத் தொடங்கினர். இந்த வழிபாட்டு நெறி வளர்ந்து சிறந்த காலத்தில், இறைவனின் திருக்கூத்துக் கோலத்தை வட மொழிப் பெயர்களால் சுட்டுவது பெருவழக்காயிற்று.

இம்மாற்றம் கி.பி. பதிமூன்றாம் நூற்றாண்டில் நிகழ்ந்தது எனலாம். அப்பொழுது தமிழ்ப்பெயர்கள் எல்லாம் வடமொழிப் பெயர்களாயின. ஊர்ப் பெயர்களில் மயிலாடுதுறை—மாய வரம், திருமுதுகுன்றம் — விருத்தாசலம் என்றானது போல, இறைவன் பெயர்களிலும் இம்மாற்றம்நிகழ்ந்தது.அவை பழமலை நாதர் — விருத்தகிரீசுவரர், குடமூக்கின் இறை—கும்பேசுவரர், வளர்மங்கை—மங்களாம்பிகா என்பன. இவ்வாறு நடராசர், நடேசன், நடனசபாபதி என்ற பெயர்கள் வழக்கிற்கு வந்தன.

**சொல்லாட்சி**

நடராசர் என்ற சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியவர் உமாபதிசிவம். இதனை, 'மல்குபுகழ் நடராசன் வளர் கோயிலகலாது'[175] எனக் கோயிற்புராணமும், 'செப்பேடு செய்து நடராசர் சந்நிதியில் ஏற்றினார்கள்'[176] எனச் சேக் கிழார் சுவாமிகள் புராணமும் சுட்டுகின்றன. உமாபதிசிவத்திற்கு அடுத்து இரட்டைப் புலவர்தம் தில்லைக் கலம்பகத்தில் நடராசன் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். 'தில்லையம்பதி வாழ் நடராசனார்',[177] என்ற அடியால் இதனை அறியமுடிகிறது. 'கடிகொண்ட பொழிற்றில்லை நடராசன் கழற்காலில்'[178] எனக் குமரகுருபரரும்,'நடநடராசனங்கணொருமூவருக்கு நயமல்க'[179] எனக் கச்சியப்ப முனிவரும், 'திரிகூட நடராசருடனாத வடி வாய்'[180] எனத் திரிகூடராசப்பக் கவிராயரும், 'நடராஜர் தம் நடம் நன்னடமே'[181] என இராமலிங்க அடிகளும் நடராசரைத் தம் பாடல்களில் சுட்டியுள்ளனர்.

இதன் மூலம் பதிமூன்றாம் நூற்றாண்டு முதல் 'நடராசர்' என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. 'நடராசர்' என்பதற்கு நடனம் ஆடுவதில் அரசன் என்று பொருள். மேலும், ஆடல்வல்லான், கூத்தப்பெருமான் என்ற சொல் லாட்சிகளைக் கண்ட வடமொழிவாணர்கள் நடனம் என்ற சொல்லை, அதற்கு இணையாகக் கொண்டனர். இதன் மூலம் 'நடராசர்' என்ற சொல்லை உருவாக்கினர். இன்று, இச் சொல்லே எல்லா இடங்களிலும் வழக்கில் உள்ளது.

இதுவரை, நடராசருக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர் களைப் பற்றிய சொல்லாட்சி கூறப்பட்டது. இனி, ஆடலின் தோற்றமும் வளர்ச்சியும் விளக்கப்படுகிறது.

### ஆடலின் தோற்றம்

நாகரிகம் அடையாத பழங்குடி மக்கள் சைகையின் மூலம் கருத்துகளை வெளிப்படுத்தி வந்தனர். அச்சைகைகளே நாகரிகம் அடைந்தபோது ஆடற்கலைக்குத் தோற்றுவாயாக அமைந்தன. அக்காலத்தில் செய்த சைகைகள் இன்று அபிநயங்களாக ஆடற் கலையில் பரிணமிக்கின்றன. வேட்டையாடுதல், மிருகங்களைக் கொல்லுதல் போன்ற அத்தியாவசிய செயல்களைப் பூர்வீக மனிதர் பாவனை செய்யும்போது கூத்து முறைகள், ஆடல் வகைகள் உருவாகின என்ற கார்த்திகாகணேசரின் கருத்தும் இங்கே கருதத்தக்கது.[182]

### ஆடலின் வளர்ச்சி

நாகரிகம் அடைந்தபோது ஆடிய ஆடல்கள் பல்வேறு குழுக் களால் ஆடப்பட்டன. ஆனால், சங்ககாலத்தில் வேலன் வெறி யாட்டு தனியொருவனால் நிகழ்த்தப்பெற்றது. துணங்கைக் கூத்து, குரவைக்கூத்து ஆகியன பலர் சேர்ந்து ஆடுபவையாகும். அரசன்முன் அரங்கேற்றம் செய்யும் போது இளைஞர்கள் தனித்தே ஆடியிருக்க வேண்டும்.

மேலும், அரசனுக்கு இணையாகக் கருதிய தெய்வத்தின் முன்னும் அரங்கேற்றம் தனித்தே செய்திருக்க வேண்டும். ஏனெனில், அரசன் உறையுமிடமும் தெய்வம் உறையுமிடமும் 'கோயில்' என்ற சொல்லாலே வழங்கப்பட்டன. அரசன் வீற்றிருக்கும் அரண்மனையைப் போல் தெய்வங்களுக்கும் கோயில் அமைக்கப்பட்டது என்ற கா கைலாசநாதக் குருக்களின் கருத்தும் இங்கே கருதத்தக்கது.[183] எனவே, தெய்வத்தின் முன்னர் ஆடியவர்கள், அத்தெய்வமே தமக்கு முன்னோடியாக இருந்து ஆடுவதாகக் கருதினர். அதன் விளைவாகவே, 'ஆடல் வல்லான்' தோற்றம் பெற்றிருக்க வேண்டும். மேலும், 'ஆடல் வல்லான்' என்ற சொல்லே, அவன் ஆடுவதில் வல்லவன் என்பதைப் புலப்படுத்துகிறது.

கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் போன்ற ஆடல் களை இறைவன் ஆடினான் என்பது முன்னரே விளக்கப்பட்டது. இத்தகைய ஆடல்களை அடுத்து சுடுகாட்டில் ஆடுபவராகக்

காரைக்காலம்மையாரும் மற்ற அடியார்களும் இறைவனைக் கண்டு பாடியுள்ளனர்.

சுடுகாட்டில் இறைவன் ஆடும் ஆடல் ஊழிக்கூத்து எனப் படும் என்பது முன்னரே கூறப்பட்டது. இக்கூத்தானது, மனித இனம் நாகரிகம் அடையாத காலத்தில், இறந்தோரை அடக்கம் செய்த போது, சுடுகாட்டில் ஆடிப்பாடிய ஒருவகைச் சடங்கி லிருந்து தோன்றி இருக்க வேண்டும் என்று க.த. திருநாவுக்கரசு தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[184] கி.மு. ஐந்தாவது நூற்றாண் டில் தெராசியன்ஸ் (Theracians) தம் இறந்த உறவினரை அடக்கம் செய்துவிட்டுப் பல விளையாட்டுகளையும், தேகப் பயிற்சிகளையும், மல்யுத்தங்களையும் செய்தார்கள் என்று வே. ராகவன் குறிப்பிட்டிருப்பதும் இங்கே எண்ணத்தக்கது.[185] மேலும் அவர், பர்மியர், ஜப்பானியர், எகிப்தியர் ஆகியோரிட மும் மடிந்த முன்னோர் வழிபாடும் அது சம்பந்தமான ஆட்டமும் காணப்படுகின்றன என்று கூறுகிறார்.[186] இன்றும் நம் சமுதாயத் தில் ஒருசில பிரிவினரிடையே இறந்தவர் முன் ஆடும் பழக்கமும், கோல் சுழற்றும் விளையாட்டும் காணப்படுகின்றன. மேலும், இறைவனை, அழித்தல் தொழிலைப் புரிபவனாகக் கருதியவர் கள் அச்செயலைச் சுடுகாட்டில் புரிவதாகக் கூறினர். எனவே, சுடுகாட்டில் ஆடிப்பாடிய சடங்கிலிருந்து ஊழிக்கூத்து தோன்றி யிருக்க வேண்டும்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் ஊழிக்கூத்தாடும் இறைவன் உருவங்கள் காணப்படுகின்றன என்று சிவராமமூர்த்தி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[187] இத்தகைய ஆடல்வல்லான் இலக்கியத்தில் பெறுமிடம் முன்னரே விளக்கப்பட்டது. அடுத்து, ஆடல்வல்லானின் தோற்றம் பற்றி அறிஞர்கள் கூறும் கருத்து ஆராயப்படுகிறது.

## ஆடல்வல்லானின் தோற்றம்

ஆடல்வல்லானின் தோற்றம் பற்றி அறிஞர்களிடையே பல வகையான கருத்துகள் நிலவுகின்றன. இறைவன் அநாதி நித்திய மானவன்; முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளாவன்; அவன் கொள்ளும் திருமேனிகள் யாவும் அவனாகவே அமைத்துக்கொண்டவை. ஆதலால், அவ்வுருவங் களுக்குப் பழமையும், புதுமையும், கால எல்லையும், சாதகமும் கணித்தல் இயலாது என்பது தண்டபாணிதேசிகரின் கருத்து.[188]

''தென்னிந்தியாவில் பேய் பிசாசுக்கஞ்சிய மக்களிடையும் பழங்கால மலை ஜாதியினரிடையும் கிரியைகளுடனும் பலிகளுடனும் இணைத்துப் பேசப்படும் ஆரியர் காலத்துக்கு முந்திய தெய்வமாகிய சிவன் எவ்வாறு, எப்பொழுது மாயக் கூத்தனானான் என்பது பற்றியும், படைக்கப்பட்ட பொருள்களாலாகிய காட்சியளவை உலகத்திலும் மனித ஆன்மாவின் காட்சிக்கப்பாற்பட்ட உலகத்திலும் இறுதியாக நாதமே வடிவானான் என்பது பற்றியும் நாம் தெரிந்துகொள்வதற்கு வாய்ப்புகளில்லை. எவ்வாறு எப்பொழுது தத்துவக் கருத்தும் கவிஞன் மனோதர்மமும் பின்னிப்பிணைந்த இவ்வுயரிய கருத்தோவியம் நடராஜர் சிலையாக வடிவம் பெற்றது என்பதும் நமக்குத் தெரியாமலே போய்விடலாம்''

என்ற டீ ஜோயட்டின் கருத்தை க.சி. கமலையா ஏற்றுப் போற்றுகிறார்.[189]

நடராசரின் கலைவடிவம் ஆறாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகவே இருந்திருக்க வேண்டும் என்கிறார் பி. ஸ்ரீ.[190] நடராச வழிபாடு கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கும் ஐந்தாம் நூற்றாண்டிற்கும் இடையே தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்பது பி. நடராசனின் கருத்து.[191] நடராச வழிபாடு, வட இந்தியாவிலிருந்து தில்லை மூவாயிரவர்களால் தென்னிந்தியாவிற்குக் கொண்டு வரப்பட்டது என்கிறார் அவர்.[192]

ஆனால், கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிலப்பதிகாரத்தில் இறைவனுடைய ஆடல் குறிக்கப்பட்டுள்ளது என்று முன்னரே கூறப்பட்டது. அதற்குமுன் தோன்றிய நூலான கலித்தொகைக் கடவுள் வாழ்த்திலும் இடம்பெற்றிருந்த ஆடல்கள் முன்னரே விளக்கப்பட்டன. தொல்பழங்காலமான சிந்துவெளி காலத்தில் ஆடல் கோலத்தில் சிலைகள் இருந்ததைத் தொல்பொருள் சின்னங்கள் காட்டுகின்றன. எனவே, சிந்துவெளி காலத்திலேயே ஆடல்வல்லானின் வழிபாடு தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்பது தெள்ளத்தெளிவாகப் புலனாகிறது.

**தொல்பொருள் சின்னங்கள் காட்டும் வழிபாட்டு நெறி**

சிந்துவெளி சின்னங்களில், சுண்ணாம்புக் கல்லினால், ஆடவர் ஆடும் கோலத்தில் செய்யப்பட்ட சிலைகள் கிடைத்துள்ளன.

சிவபெருமானின் நடனக் கோலமான நடராச வடிவத்திற்கு முன்னோடியாக—தொல்பழங்கால வடிவமாக அவற்றை சர் ஜான்மார்ஷல் கருதுகின்றார்.[193]

அச்சிலைகள் நடனம் செய்வதற்கு ஏற்றவாறு ஒரு காலினை ஊன்றி, மற்றொரு காலைத் தூக்கிய (குஞ்சிதபாதம்) நிலையில் அமைந்துள்ளன. மேலும், அவை இடதுகாலைத் தூக்கி, வலது காலை ஊன்றி நின்று நடனம் செய்வதைப் போன்று செய்யப் பட்டுள்ளன. ஆனால், அவற்றின் பாதி உருவம் உடைந்த நிலையில் இருக்கிறது. இருப்பினும், தமிழகத்தில் இன்று எல்லாக் கோயில்களிலும் காணப்படும் ஆடல்வல்லானின் ஆனந்தநடனக் கோலத்தின் முன்னோடியாக இச்சிலைகளைக் கூறலாம்.

சிந்துவெளி காலத்திற்குப்பின் பல்லவர் காலத் தொடக்கம் வரை காணப்பட்ட சிற்பங்கள் காலமென்னும் தீயில் கருகி விட்டன. ஏனெனில், இச்சிற்பங்கள் மண்ணால் செய்யப்பட்டு, அவற்றின் மேல் சுண்ணாம்புக் காரைகள் பூசப்பட்டிருக்க வேண்டும். இவை, மழை, வெய்யில் போன்றவற்றால் அழிந்துப் பட்டிருக்க வேண்டும். மகேந்திரவர்மன் காலத்திற்குமுன் தமிழ கத்தில் கற்கோயில்கள் இல்லை. இருந்த கோயில்கள் செங்கல், சுண்ணாம்பு, மரம், உலோகம் இவற்றால் ஆனவை என்று மா. இராசமாணிக்கனார் மண்டகப்பட்டுக் கல்வெட்டைக் கொண்டு கூறுவதும் இங்கே கருதத்தக்கது.[194] செங்கை அண்ணா மாவட்டத்தின் தலைநகரான காஞ்சிபுரத்தில் உள்ள கைலாச நாதர் கோயில் சிற்பங்களும் மண்ணால் செய்யப்பட்டவையாகத் திகழ்கின்றன. இத்தகைய ஆடல்வல்லானின் சிற்பங்களைக் காண்பதற்குமுன், மரபுவழி சிற்ப வளர்ச்சி விளக்கப்படுகிறது.

### மரபுவழி சிற்ப வளர்ச்சி

பல கைகளுடன் உடைந்த நிலையில் ஆடல்வல்லான் சிற்பம் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள மொகல்ராஜபுரத்தில் காணப்படு கிறது. அச்சிற்பமானது, விஷ்ணுகுண்டின் அரசனான இரண் டாம் விக்கிரமேந்திரன் காலத்தைச் (கி.பி. 530) சார்ந்தது. அவ்வரசன் பல்லவ மகேந்திரவர்மனின் தாய்வழிப் பாட்டன் ஆவான் என்று கமில் வி. சுவெபில் கூறுகிறார்.[195]

எட்டாம் நூற்றாண்டில் காஞ்சியை ஆண்ட சாளுக்கியர் களின் மூன்றாவது தலைநகராகப் பட்டதக்கல் (Pattadakal) விளங்கியது. காஞ்சிபுரத்திலிருந்து சிற்பிகளைப் பட்டதக்

கல்லுக்குக் கொண்டு சென்று,அங்குக் கோயில்களைக் கட்டினான் அவ்வரசன். அப்பொழுது, அங்கு நடராசர் வழிபாடு பரவியது. ஐஹோலும், பாதாமியும் சாளுக்கியர்களின் மற்ற இரண்டு தலைநகரங்களாகும். அங்கு, கி.பி. 530-550க்கும் இடைப்பட்ட காலத்தில் ஆடல்வல்லான் கருத்துத் தோன்றியிருக்க வேண்டும் என்று கமில் வி. சுலெபில் கருதுகிறார்.[196]

நெல்லூர் மாவட்டத்தில் குகைக் கோயிலில் எட்டுக் கைகளுடன் கூடிய நடராச சிற்பத்தை சிம்மவிஷ்ணு தோற்று வித்தான். அவன் விஷ்ணுகுண்டின் அரசரான விக்கிரமேந்திரனின் மருமகன் ஆவான். பல்லவ காலத்திய முதன்மையான சிற்பமாக இது விளங்குகிறது. வாகாடக மற்றும் முற்கால சாளுக்கியர் மரபைச் சார்ந்தது இந்த பைரவகொண்டா மூல நடராசர். ஆனால், இச்சிற்பம் விஷ்ணுகுண்டின், பல்லவமரபின் இணைப் பால் தோன்றியது என்கிறார் சிவராம மூர்த்தி.[197] இது, கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கமில் வி. சுலெபில் கூறுகிறார்.[198]

ஐஹோல், பாதாமி ஆகிய இடங்களில் காணப்படும் நடராசர் சிற்பங்களைப் பற்றி ஆனந்த குமாரசுவாமி கூறிய கருத்து இங்கே நோக்கத்தக்கது.

> ''சிவபெருமானின் நடன கோலம் ஐஹோலில் உள்ள துர்க்கை கோயிலில் காணப்படுகிறது. அது குப்தர் காலத்தைச் சேர்ந்தது. சிறிது பிற்பட்ட காலத்தில் எலிபெண்ட்டா குகையில் இத்தகைய சிற்பம் ஒன்று காணப்படுகிறது. அக் கல் சிற்பங்களில் நடராசப் பெரு மானின் வடிவத்தோடு பொருந்தக்கூடிய மூல வடி வத்தையோ, சமமான சிற்ப வடிவத்தையோ நாம் காண முடியவில்லை. எனவே, அவ்வடிவத்தை வெண் கலச் சிலையாகச் செய்யும் கலையைத் திராவிடச் சிற்பக் கலையியல் குழுவினரே முதன்முதல் படைத் தனர் என்பது புலனாகின்றது.''[199]

இதே கருத்தினைக் கொண்டவராக கமில் வி. சுலெபில் திகழ் கிறார். அவர் தென்னிந்தியாவில் தோன்றிய நடராசர் வழிபாடு குப்தர் காலத்தில் வடஇந்தியாவில் பரவியது என்று கூறுகிறார்; கி.பி. 550-ல் ஐஹோலிலும், கி.பி. 578-ல் பாதாமியிலும், கி.பி. 740-க்குப் பிறகு பட்டதக்கல்லிலும் நடராசர் சிற்பங்கள் தோன்றின என்கிறார்.[200]

இதன்மூலம் ஐஹோலிலும், பாதாமியிலும், கி. பி. ஆறாம் ாண்டில் தான் நடராசர் சிற்பங்கள் தோன்றியுள்ளன து புலனாகிறது. ஆனால், தமிழ்நாட்டிலோ அதற்கு ப ஆடல்வல்லான் பற்றிய இலக்கியச் சான்றுகள் காணப் ன்றன. காரைக்காலம்மையார் பாடல்கள், சிலப்பதிகாரம், தொகை ஆகியவற்றில் உள்ள ஆடல்வல்லான் பற்றிய திகள் முன்னரே விளக்கப்பட்டுள்ளன. இதன்மூலம், தமிழ் டிலிருந்துதான் நடராசர் வழிபாடு வட இந்தியாவில் யது என்பது புலனாகிறது.

**ல்வல்லான் சிற்பங்கள்**

குப்தர் காலத்திலிருந்துதான் ஆடல்வல்லான் சிற்பங்கள் த்துள்ளன. இக்குப்தர் காலச் சிற்பம் நாச்சனாவில் ாது. சிவபெருமான் நோக்கியுள்ள திசைகளைக் கொண்டு ர், அகோரன், வாமதேவன், சத்யோஜாதன், தத்புருஷன் று அழைக்கப்படுகிறார். அவ்வடிவங்கள் ஈசான வடிவங் கக் கருதப்படுகின்றன. நாச்சனாவில் ஆடல்புரிபவர் வாம ன் என்று அழைக்கப்படுகிறார். வாமம் என்பது வடக்குத் சயைக் குறிக்கும். அத்திசையை நோக்கி உள்ளவர் வாம ன் எனப்படுவார். அவர் நான்கு கைகளுடன், வலக்காலைத் கி ஆடுகிறார். வலக்கை வேழ முத்திரையாகவும், இடக்கை பக்கரமாகவும் திகழ்கிறது. தெற்கே காணப்படும் இடைக் பச் சிற்பங்களின் மாற்று வடிவமாக இச்சிற்பம் விளங்குகிறது று சிவராமமூர்த்தி கூறுகிறார்.[201]

பல்லவர் காலத்தில் சீயமங்கலத்தில் உள்ள குகைக்கோயில் ணில் ஆடல்வல்லான் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பம் ாந்த தாண்டவச் சிற்பத்தின் முன்னோடியாகும். இச்சிற்பத் r அமைப்பு, இரண்டாம் இயலில் விளக்கப்படுகிறது. மகாபலி த்தில் உள்ள தர்மராஜ இரதத்தில் வடக்குச் சுவரின் இரண் வது தளத்தில் தண்டு முனிவரின்முன் சிவபெருமான் ஆடுவது ான்ற சிற்பம் காணப்படுகிறது.

செங்கை அண்ணா மாவட்டத்தின் தலைநகரான காஞ்சி த்தில் கைலாசநாதர் கோயிலில் ஊர்த்துவத்தாண்டவச் பம் காணப்படுகிறது. அச்சிற்பம் கோயிலின் பிரகாரத்தில் ்க்குப் பக்கக் கோடியில் உள்ளது. அச்சிற்பத்தில் பத்துக் கள் உள்ளன. வலக்கால் மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது. க்கால் ஊன்றப்பட்டுள்ளது. வலக்காலுக்கு வெளியே வலக்

கைகள் அமைக்கப்பட்டுள்ளன. இடக்கை தலைக்குமேல் மகுடத்தின் மேல் வைத்ததுபோல் உள்ளது. அருகில் ஒரு பெண் உருவம் இடப்பக்கம் நின்ற நிலையில் உள்ளது.அப்பெண்ணின் வலப்புறம் ஒரு முனிவர் உட்கார்ந்துள்ளார். அப்பெண், அம்முனிவரின் தலைமேல் தன் வலக்கையை ஊன்றியுள்ளாள்.வலப்பக்கத்திலும் ஓர் உருவம் உள்ளது.

அக்கோயிலில் ஒரு சிற்பம் வலக்காலை மடித்தும் இடக்காலில் முட்டியிட்டும் ஆடும் நிலையில் உள்ளது. வலக்கை வேழ முத்திரையாக அமைந்து, இடக்காலின் பாதத்தைப் பிடித்துக் கொண்டுள்ளது. இடது கை தலைக்குமேல் மகுடத்தைத் தொட்டுக் கொண்டுள்ளது. வலக்கை ஒன்றில் உடுக்கை உள்ளது. இடக்கை ஒன்று அபயக்கரமாக உள்ளது. அச்சிற்பம் எட்டுக் கைகளுடன் அமைந்துள்ளது. அச்சிற்பம் கைலாசநாதர் கோயிலின் கருவறையின் வெளியே அமைந்துள்ளது.

சங்கார தாண்டவச் சிற்பம் ஒன்று கைலாசநாதர் கோயிலின் கருவறைக்கு வெளியே பின்புறம் அமைந்துள்ளது; எட்டுக் கைகள் உள்ளன. காலடியில் ஓர் உருவம் உள்ளது. அவ்வுருவம் காலனாக இருக்க வேண்டும். அவ்வுருவத்தின் தோள்பட்டையின் மேல் இறைவனின் இடக்கால் தூக்கி ஊன்றப்பட்டுள்ளது. அவ்வுருவமும் இடப்பக்கம் தலைவைத்துப் படுத்துள்ளது. இடப்பக்கம் ஒரு பெண் உருவம் நின்ற நிலையில் உள்ளது. அப்பெண்ணின் வலக்கை, இறைவனின் தூக்கிய இடது தொடையின்மேல் வைக்கப்பட்டுள்ளது. கைகள் உடைந்த நிலையில் உள்ளன. இச்சிற்பம் காலனை அழித்ததை விளக்கும் வகையில் அமைக்கப் பட்டிருக்க வேண்டும்.

கைலாசநாதர் கோயிலில் மற்றொரு சிற்பம் ஊர்த்துவத் தாண்டவ நிலையில் உள்ளது. இச்சிற்பமும் கருவறைக்கு வெளியே பின்புறம் உள்ளது. இச்சிற்பத்திலும் வலக்கால் மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது. ஆனால், இடக்கை தலைக்கு மேல் தூக்கப்படவில்லை. எட்டுக் கைகள் உள்ளன. நந்திகேசுவரர் இடப்பக்கம் உள்ளார். அவரின்மேல் ஊர்த்துவத் தாண்டவரின் இடக்கை வைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் கீழ்ப்பகுதி சிதைந்த நிலையில் உள்ளது. ஊர்த்துவத் தாண்டவரின் வலப் பக்கமும் ஓர் உருவம் உள்ளது. அவ்வுருவத்தின் கீழ்ப்பகுதியும் சிதைந்த நிலையில் உள்ளது.

காஞ்சிபுரம் மாதங்கேசுவரர் கோயிலில் ஊர்த்துவத் தாண்டவச் சிற்பம் உள்ளது. இக்கோயில் நத்தானியா மருத்துவ மனையின் அருகில் உள்ளது. அக்கோயிலில் சுவாமி சந்நிதியின் வெளியே இடப்பக்கம் இச்சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பத் திலும் எட்டுக் கைகள் உள்ளன. வலக்கால் தலைக்கு மேல் தூக்கப்பட்டுள்ளது. இடக்கை மகுடத்தைத் தொடுவதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் வலப்பக்கம் ஓர் உருவமும் இடப்பக்கம் இரண்டு உருவங்களும் காணப்படுகின்றன.

காஞ்சிபுரத்தில் முக்தேசுவரர் கோயிலில் சதுர தாண்டவ அமைப்பில் ஒரு சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் காலடி யில் நிமிர்ந்த நிலையில் ஓர் உருவம் உள்ளது. அவ்வுருவத்தின் தலைமேல் ஒரு காலின் விரல்கள் வைக்கப்பட்டுள்ளன. அச் சிற்பத்தின் வலப்பக்கம் மத்தளம் அடிப்பதுபோல் ஓர் உருவம் உள்ளது. இடப்பக்கம் ஒரு பெண் நின்று கொண்டுள்ளாள். அச் சதுர தாண்டவச் சிற்பத்தின் இடக்கை வேழ முத்திரையில் உள்ளது. அச்சிற்பத்தில் பத்துக் கைகள் உள்ளன. அச்சிற்பத்தில் தலைப்பக்கத்தின் வலப்பக்கம் ஓர் உருவமும், இடப்பக்கம் ஓர் உருவமும் காணப்படுகின்றன. முக்தேசுவரர் கோயிலானது, காமாட்சியம்மன் கோயிலின் கிழக்குச் சந்நிதியில் உள்ள பூக்கடைச் சத்திரம் அருகில் உள்ளது.

அக்கோயிலில் சுவாமி சந்நிதியின் இடப்பக்கம் சங்கார தாண்டவ அமைப்பில் ஒரு சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் ஆறு கைகள் உள்ளன. இடக்கை ஒன்று சூலத்தை ஏந்தியுள்ளது. வலக்கை ஒன்று தூக்கிய வலது திருவடியின் தொடையின்மேல் வைக்கப்பட்டுள்ளது. வலது திருவடியின் கீழே ஓர் உருவம் காலை மடித்து உட்கார்ந்த நிலையில் உள்ளது. அவ்வுருவத்தின் தோள்பட்டையின் மேல் வலது திருவடியின் கால் விரல்கள் ஊன்றிய நிலையில் உள்ளன.

அக்கோயிலிலே யானையை அழித்து ஆடும் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் காலடியில் யானை உள்ளது. எட்டுக் கைகளுடன் அச்சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் இடப்பக்கம் இரண்டு உருவங் களும் வலப்பக்கம் ஓர் உருவமும் காணப்படுகின்றன. முக்தேசு வரர் கோயிலிலே பதினாறு கைகளுடன் ஒரு சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் காலடியில் நசுங்கிய நிலையில் ஓர் உருவம் உள்ளது. அச்சிற்பத்தின் தலைக்குமேல் சோமாஸ்கந்தர் உருவம் காணப்படுகிறது.

இராவதீஸ்வரர் கோயிலானது கச்சபேஸ்வரர் கோயிலுக்கு எதிரே உள்ளது. அக்கோயிலில் ஊர்த்துவத் தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. அச்சிற்பத்தில் வலக்கால் தூக்கப்பட்டுள்ளது; இடக்கை தலைக்குமேல் மகுடத்தைத் தொட்டுக் கொண்டுள்ளது; இடக்கையில் பாம்பு படம் எடுத்த நிலையில் உள்ளது; வலக்கையில் சூலம் உள்ளது. அச்சிற்பத்தில் பத்துக் கைகள் காணப்படுகின்றன. அதன் இடப்பக்கம் தேவி வீற்றிருக்கிறாள். அச்சிற்பத்தின் வலப்பக்கமும் மேலே இருபக்கமும் தேவகணங்கள் உள்ளன.

திருமலைப்புரத்தில் உள்ள குகைக்கோயிலில் சதுரதாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பந்தான் பாண்டியர் கால நடராசர் சிற்பங்களில் முதன்மையானது என்று சிவராம மூர்த்தி கூறுகிறார்.[202]

மதுரைக்கு அருகில் உள்ள திருப்பரங்குன்றத்தில் பாண்டியர் காலக் குகைக்கோயிலான முருகன் கோயிலில் சதுர தாண்டவ நடராசர் சிற்பம் இடம்பெற்றுள்ளது. இச்சிற்பமானது முருகப் பெருமான் சந்நிதியின் இடது கோடியில் உள்ளது. வலக்கைகளில் ஒன்று உடுக்கை ஏந்தியிருக்க, மற்றொன்று விஸ்வ முத்திரையாக உள்ளது. இடக்கைகளில் ஒன்று காளைக்கொடி ஏந்தியிருக்க, மற்றொன்று வேழ முத்திரையாக உள்ளது. முயலகன் இடவலமாகப் படுத்துள்ளான். இந்நடராசரின் அருகில் பார்வதி, நந்தி, சிவகணங்கள், தேவர்கள் ஆகியோர் இறைவன் ஆடலைக் காணும் நிலையிலும், இசைக்கருவிகளை இயக்கும் நிலையிலும் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சீனிவாசநல்லூர் குரங்குநாதர் ஆலயத்தில் வலக்காலை உயர்த்தி ஆடும் சிற்பம் உள்ளது. இச்சிற்பமானது அக்கோயிலின் வெளியே இடப்பக்கச் சுவரில் உள்ளது. இச்சிற்பம் நான்கு கைகளுடன் திகழ்கிறது; இடக்கை மேல் நோக்கி வீசிய நிலையில் உள்ளது; ஒரு கையில் சூலம் காணப்படுகிறது.

பசும்பொன் தேவர் மாவட்டத்தில் உள்ள குன்றக்குடி குகைக்கோயிலில் சதுர தாண்டவச் சிற்பம் எட்டுக் கைகளுடன் உள்ளது. சடையானது விரித்த நிலையில் உள்ளது. வலக்கைகளில் உடுக்கை, கட்வாங்கம், கொடி ஆகியனவுள்ளன. ஒரு கை மார்பிற்கருகில் ஊசி முத்திரையில் (சூசி முத்திரை) உள்ளது. இடக்கைகளில் பாம்பு, தீ, பாசம் ஆகியனவுள்ளன; ஒரு கை வேழ முத்திரையாக உள்ளது. வலக்கால் இடக்காலுக்குள்ளே

வைத்து சிறிது விரல்களால் ஊன்றியும், இடக்கால் சற்று வளைத்து ஊன்றியும் ஆடுவதுபோல் நடராசர் சிற்பம் உள்ளது. நடராசரின் பார்வை சாய்ந்த நிலையில் உள்ளது.

நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில் உள்ள திருவாலீஸ்வரம் கோயிலில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. பிரபை இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. இடக்கால் உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. குல்கி, கமலையா போன்றோர் இச்சிற்பம் தான் ஆனந்தத் தாண்டவச் சிற்பங்களில் முதன்மையானது என்று கருதுகின்றனர். இச்சிற்பம் முற்காலச் சோழர் மரபைச் சார்ந்தது என்று சிவராமமூர்த்தி கருதுகிறார்.[203]

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலிலும், கங்கைகொண்ட சோழபுரத்திலும் தேவகோட்டங்களில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது. இவை சோழர் காலத்தைச் சார்ந்தவை. தேவ கோட்டம், பிரகாரம் ஆகியவற்றில் உள்ள ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் இரண்டாம் இயலில் விளக்கப்படுகின்றன.

**நடராசர் சந்நிதி**

முதலாம் இராசராசன் தஞ்சைப் பிரகதீசுவர் கோயிலில் நடராசருக்குத் தனிச் சந்நிதி ஒன்றை அமைத்து, 'ஆடல் வல்லான்' என்ற பெயரைத் திருமேனிக்குச் சூட்டினான். பிற் காலச் சோழர் காலம் முதல் இன்றுவரை நடராசருக்குத் தனிச் சந்நிதி எல்லாக் கோயில்களிலும் அமைந்துள்ளது. இச்சந்நிதியில் இடம் பெற்றுள்ள ஆனந்த தாண்டவ நடராசரைப் பற்றி, அடுத்த இயலில் விளக்கப்படுகிறது.

இதுவரை, சிற்பங்களில் ஆடல்வல்லான் நடராசர் அமைத்து வழிபடப்பெற்ற விதம் விளக்கப்பட்டது. இனி, திரு மேனிகளில் அமைந்துள்ள விதம் ஆராயப்படுகிறது.

**நடராசர் திருமேனிகள்**

இன்று கிடைத்திருக்கும் ஆடல்வல்லான் திருமேனிகளில் முதன்மையானது கூரம் நடராசர் திருமேனி தான். இத்திருமேனி இன்று சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. இது ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. இந்நடராசர் நான்கு கைகளுடன் திகழ்கிறார். வலக்கைகளில் ஒன்று துடி ஏந்தியும், மற்றொன்று அபயக்கரமாகவும் உள்ளது. இடக்கைகளில் ஒன்று

வேழ முத்திரையாகவும், மற்றொன்று பாம்பை பிடித்துக் கொண்டும் இருக்கின்றது. முயலகன் மேல் இறைவன் ஆடுகிறார். முயலகனோ பார்வையாளரை நோக்கிக் கொண்டிருக்கிறான். விரித்த சடை இல்லை. பிரபை உடைந்துபோன அடையாளம் உள்ளது. மகுடகிரீடம் உள்ளது. இத்தாண்டவம் 'ஊர்த்தவ ஜானு' ஆகும். பல்லவத் திருமேனிகளில், இத்திருமேனி முதன்மையானது என்று சிவராமமூர்த்தி குறிப்பிடுகிறார்.[204]

தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம் பகுதியில் உள்ள திருநல்லூர் கல்யாணசுந்தரேசுவரர் கோயிலில் உள்ள திருமேனி ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. இத்திருமேனியில் நடராசருக்கு எட்டுக் கைகள் உள்ளன. வலக்கையில் ஒன்று அபய முத்திரை நிலையிலும் மற்ற கைகளில் உடுக்கையும் ஏடும், தலைக்கோலும் ஏந்திய நிலையிலும் காணப்படுகின்றன. இடக்கைகளில் ஒன்று வேழ முத்திரையாகவும், மற்ற கைகளில் முத்தலைப் பாம்பும் மணியும் தீயகலும் உள்ளன. முத்தலைப் பாம்பானது படமெடுத்த நிலையில் காணப்படுகிறது. இறைவன் சடாமகுடராய்க் காட்சியளிக்கிறார். இத்திருமேனியில் முயலகன் வழக்கத்திற்கு மாறாக உட்கார்ந்த நிலையில் உள்ளான். அவன் வலக்காலைக் குத்துக் காலிட்டு இடக்காலை மடித்து உட்கார்ந்துள்ளான். இடது தொடையின்மீது அவனின் இடக்கரம் வைக்கப்பட்டுள்ளது. தலையின் மீது இறைவனின் வலக்கால் ஊன்றப்பட்டுள்ளது. இடக்கால் மடித்து உயர்த்தப்பட்டுள்ளது. இத்திருமேனியின் பிரபையில் இருபத்திரண்டு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன.

கீழக்காடு விருபாக்ஷீஸ்வர கோயில் நடராசர்த் திருமேனியும் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. இடக்கைகளில் ஒன்று ரேசித முத்திரையுடனும், மற்றொன்று தீ ஏந்தியதாகவும் உள்ளது. தீ ஏந்திய இடக்கையில் படமெடுத்த பாம்பு ஒன்று சுற்றிக்கொண்டுள்ளது. வலக்கைகளில் ஒன்று உடுக்கை ஏந்தியதாகவும், மற்றொன்று ஊசிமுகமாகவும் (சூசி முகம்) உள்ளது. ஆடல்வல்லானின் கால்களைக் கையிலும் தலையிலும் தாங்கிய வண்ணம் முயலகன் உட்கார்ந்துள்ளான். அவன் பூணூலும் கழுத்தணியும் அணிந்தவனாகவும், கையில் கடகத்தைப் பூண்டவனாகவும் காட்சி அளிக்கிறான். அவனுடைய முகம் நீண்ட வடிவில் அமைந்துள்ளது. சடைகளின் அமைப்பைக் கொண்டு இத்திருமேனி பல்லவர் காலத்தியது என்று கூறுவர் என்கிறார் சிவராமமூர்த்தி.[205]

பாண்டியர் காலத் திருமேனிகளில் முதன்மையானது பொருப்பு மேட்டுப்பட்டித் திருமேனி. இத்திருமேனி பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தது. இந்நடராசர் கால் மாறியாடுபவ ராகக் காட்சியளிக்கிறார். அதாவது இடக்காலை ஊன்றி வலக் காலை இடப்பக்கம் தூக்கி ஆடுகிறார். இவருக்கு நான்கு கைகள் உள்ளன. வலக்கைகளில் ஒன்று தீ ஏந்தியதாகவும், மற் றொன்று அபயக்கரமாகவும் உள்ளது. இடக்கைகளில் ஒன்று துடி ஏந்தியதாகவும், மற்றொன்று வேழ முத்திரையாகவும் உள்ளது. முயலகனும் இடப்பக்கம் நோக்கிப் படுத்திருக்கிறான். முயலகன் கவிழ்ந்து படுத்துக் கொண்டிருப்பதால், அவன் முதுகின்மேல் இடக்கால் நன்கு ஊன்றப்பட்டுள்ளது. விரித்த சடை இல்லை. பிரபை உடைந்து போயிருக்க வேண்டும். இந்நடராசர் ஆனந்த தாண்ட வடிவத்திற்கு மூல முன்மாதிரியாக இருக்கலாம் என்று கமில் சுவெலபில் கருதுகிறார்.[206] ஆனால், இலக்கியங்களில் ஆனந்த தாண்டவம் பற்றிய குறிப்புகள் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்பே காணப்படுகின்றன. அவை அடுத்த இயலில் விளக்கப்படு கின்றன. எனவே, கமில் சுவெலபிலின் கருத்துப் பொருத்தமற்றது என்பது புலனாகிறது.

திருச்சி மாவட்டத்தில் திருவாசி என்ற ஊர் உள்ளது. அதன் பழையபெயர் திருப்பாச்சிலாச்சிரமம்.அவ்வூரிலுள்ள இறைவனின் பெயர் மாற்றறி வரதர். இக்கோயிலில் நடராசரின் காலடியில் முயலகன் இல்லை; பாம்புதான் இருக்கிறது. இவ்வூரை ஆண்டு வந்த கொல்லிமழவன் என்ற தலைவனுடைய புதல்விக்கு முயலகன் என்ற நோய் உண்டாயிற்று. அதனைத் தீர்க்க அவன் என்ன முயன்றும் அது விலகவில்லை. திருஞானசம்பந்தர் இவ் வூருக்கு வந்தபொழுது, அத்தலைவன் வேண்டுகோளுக்கிணங்கி சம்பந்தர் பதிகம்பாடி அந்நோயை விலக்கினார் என்பது புராண வரலாறு. முயலகன் நோய் விலக்கப்பட்டுத் துரத்தப்படவே, இவ்வூர் நடராச மூர்த்தியிலிருந்தும் விலக்கப்பட்டதோ என்று ஐயமுற வேண்டியிருக்கிறது என்று ஸி. எம். இராமச்சந்திர செட்டியார் கருதுகிறார்.[207]

குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலில் சதுர தாண்டவத் திருமேனியுள்ளது. பிரபை இல்லை; காலடியில் முயலகன் இல்லை. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வலக்கால் விரலை அழுத்தி, இடக்காலை முழுவதும் ஊன்றியுள்ளார்; வேழ முத்திரைக் கை தொங்கிய நிலையில் உள்ளது; வலது தோள்

பட்டையில் பாம்பு காணப்படுகிறது; மாணிக்கவாசகர் திருமேனி உடனுள்ளது; இடப்பக்கம் திருமுறைகள் உள்ளன.

கடம்பர்கோயில் கடம்பவனேஸ்வரர் கோயிலில் முயலகனற்ற நடராசர் திருமேனியுள்ளது, அத்திருமேனியாவது பூமிக்கடியிலிருந்து கண்டெடுக்கப்பட்டது. அதன் பிரபை பாதிக்குமேல் உடைந்துள்ளது. அப்பிரபையில் மூன்று நாக்குகளுடன் ஆறு தீப்பிழம்புகள் இருபக்கமும் முறையே காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்டத்தில் அமைந்துள்ளது. இப்பிரபையின் மேலே பெரிய பிரபை ஒன்று செய்து வைக்கப்பட்டுள்ளது. அப்பிரபையானது வட்டவடிவமாகவும் இறுதியில் நீண்டும் உள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. நடராசரின் இருபக்கமும் சடாமகுடம் கட்டப்பட்டுள்ளது. சடாமகுடத்தில் வலப்பக்கம் பிறையுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. இடக்கால் வளைத்துத் தூக்கப்பட்டுள்ளது. கால்களில் சதங்கையுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள். இத்திருமேனியில் கழுத்திலுள்ள முத்து மாலை அசைந்தாடும் நிலையில் உள்ளது. நடராசர் நன்கு ஆடும் வேகத்தில் உள்ளதை இத்திருமேனியின் அமைப்பு அறிவிக்கிறது.

கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலில் கால் மாறியாடிய நடராசர் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையானது நீண்ட வட்ட வடிவில் அமைந்துள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. அப்பிரபையின் இடப்பக்கம் ஒரு தீப்பிழம்பு உடைந்துள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது; வலப் பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் வலக்கைகளில் ஒன்று அபயக் கரமாகத் திகழ்கிறது; மற்றவற்றில் உடுக்கை,சூலம், மழு, கத்தி ஆகியனவுள்ளன. இடக்கைகளில் ஒன்று வேழ முத்திரையாகவுள்ளது. மற்றவற்றில தீ, பாசம், தண்டம், கேடயம் ஆகியனவுள்ளன. அவருடைய வலக்கால் இறக்கித் தூக்கப்பட்டுள்ளது. இடக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை, தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள். பிரம்மா தாளம் போடுகிறார்; விஷ்ணு மத்

தளம் வாசிக்கிறார்; சரசுவதி வீணை வாசிக்கிறாள்; இந்திரன் புல்லாங்குழல் ஊதுகிறார்; இலட்சுமி கையால் தாளம் போடுகிறாள். இவையல்லாமல், அகத்தியர், பதஞ்சலி, வியாக்கிர பாதர், கணபதி, சுப்பிரமணியர் ஆகியோர் நடனத்தைக் காண்பதுபோல் திருமேனிகளை உடன் வைத்துள்ளனர்.

கொடுமுடி மகுடேசுவரர் கோயிலில் குஞ்சித நடராசர் என அழைக்கப்படும் சதுர தாண்டவத் திருமேனி காணப்படுகிறது. நடராசர், சிவகாமி திருமேனிகள் பிரபையின்றி உள்ளன. சடாமகுடத்தில் பாம்பு, பிறை, ஊமத்தம்பூ ஆகியன காணப்படுகின்றன. ஆடல்வல்லானின் இடக்கையில் ஓரகலில் தீயும், வலக்கையில் உடுக்கையும் உள்ளன; வலக்கால் விரல்களை மட்டும் தரையில் ஊன்றியுள்ளார். இடக்கால் பாதம் முழுவதும் தரையில் ஊன்றப்பட்டுள்ளது; அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; அபயக்கரத்திற்கும் வேழ முத்திரைக்கும் இடைவெளியுள்ளது. தோள்பட்டையில் பாம்புள்ளது; முத்துமாலை கழுத்தை அணி செய்கிறது.

இதுவரை நடராசர் வழிபாட்டின் முக்கிய அம்சமான பல்வேறு ஆடல் திருமேனிகளின் அமைப்பும் அழகும் விளக்கப்பட்டன. ஆனந்த தாண்டவத் திருமேனிகளின் அமைப்பும் அழகும் அடுத்த இயலில் விளக்கப்படுகின்றன.

## முடிவுரை

தமிழகத்தில் சிவவழிபாடு காலந்தோறும் இருந்து வந்துள்ளது. சிவபெருமானின் இருபத்தைந்து உருவத் திருமேனிகளில் முதன்மையானது நடராசர் திருமேனி. அத்தகைய திருமேனியின் தோற்றமும் வளர்ச்சியுமே விளக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்திலும் சிவனுடைய உருவ அமைப்பு, பெயர்கள்தான் சுட்டப்பட்டுள்ளன; சிவவழிபாடு பற்றிக் குறிக்கப்பெறவில்லை; 'சிவன்' என்ற சொல்லாட்சியும் இடம் பெறவில்லை. சிவபெருமானின் பல்வேறு மூர்த்தங்களைப் பற்றிய செய்திகளைச் சங்ககாலத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். இவையல்லாமல், 'ஆடல்வல்லான்' கோலத்தைப் பற்றிய கதைகளும் சங்ககாலப் பிற்பகுதியில் வழங்கப்பெற்றன.

ஆடல்கோலத்தில் அருள்புரியும் சிவபெருமானுக்குப் பலவகையான பெயர்கள் இன்று வழங்கப்படுகின்றன. அவற்றுள் 'ஆடல்வல்லான்' என்ற பெயரே மிகப் பழைய பெயராகும்.

ஆடல் என்ற சொல்லிற்குக் கூத்து, நடஞ்செய்தல் என்ற பொருள்களே கொள்ளப்பட்டன.

காலந்தோறும் கூத்துகள் வளர்ச்சியுற்று வந்தன.

காபாலக் கூத்து, இறைவன் ஆடும் இடத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

சோழர்கள் காலத்தில் 'ஆடவல்லான்' என்ற பெயர் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது.

தேவாரப் பாடல்களில் இறைவனின் ஆடல்கள்தான் சுட்டப் பட்டுள்ளன; பெரும்பாலானவற்றின் பெயர்கள் குறிப்பிடப்பட வில்லை.

மாலை வேளையில் ஆடப்பட்ட ஆடல், 'சந்தியா தாண்டவம்' என்று வடமொழியிலும், 'அந்தி நிருத்தம்' என்று தமிழிலும் அழைக்கப்படுகிறது.

திருநாவுக்கரசர் குறிப்பிட்ட சதுர நடமே, இன்று வழக்கிலுள்ள சதுர தாண்டவமாகும்.

சுடுகாட்டில் ஆடும் ஆடல், இருளில் ஆடும் ஆடல் ஆகிய இரண்டும் இணைக்கப்பட்டு, பிற்காலத்தில் சங்கார தாண்டவமாக உருவாக்கப் பெற்றது.

'அந்தி நிருத்தம்' பற்றிய குறிப்புகளைக் கண்டு, பிற்காலத்தில் ஒரு புராணக்கதை கற்பிக்கப்பட்டது. அதுவே இன்று சந்தியா தாண்டவம் என்றும், பிரதோஷ நடனம் என்றும் அழைக்கப் படுகிறது.

உமையஞ்ச ஆடும் ஆடல், உமா தாண்டவமாகும். வழக்கமாக இறைவன் ஆடும் ஆடலிலிருந்து, இவ்வாடல் மாறுபட்டது.

உமை காண ஆடிய ஆடலே, பிற்காலத்தில் கௌரி தாண்டவம் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும்.

காளி காண ஆடிய ஆடலே, ஊர்த்துவத் தாண்டவமாகும்.

இறைவனின், பிற ஆடல்களின் மூலமும், அவன் ஆடல்வல்லானாகப் போற்றப்பட்டான்.

சங்ககால முதலே ஆடலோடு இணைந்து கூத்து என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது. கூத்தின் ஒரு கூறே குதித்து

ஆந்தல். எனவே குதித்தல் அடிப்படையில் கூத்து என்ற சொல் பிறந்திருக்க முடியாது.

சங்ககாலந்தொட்டே கூத்துக் கலையில் சிறந்து விளங்கிய கூத்தர்களும் வாழ்ந்தனர். கூத்தன் என்ற பெயரை இறுதியில் கொண்ட புலவர்களும், அக்காலத்தில் இருந்தனர்.

பல்லவர் கால இலக்கியங்களில் கூத்தன் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. ஆனால், பல்லவர் கால கல்வெட்டுகளில் 'கூத்தன்' என்ற சொல்லாட்சி இடம்பெறவில்லை.

ஆடல்வல்லான் என்ற சொல்லாட்சிக்குப்பின் கூத்தப் பெருமான் என்ற சொல் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது.

நிருத்தம் என்ற சொல் காரைக்காலம்மையார் கால முதலே வழக்கில் உள்ளது. ஆனால், நிருத்தன் என்ற சொல் ஏழாம் நூற்றாண்டு முதலே இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது.

அம்பலத்தில் சிறந்து விளங்குபவன் அம்பலவாணன் ஆவான். அம்பலம் என்ற சொல், கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதி முதலே, இலக்கியங்களில் இடம் பெற்றுவிட்டது. ஆனால், அம்பலத்தில் ஆடும் இறைவனை, அம்பலவாணனாக, இலக்கிய வாணர்கள் கண்டது கி.பி. எட்டாம் நூற்றாண்டில்தான்.

ஆடல்வல்லான், கூத்தப்பெருமான் என்ற சொல்லாட்சி களைக் கண்ட வடமொழிவாணர்கள் நடனம் என்ற சொல்லை, அதற்கு இணையாகக் கொண்டனர். இதன்மூலம், 'நடராசர்' என்ற சொல்லை உருவாக்கினர். நடராசர் என்பதற்கு நடனம் ஆடுவதில் அரசன் என்று பொருள். இன்று, இச்சொல்லே எல்லா இடங்களிலும் வழக்கில் உள்ளது. இச்சொல், கி.பி. பதிமூன்றாம் நூற்றாண்டு முதலே இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

தெய்வத்தின் முன்னர் ஆடியவர்கள், அத்தெய்வமே தமக்கு முன்னோடியாக இருந்து ஆடுவதாகக் கருதினர். அதன் விளை வாகவே, 'ஆடல்வல்லான்' தோற்றம் பெற்றான்.

இறைவனை, அழித்தல் தொழிலைப் புரிபவனாகக் கருதிய வர்கள், அச்செயலைச் சுடுகாட்டில் புரிவதாகக் கூறினர். எனவே, சுடுகாட்டில் ஆடிப்பாடிய சடங்கிலிருந்து ஊழிக்கூத்து தோன்றியிருக்க வேண்டும்.

சிந்துவெளி காலத்திலேயே ஆடல்வல்லானின் வழிபாடு தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

காஞ்சிபுரத்தில் கைலாசநாதர் கோயிலில் உள்ள சிற்பங்கள் மண்ணாலே செய்யப்பட்டவை.

ஐஹோலிலும், பாதாமியிலும் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தான் நடராசர் சிற்பங்கள் தோன்றியுள்ளன. தமிழ்நாட்டி லிருந்துதான் நடராசர் வழிபாடு, வடஇந்தியாவில் பரவியது.

காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலிலும், மாதங்கேசுவரர் கோயிலிலும், ஐராவதீஸ்வரர் கோயிலிலும் ஊர்த்துவத் தாண்டவச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலிலும், முக்தேசுவரர் கோயிலிலும் சங்கார தாண்டவச் சிற்பங்கள் இடம்பெற் றுள்ளன.

காஞ்சிபுரம் முக்தேசுவரர் கோயிலிலும், திருமலைப்புரம் குகைக்கோயிலிலும், திருப்பரங்குன்றம் குகைக்கோயிலிலும், குன்றக்குடி குகைக்கோயிலிலும் சதுர தாண்டவச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

முக்தேசுவரர் கோயிலில் யானையை அழித்து ஆடும் சிற்பம் உள்ளது.

கைலாசநாதர் கோயிலில் வலக்காலை மடித்தும், இடக் காலில் முட்டியிட்டும் ஆடும் நிலையில் ஒரு சிற்பம் உள்ளது.

சீனிவாச நல்லூர் குரங்குநாதர் ஆலயத்தில் வலக்காலை உயர்த்தி ஆடும் சிற்பம் உள்ளது.

முதலாம் இராசராசன் காலத்தில்தான் நடராசருக்குத் தனிச்சந்நிதி அமைக்கப்பட்டது. இன்றும் எல்லாக் கோயில் களிலும் நடராசருக்குத் தனிச்சந்நிதி அமைக்கப்படுகின்றது.

இன்று கிடைத்திருக்கும் ஆடல்வல்லான் திருமேனிகளில் கூரம் நடராசர் திருமேனிதான் முதன்மையானது. இத்திருமேனி யில் நடராசர் இடக்காலை உயரத் தூக்கியாடுகிறார்.

திருநல்லூர் கலியாணசுந்தரேசுவரர் கோயிலின் நடராசரும் இடக்காலை மடித்து உயர்த்தி ஆடுகிறார்.

பொருப்புமேட்டுப்பட்டித் திருமேனி, கால் மாறியாடும் நிலையில் உள்ளது.

திருவாசி மாற்றறிவரதர் கோயிலில் நடராசரின் காலடியில் முயலகன் கிடையாது; பாம்புதான் உள்ளது.

குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலில் சதுர தாண்டவத் திருமேனியுள்ளது.

கடம்பர்கோயில் கடம்பவனேசுவரர் கோயிலில் முயலகனற்ற நடராசர் திருமேனியுள்ளது.

கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலில் கால் மாறியாடிய நடராசர் திருமேனியுள்ளது.

கொடுமுடி மகுடேசுவரர் கோயிலில் சதுர தாண்டவத் திருமேனியுள்ளது.

இவ்வாறாக, சிந்துவெளி காலத்திலும், பழந்தமிழ் இலக்கியங்களிலும் தமிழகத்தில் கால்கொண்ட நடராசர் வழிபாட்டின் தோற்றம் ஆடல்வல்லானாக கூத்தப்பெருமானாகத் திகழ்ந்தது. இது சிற்பங்களிலும், திருமேனிகளிலும் வளர்ச்சியடைந்த விதம் இவ்வியலில் விளக்கப்பட்டது.

## குறிப்புகள்

1. ந.சி. கந்தையா பிள்ளை, சிவன், ப. 22-34.
2. Sir John Marshall, Mohenjodaro and the Indus Civilization Vol. I, p. 59.
3. சி. சத்தியமூர்த்தி, சிவலிங்க வழிபாடு, ப. 50.
4. புறநானூறு, பா. 198:9; கலித்தொகை, பா. 81:9; சிறுபாணாற்றுப்படை, அடிகள் 96-7.
5. புறநானூறு, பா. 91:6.
6. மேற்படி, பா. 6:18; அகநானூறு, பா. 181:16.
7. கலித்தொகை, பா.2:4; 104:12; திருமுருகாற்றுப் படை, அடி. 153.
8. புறநானூறு, பா. 166:2.
9. மேற்படி, பா. 166:1; கலித்தொகை, பா. 38:1.
10. புறநானூறு, பா. 1:1.
11. மேற்படி, பா. 1:9; 55:5; கலித்தொகை, பா. 103: 25.
12. கலித்தொகை, பா. 1:2; பரிபாடல், பா. 9:6.
13. கலித்தொகை, பா. 1:1; புறநானூறு, பா. 166:4.
14. புறநானூறு, பா. 56:2; கலித்தொகை, பா. 2:6; 101:8; 103:25; மதுரைக் காஞ்சி, அடி 455.
15. கலித்தொகை, பா. 1:4.
16. மேற்படி, பா. 1:11.
17. புறநானூறு, பா. 1:7; ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து, அடிகள் 1-2.

18. புறநானூறு, பா. 1:3; 56:1; திருமுருகாற்றுப்படை, அடிகள் 151-2.

19. திருமந்திரம், பா. 1626.

20. மணிமேகலை, 27:86.

21. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, பா. 10, 24.

22. சிலப்பதிகாரம், 5:169; 14:7.

23. மணிமேகலை, 1:54-55.

24. (i) ஆலமர் கடவுள்—புறநானூறு, பா. 198:9.
முக்கட்செல்வன் ஆலமுற்றம்—அகநானூறு, பா. 181:16-17.
ஆலமர் செல்வன்—கலித்தொகை, பா. 81:9; சிறுபாணாற்றுப்படை, அடிகள் 96-7.

(ii) நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்—ஐங்குறுநூறு, கடவுள் வாழ்த்து, அடிகள் 1-2.

25. கலித்தொகை, கடவுள் வாழ்த்துப் பாடல்.

26. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, ப. 218.

27. ஞா. தேவநேயன், வேர்ச்சொற் கட்டுரைகள், பக். 75-76.

28. D.E.D., p. 347.

29. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 203.

30. கழகத் தமிழ் அகராதி, ப. 72.

31. செந்தமிழ் அகராதி, ப. 36.

32. கூத்தநூல், தொகை நூல், சூ. 1.

33. பதிற்றுப்பத்து, பா. 56.

34. மேற்படி உரை, ப. 493.

35. கலித்தொகை, கடவுள் வாழ்த்துப் பாடல், அடிகள் 5-13.

36. பிங்கல நிகண்டு, சூ. 1447.

37. திருமந்திரம், பா. 2687.

38. மேற்படி. ப. 1108.

39. அ.ச. ஞானசம்பந்தன், பெரியபுராணம் ஓர் ஆய்வு, ப. 114.

40. கலித்தொகை, நச்சினார்க்கினியர் மேற்கோள் பாடல், ப. 3.

41. சிலப்பதிகாரம், 3:14.

42. மேற்படி, 28:65-75.

43. மேற்படி, ப. 89.

44. திருஞானசம்பந்தர் தேவாரம், 3:52:2.

45. திருநாவுக்கரசர் தேவாரம், 6:35:5.

46. சுந்தரர் தேவாரம், நமக்கடிகளாகிய அடிகள், பா. 5.

47. கலித்தொகை, நச்சினார்க்கினியர் மேற்கோள் பாடல்' பக். 3-4.

48. சிலப்பதிகாரம், 6: 44-45.

49. மேற்படி, ப. 89.

50. திருஞானசம்பந்தர், மு. கு. நூ., 1:60: 1.

51. திருநாவுக்கரசர், மு. கு. நூ., 6:73:7.

52. சுந்தரர், மு. கு. நூ., திருநன்னிலத்துப் பெருங்கோயில், பா. 1.

53. திருஞானசம்பந்தர், மு. கு. நூ., 2:67:3.

54. திருநாவுக்கரசர், மு. கு. நூ., 5:2:3.

55. சுந்தரர், மு. கு. நூ., திருவொற்றியூர் II, பா. 5.

56. சேக்கிழார், பெரியபுராணம், காரைக்காலம்மையார் புராணம், பா. 60.

57. திருநாவுக்கரசர், மூ.கு நூ.,4:23:1.

58. கண்டராதித்தர், திருவிசைப்பா, பா. 3.

59. திருஞானசம்பந்தர், மூ.கு.நூ., 1:27:9; 1:29:4.

60. மேற்படி.2:51:3.

61. திருநாவுக்கரசர், மூ.கு.நூ., 6:19:4.

62. மேற்படி,4:17:7.

63. சுந்தரர், மூ.கு.நூ., திருவெஞ்சமாக்கூடல், பா. 6, 7.

64. மேற்படி, திருப்பனையூர், பா.7.

65. சேக்கிழார்,மூ.கு.நூ., ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், பா.53.

66. திருமந்திரம், பா.2055.

67. ARE 186/1925.

68. Ibid 392/1909.

69. Ibid 181/1928-29.

70. Ibid 178/1961-62.

71. Ibid 265/1955-56.

72. Ibid 444/1924.

73. S.I.I., Vol. II, Pt. 1, P. 42.

74. Ibid P.2.

75. காரைக்காலம்மையார், மூத்த திருப்பதிகம், பா.7.

76. திருநாவுக்கரசர், மூ.கு.நூ., 6:75:9.

77. மேற்படி, 5:93:2.

78. மாணிக்கவாசகர், 8:24:3.

79. மேற்படி 8:43:10.

80. காரைக்காலம்மையார், மு.கு.நூ., ப. 1.

81. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 1:45:2.

82. மேற்படி, 1:15:3.

83. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 4:68:6.

84. மேற்படி, 6:78:7.

85. சுந்தரர், மு.கு.நூ. திருவாலங்காடு, பா.9.

86. மாணிக்கவாசகர், 8:5:7.

87. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 1:15:4.

88. மேற்படி, 3:102:7.

89. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 5:34:6.

90. மேற்படி, 6:32:5.

91. சுந்தரர், மு.கு.நூ., திருப்பூவணம், பா. 3.

92. மேற்படி, முடிப்பது கங்கை, பா. 4.

93. மாணிக்கவாசகர், 8:1:89.

94. மேற்படி, 8:3:102.

95. திருவிசைப்பா, திருச்சாட்டியக்குடி, பா. 4.

96. மேற்படி, திருவிடைமருதூர், பா. 6.

97. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 1:24:2.

98. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 4:17:7.

99. காரைக்காலம்மையார், மு.கு.நூ., பா.8.

100. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 3:21:3.

101. திருவிசைப்பா, கோயில், பா. 3.

102. ஸ்ரீதத்துவநிதி, ப. 247.

103. திருமந்திரம், பா. 174.

104. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 3:9:7.

105. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 4:8:3.

106. சுந்தரர், மு.கு.நூ., வடதிருமுல்லைவாயில், பா. 2.

107. நக்கீரர், திருவெழுகூற்றிருக்கை, அடிகள் 49-50.

108. திருஞானசம்பந்தர், மு கு.நூ., 1:41:5.

109. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 4:68:8.

110. மாணிக்கவாசகர் 8:2:142-44.

111. சுந்தரர், மு.கு நூ., திருவாவடுதுறை, பா.4.

112. காரைக்காலம்மையார், மு.கு.நூ., பா. 4.

113. ARE 482/1905

114. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 1:46:1-10; 2:12:7; 1:80:10; 1:6:1-10.

115. மேற்படி, 2:4:3; 2:32:5; 1:49:8; 1:3:8; 1:53:8.

116. திருநாவுக்கரசர், மு.கு.நூ., I 6:90:9; II 4:14:4; III 4:53:10; IV 5:1:1; 4:68:8; 4:44:8; 4:81:7.

117. மேற்படி, 4:80:1-10; 4:23:1-10.

118. சுந்தரர், மு.கு.நூ., I கோயில், பா. 1; திருப்பனையூர், பா. 1; II திருக்கச்சி அனேகதங்காவதம், பா. 1.

119. மாணிக்கவாசகர், 8:39:3, 8:13:7, 8:13:18.

120. திருமாளிகைத்தேவர், கோயில், பா. 1, திருவாலியமுதனார், பா. 1, கருவூர்த்தேவர், பா. 1, புருடோத்தமநம்பி, பா. 1, பூந்துருத்தி நம்பிகாடநம்பி, பா. 1, கண்டராதித்தர், பா. 1, சேதிராயர், பா. 1, வேணாட்டடிகள், பா. 1.

121. பட்டணத்துப் பிள்ளையார், கோயினான்மணிமாலை, பா. 20; நம்பியாண்டார் நம்பி, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், பா. 13.

122. வீ.ப.கா. சுந்தரம், 'கூத்து—இதற்கு வேர்ச்சொல் எது?' செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு 56, பரல் 7, மார்ச் 1982, ப. 335.

123. கூத்தநூல், தொகைநூல், சூ. 18.

124. உறையூர் முதுகூத்தன், உறையூர் முதுகூத்தனார், மதுரைத் தமிழக்கூத்தன் கடுவன் மள்ளனார், மதுரைத் தமிழக் கூத்தனார் கடுவன் மள்ளனார், மதுரை இளம் பாலாசிரியன் சேந்தங்கூத்தன், மதுரை இளம்பாலாசிரி யன் சேந்தன் கூத்தனார், மதுரைக் காருலவியங் கூத்தனார், மதுரைக் கூத்தனார், மதுரைத் தமிழக் கூத்தன் நாகன் தேவனார், மதுரைத் தமிழக் கூத் தனார், முதுகூத்தனார், வேம்பற்றூர் கண்ணன் கூத்தன்-12 பேர்.

125. திருமந்திரம், பா. 155.

126. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., 2:104:8.

127. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 6:56:4.

128. சுந்தரர், மு.கு.நூ., திருக்கோலக்கா, பா. 4.

129. மாணிக்கவாசகர், 8:9:12.

130. திருமாளிகைத்தேவர், 'கோயில்—உறவாகிய யோகம்', பா. 1.

131. சேந்தனார், திருவிடைக்கழி, பா. 4.

132. திருவாலியமுதனார், 'கோயில்—பாதாதிகேசம்', பா. 2.

133. புருடோத்தமநம்பி, கோயில், பா. 4.

134. நக்கீரர், கைலைபாதி காளத்தி பாதியந்தாதி, பா. 68.

135. பட்டணத்துப் பிள்ளையார், மு.கு.நூ., பா. 28.

136. நம்பியாண்டார்நம்பி, மு.கு.நூ., பா. 13.

137. சேக்கிழார், மு.கு.நூ., திருநாளைப்போவார் நாய னார் புராணம், பா. 36.

138. ARE 442/1922.

139. Ibid *121/1926.*

140. Ibid *163/1928-29.*

141. Ibid *488/1922.*

142. Ibid *375/1908.*

143. Ibid *222/1925.*

144. Ibid *55/1925.*

145. Ibid *281/1923.*

146. Ibid *45/1928-29.*

147. Ibid *297/1927-28.*

148. Ibid *99/1908.*

149. Ibid *325/1923.*

150. Ibid *2/1928-29.*

151. Ibid *305/1927-28.*

152. Ibid *216/1914.*

153. Ibid *447/1929-30.*

154. Ibid *197/1914, 71/1916.*

155. Ibid *218/1908.*

156. S.I.I., Vol.IV, p. *33.*

157. க.த. திருநாவுக்கரசு, வரலாற்று வஞ்சி, ப. 28.

158. காரைக்காலம்மையார், மு.கு நூ., பா. 7.

159. திருமந்திரம், பா. 2704.

160. திருஞானசம்பந்தர், மு.கு.நூ., *1:134:1.*

161. மேற்படி, *3:29:2.*

162. திருநாவுக்கரசர், மு.கு.நூ., *4:22:9.*

163. மேற்படி, *4:71:3.*

164. சுந்தரர், மு.கு.நூ., திருக்கழுமலம், பா. 3.

165. மாணிக்கவாசகர், 8:29:2.

166. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம், வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம், பா. 21.

167. மேற்படி, இரசவாதஞ் செய்த படலம், பா. 26.

168. சேக்கிழார், மு.கு.நூ., ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், பா. 168.

169. மேற்படி, கழறிற்றறிவார் புராணம், பா. 133.

170. உமாபதிசிவம், கோயிற்புராணம், நடராசச் சருக்கம், பா. 10.

171. சுந்தரர், மு.கு.நூ., திருக்கச்சி அனேகதங்காவதம், பா. 2.

172. பட்டணத்துப் பிள்ளையார், மு.கு.நூ., பா. 4.

173. சேக்கிழார், மு.கு.நூ., எறிபத்த நாயனார் புராணம், பா. 38.

174. உமாபதிசிவம், சேக்கிழார் சுவாமிகள் புராணம், பா. 29.

175. மேற்படி, கோயிற்புராணம், பாயிரம், பா. 13.

176. மேற்படி, சேக்கிழார் சுவாமிகள் புராணம், பா. 97.

177. இரட்டைப்புலவர், தில்லைக் கலம்பகம், பா. 30.

178. குமரகுருபரர், சிதம்பரச் செய்யுட்கோவை, பா. 63.

179. கச்சியப்ப முனிவர், பேரூர்ப் புராணம், வடகயிலாயப் படலம், பா. 43.

180. திரிகூடராசப்பக் கவிராயர், திருக்குற்றாலத் தலபுராணம், கடவுள் வணக்கம், பா. 6.

181. இராமலிங்க அடிகள், திருவருட்பா, பா. 5108.

182. கார்த்திகா கணேசர், காலந்தோறும் நாட்டியக்கலை, ப. 18.

183. கா. கைலாசநாதக் குருக்கள், இந்துப் பண்பாடு சில சிந்தனைகள், பக். 39-42.

184. டாக்டர் க.த. திருநாவுக்கரசு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு, ப. 198.

185. டாக்டர் வே. ராகவன், நாட்டியக்கலை, ப.2.

186. மேற்படி.

187. C. Sivaramamurti, Nataraja in Art, Thought and Literature,pp. 353-355.

188. தண்டபாணி தேசிகர், ஆடல்வல்லான், ப. 76.

189. க. சி. கமலையா, தமிழகக் கலை வரலாறு, பக். 81-82.

190. பி.ஸ்ரீ., தில்லைத் திருநடனம், ப. 24.

191. B. Natarajan, The City of the Cosmic Dance—Chidambaram, p. 66.

192. Ibid p.9.

193. Sir John Marshall, Op. Cit., Vol. I, p. 46.

194. டாக்டர் மா. இராசமாணிக்கனார், சைவசமயம், ப.9.

195. Kamil V. Zvelebil, Ananda-Tandava of Siva-Sada Nrittamurti, p. 15.

196. Ibid p. 16.

197. C. Sivaramamurti, Op. Cit., p. 179.

198. Kamil V. Zvelebil, Op. Cit., p. 17.

199. Ananda C. Coomaraswamy, Introduction to Indian Art, p. 62.

200. Kamil V. Zvelebil, Op. Cit., pp. 14-15.

201. C. Sivaramamurti, Op. Cit., p. 170.

202. Ibid p. 203.

203. Ibid p. 210.

204. Ibid p. 202.

205. Ibid p. 203.

206. Kamil V. Zvelebil, Op. Cit., p. 22.

207. ராவ்பகதூர் ஸி.எம். இராமச்சந்திர செட்டியார், 'கூத்தாடு தேவர்', **சித்தாந்தம்** ஆகஸ்டு, 1940, ப. 324.

இயல் 2

# எழுவகைத் தாண்டவங்களுள் ஆனந்த தாண்டவம் பெறுமிடம்

தமிழிலுள்ள கலைகள் அறுபத்து நான்கு. இதனை, 'எண்ணெண் கலையும்' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.[1] அவற்றுள் ஒன்றே ஆடற்கலை. அதுவே கூத்து, தாண்டவம், நடனம் முதலான பெயர்களில் அழைக்கப்படுகிறது. அவ்வாடலில் சிறந்து விளங்கிய ஆடல்வல்லானின் தோற்றமும் வளர்ச்சியுமே சென்ற இயலில் விளக்கப்பட்டன. இவ்வியலில் அவ்விறைவனின் பல நிலைகளைப் புலப்படுத்தும் தாண்டவங்கள் ஆராயப்படு கின்றன.

**தாண்டவம் : சொல்லும் பொருளும்**

தாண்டவம் என்பதற்குப் பலர் பலவிதமான விளக்கங்களைக் கூறியுள்ளனர். 'தட்' என்று நிலத்தைத் தட்டுவது, அடிப்பது என்ற வினைச்சொல்லில் இருந்து வந்தது என்பார் ஒரு சாரார். தண்டு முனிவர் தந்தது என்பது மற்றொரு சாரார் கருத்து. தாண்டகம் என்பது ஒருவகைப் பாவகையின் பெயர்; அந்தப் பாட்டிற்கேற்ப ஆடப்படும் ஆட்டம் தாண்டவம் எனப்படும் என்பது பிறிதொருவர் கூற்று. இக்குறிப்புகளைக் கலைக் களஞ்சி யம் கொடுக்கிறது.[2]

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி தாண்டவம் என்பதற்குத் தாவுகை, செலுத்துகை, கூத்துவகை என்ற பொருள்களைத் தருகிறது.[3] செந்தமிழ் அகராதி தாவுகை, கூத்து வகை என்ற பொருள்களைச் செப்புகிறது.[4] தாவல், கூத்து, செலுத்தல் என்ற பொருள்களைப் பகருகிறது பிங்கலநிகண்டு.[5]

தாள் தவம் என்பது தாண்டவமாகி இருக்கலாம் என்று சந்திரன் என்பவர் கூறும் கருத்தை இரா. கலைக்கோவனும், இரா. வளர் மதியும் ஏற்கின்றனர்.[6]

மேற்கண்டவற்றில் இருந்து தாண்டவம் என்பது எந்தப் பொருளைக் குறிக்கிறது என்ற வினா எழுகிறது. நாம் ஒரு நாளில் பல தடவைகள் காலைத் தரையில் தட்டுகிறோம். எனவே, நிலத்தைத் தட்டுவதால் மட்டும் அது தாண்டவமாகி விடாது. தண்டு முனிவர் கூறியதால் அது தாண்டவமாகிறது என்பது வடமொழி நூல் கருத்து. ஆகவே, அது தமிழ்மொழிக்குப் பொருந்தாது. இக்கருத்திற்கு ஆதாரமாக, நாட்டிய சாஸ்தி ரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் பதிப்பித்த மனோ மோகன்கோஷ் கருத்தும் திகழ்கிறது. அவர் தாண்டவம பற்றிய அடிக்குறிப்பில், தண்டு முனிவர் எனும் பெயர் வழக்கிலுள்ள புராணங்கள் ஒன்றிலும் காணப்படவில்லை. தண்டு முனிவர் ஆடியதால் தாண்டவம் என்பதைவிட, தாண்டவம் எனும் சொல் நடனத்தைக் குறிக்கும் ஆரியமொழி அல்லாத ஒரு சொல் எனக் கொள்வதே பொருத்தம் என்கிறார்.[7] இக்கருத்தினையே கார்த்திகாகணேசர் குறித்திருப்பதும் இங்கே கருதத்தக்கது.[8]

தாண்டகம் என்பது பாவினங்களுள் ஒன்று. அதன் பெயரால் ஓர் ஆடலின் பெயரை வழங்குவதும் பொருத்தமற்றது. தாள் தவம் என்பது தாண்டவமானது என்று கூறுவது இலக்கணப்படிப் பொருந்தாது. வேற்றுமைக்கண் ளகார ஈற்றுப் பெயர் ணகார ஈற்றின் இயல்பிற்றாய், வன்கணம் வந்துழி டகாரமாய்த் திரிந்து முடியும் என்பது தொல்காப்பிய நூற்பாவின் கருத்து.[9] வேற்று மையில் ளகரமாகிய மெய்யீறு வல்லினம் வந்தால் டகரமாகத் திரியும் என்கிறது நன்னூல் நூற்பா.[10] எனவே, தாள் தவம் என்பது தாட்டவம் என்றாகும்; தாண்டவமாகாது.

ஆடல்வல்லானின் ஒவ்வொரு தாண்டவமும் ஓர் இடத்தில் நிலையாக நின்று ஆடுவதைக் குறிப்பதில்லை; முன்னும் பின்னும் குதித்து—தாவி—தாண்டி. ஆடுவதைத்தான் குறிக்கிறது. எனவே, தாண்டவம் என்பதற்குத் தாண்டித் தாண்டி ஆடுவது என்ற பொருள்தான் பொருந்தி வருகிறது. மேலும், தாண்டு என்ற திராவிடமொழிச் சொல்லினை வேரடியாகக் கொண்டு, 'தாண்ட வம்' என்ற சொல் பிறந்தது என்பதும் இங்கே நினைவுகூரத் தக்கது[11] இதே கருத்தினைக் கொண்டவராக கமில் வி. சுவெபி லும் திகழ்கின்றார்.[12]

## சொல்லாட்சி

சங்க இலக்கியத்தில் தாண்டவம் என்ற சொல் இடம்பெற வில்லை. திருமூலர்தான் முதன்முதலில் 'தாண்டவமான தனி யெழுத்து' என்று தம் பாடலில் பயன்படுத்துகிறார்.[13] திருமூல ருக்கு அடுத்து, சேக்கிழார்தான், பெரியபுராணத்தில் 'தனிப் பெருந் தாண்டவம் புரிய' என்று குறிப்பிட்டுள்ளார்.[14] சேக்கிழா ருக்குப்பின் 'தாண்டவம்' என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. 'தில்லை வனத்தினனவறு நீயும் தாண்டவங் காண்டிர்' எனக் கோயிற்புராணமும்,[15] 'தமனியப் பொதுவிற் றாண்டவம் புரிதில்லைவாண' எனச் சிதம்பரச் செய்யுட் கோவையும்,[16] 'தக்க நற்சொக்கன் சொக்கத் தாண்ட வம் புரிந்தான்' எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமும்,[17] நிருத்தமாகிய தாண்டவ மகமார்க்க நிகழ்ந்திடும்' எனத் திருவிளையாடற்புராணமும்,[18] 'அனவரத தாண்டவ நாமாடிக் காட்டும்' எனப் பேரூர்ப்புராணமும்,[19] 'சித்திரச் சபைக்கே தாண்டவம் பணிவார்' எனத் திருக்குற்றாலத் தல புராணமும்,[20] 'ஆனந்தத் தாண்டவமாடும் பதத்திற்கே' எனத் திருவருட்பாவும்[21] தாண்டவம் என்ற சொல்லைப் பயன்படுத்தி யுள்ளன. இதன்மூலம், பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் இச்சொல் பெருவழக்குப் பெற்றுள்ளதை அறியமுடி கிறது.

## தாண்டவமும் கூத்து ஒன்றா?

தாண்டவம் என்ற சொல் முதன்முதலில் திருமூலர் காலத்தில் தான் பயன்படுத்தப்பட்டது என்பது முன்னரே விளக்கப்பட்டது. ஆனால், அதற்கு இணையான 'கூத்து' என்ற சொல் சங்க காலத்திலேயே பெருவழக்குப் பெற்று விளங்கியதை இலக்கியங் களின் வழி அறியமுடிகிறது. ஒரு காலத்தில் தோற்றம் பெற்ற கருத்தோ அல்லது இலக்கியமோ அக்காலத்திலேயே எல்லோரா லும் ஏற்றுப் போற்றப் பெறுவதில்லை. அது வழக்கில் இடம் பெறப் பல ஆண்டுகள் கூட ஆகலாம். அதுபோலவே, திருமூலர் காலத்தில் தோற்றம் பெற்ற தாண்டவம் என்ற சொல், சேக்கி ழார் காலத்தில்தான் பெருவழக்குப் பெற்றது.

சங்ககாலத்தில் ஆடல்புரிபவர்கள் எல்லாம் கூத்தர் என்று அழைக்கப்பட்டனர். அவர்களின் ஆடல் வேத்தியல், பொதுவியல் என்று இருபிரிவாகப் பிரிக்கப்பட்டது. அதாவது அரசன் முன்

ஆடும் ஆடல் வேத்தியல் என்றும், பொதுமக்களின் முன் ஆடியவை பொதுவியல் என்றும் வழங்கப்பட்டன. அக்காலத்தில் தெய்வத்திற்கு இணையாக அரசனும் கருதப்பட்டான். இருவர் வாழுமிடமும் 'கோயில்' என்று அழைக்கப்பட்டது. அரசன் வீற்றிருக்கும் அரண்மனையைப்போல் தெய்வங்களுக்கும் கோயில் அமைக்கப்பட்டது என்ற கா. கைலாசநாதக் குருக்களின் கருத்து முதல் இயலிலே கூறப்பட்டது. இந்நிலை மாறி, மனிதனைவிட தெய்வத்திற்கு உயர்ந்தநிலை கொடுத்த பொழுது, இறைவன் ஆடிய கூத்து தாண்டவமாயிற்று. மேலும், இறைவனைக் 'கூத்தன்' என்று அழைத்ததும், அவன் மக்களில் வேறுபட்டவன் என்பதைச் சுட்டவில்லை. இதன்மூலம், 'தாண்டவம்' என்ற சொல்லாட்சி பிற்கால வழக்கு என்பதும், தாண்டவமும் கூத்தும் ஒன்று என்பதும் பெறப்படுகிறது.

**தாண்டவத்தின் இயல்புகள்**

நிருத்தம், நிருத்தியம், நாட்டியம், தாண்டவம் என்பன ஒன்றுபோல் காணப்பட்டாலும், அவற்றிடையே சிற்சில வேறுபாடுகள் நிலவுகின்றன. இசைக்கும் தாள இலயத்திற்கும் ஏற்ப ஆடுவது நிருத்தம். இவற்றில் வெறும் ஒலிகளே இடம் பெறும்; பொருள் பொதிந்த சொற்கள் இராது. இந்தத் தூய ஆட்டத்துடன் முகபாவம், கைமுத்திரை போன்ற அபிநயங்கள் சேரும்போது நிருத்தியமாகிறது. நிருத்தியத்துடன் ஏதேனும் ஒரு கதையைச் சேர்த்து ஆடும்போது, அது கூத்து அல்லது நாடகம் எனப்படுகிறது. இதுவே, வடமொழியில் 'நாட்டியம்' என அழைக்கப்படுகிறது.

> ''வீர கோப ரௌத்திர ரசங்களைக் காட்டும் ஆண்மைத் தன்மைய ஆடல்முறைகளைப் பொதுவாகத் தாண்டவம் என்போம். இதற்கெனக் கையாளப்படும் அடவுக்கோவைகளும், நிலைகளும் முகபாவங்களும் தாண்டவத்துக்கான இயல்புகளைக் கொடுக்கின்றன''[22]

என்பது கார்த்திகாகணேசரின் கருத்து.

ஆனால் ஆனந்த தாண்டவத்தின்போது அருள்நிலையே வெளிப்படுகிறது. அந்நிலையில் கோபமும் வீரமும் வெளிப்படுவதில்லை. எனவே, தாண்டவம் என்பது கோப நிலையில் கடும் வேகத்துடன் ஆடக்கூடியது; ஆனந்த நிலையில் துள்ளிக் குதிக்கக் கூடியது என இருநிலைகளைக் குறிக்கிறது. இது பெரும்பாலும் ஆண்களாலேயே ஆடப்படுகிறது.

ஒவ்வோர் ஆடலிலும் மென்மையும் வேகமும் உண்டு. மென்மையானவை எல்லாவற்றையும் சேர்த்து லாஸ்யம் என்ற பெயரில் வழங்கினர்.[23] இதனாலேயே தாண்டவ லட்சணம் என்ற இலக்கண நூல், ஆடலைப் புரிபவர் உட்கார்ந்த நிலையில் அபிநயிப்பதை லாஸ்யம் என்றும், நின்ற நிலையில் ஆடலைப் புரிவதைத் தாண்டவம் என்றும் கூறுகிறது.[24] தாண்டவம், லாஸ்யம் என்ற இருவகைகளுள் உத்தான தாண்டவம் என்பது தாண்டவத்தின் ஒரு கூறு. அது நின்று அபிநயித்தல் ஆகும். சுகுமாரலாசியம் என்பது லாஸ்யத்தின் ஒரு கூறு. அஃது உட்கார்ந்து அபிநயித்தல் என்று அபிநயதர்ப்பணம் குறிப்பிடு கிறது.[25]

தொடக்கத்தில் லாஸ்யம் பெண்களுக்குரிய ஆடலாகவும், தாண்டவம் ஆண்களுக்குரிய ஆடலாகவும் கருதப்பட்டது.[26] ஆனால், பின்னால் வந்த நாட்டிய இலக்கண நூல்கள் வட மொழி மரபுப்படி பெண்களே இருவகையான ஆடல்களையும் ஆட முடியும் என்று கூறுகின்றன. இனி, இறைவன் ஆடிய எழு வகைத் தாண்டவங்கள் ஆராயப்படுகின்றன.

**எழுவகைத் தாண்டவங்கள்**

இறைவன் ஆடிய தாண்டவங்களின் எண்ணிக்கைப் பற்றிப் பலவிதமான கருத்துகள் நிலவுகின்றன. பரதர் இறைவன் ஆடிய தாண்டவங்கள் நூற்றெட்டினைக் கரணங்களின் மூலம் விளக்குகிறார்.[27] சிவபெருமான் தாமாக ஆடியவை நாற்பத் தெட்டு; உமையோடு ஆடியவை முப்பத்தாறு; மாயவனுடன் ஆடியவை ஒன்பது; முருகனுக்காக ஆடியவை மூன்று; வானவர் களுக்காக ஆடியவை பன்னிரண்டு என நூற்றெட்டுத் தாண்ட வங்களுக்கான கணக்கினைக் கூத்தநூல் கூறுகிறது.[28] சைவ ஆகமங்களும், சிவத்தல மான்மியங்களும் இறைவன் அறுபத்து நான்கு தலங்களில், அறுபத்து நான்கு ஆடல்களை ஆடியதாகக் குறிக்கின்றன.[29]

பரத சேனாபதீயம் என்ற நூல், ஆனந்த தாண்டவம், சந்தியா தாண்டவம், கௌரி தாண்டவம், திரிபுர தாண்டவம், காளி தாண்டவம், முனி தாண்டவம், சங்கார தாண்டவம், உக்கிர தாண்டவம், பூத தாண்டவம், பிரளய தாண்டவம், புஜங்க தாண்டவம், சுத்த தாண்டவம் எனப் பன்னிரண்டு தாண்டவங் களைப் பகருகிறது.[30] சங்கீத ரத்னாகரமும் பன்னிரண்டு தாண்டவங்களைக் கூறுகிறது என செ. வைத்தியலிங்கம் தம்

நூலில் குறிப்பிடுகிறார்.[31] ஆனால், பரத சேனாபதீயம் குறிப்பிட்ட கௌரி தாண்டவமும், காளி தாண்டவமும் அச்சங்கீத ரத்னாகரத்தில் இடம் பெறவில்லை. அதற்குப் பதிலாக, சிருங்கார தாண்டவம், ஊர்த்துவத் தாண்டவம் என்ற இரண்டும் அந்நூலில் இடம் பெற்றுள்ளன.

அல்லியம், எல்லியம், பல்லியம், உள்ளம், நுதல்விழி, நுதல்கால், நோக்கம், நுணுக்கம், கால்வரி, பேய்வரி, களிற்றுஉரி, நச்சம் எனப் பன்னிரண்டு கூத்தினைக் கூத்தநூல் கூறுகிறது.[32] ஆனால் இப்பன்னிரண்டு கூத்துகளும் அக்காலத்திலேயே வேறு வகைப் பெயர்களால் வழங்கப்பட்டுள்ளன. அதனையும் அந்நூல் தெரிவிக்கிறது. அவை பண்டரம், குஞ்சரம், முப்புரம், சங்கரம், சந்தி, காமம், கந்தரம், விந்தரம், கொட்டம், கொட்டி, சுட்டி, ஒட்டரம் என்பன.[33]

மேற்கண்ட பன்னிரண்டும் முன்கூறிய அமைப்பிற்கு மாறியுள்ளன என்று உரையாசிரியர் குறிப்பிடுகிறார்.[34] மேலும், அவர் அல்லியம் முதலான தாண்டவங்களுக்கு இணையான வடமொழி பெயர்களைக் கூறுகிறார். அவை, ஆனந்தத் தாண்டவம், சந்தியா தாண்டவம், சுத்த தாண்டவம், ஸ்ருங்கார தாண்டவம், திரிபுர தாண்டவம், ஊர்த்துவத் தாண்டவம், முனி தாண்டவம், ஸம்ஹார தாண்டவம், பிரளய தாண்டவம், பூத தாண்டவம், உக்கிர தாண்டவம், புஜங்க தாண்டவம் என்பன.[35] சங்கீத ரத்னாகரம் கூறும் தாண்டவங்களும் கூத்த நூல் கூறும் தாண்டவங்களும் ஒன்றாகக் காணப்படுகின்றன.

சிற்பரத்தினம் ஒன்பது வகைத் தாண்டவங்களைச் செப்புகிறது. ஆனால், அவற்றிற்குப் பெயர் குறிக்கப்படவில்லை.[36] பாண்டரங்க நடனம், கொடுகொட்டி நடனம், சந்தியா நிருத்தம், சண்ட தாண்டவம், கௌரி தாண்டவம், வீரட்டகாச நடனம், ஆனந்த தாண்டவம், அனவரத நடனம், மஹாசங்கார நடனம் என ஒன்பது வகைத் தாண்டவங்களை மு. தர்மலிங்கமும், ர. பக்தவத்சலமும் கூறுகின்றனர்.[37]

அற்புத தாண்டவம், அகோர தாண்டவம், ஊர்த்துவத் தாண்டவம், ஆனந்த சௌரிய தாண்டவம், பஞ்சகிருத்திய தாண்டவம், பிரளய தாண்டவம், சண்ட தாண்டவம், சாந்தி தாண்டவம், சந்தியா நிருத்தம் என ஒன்பது வகைத் தாண்டவங்களைக் கூறுகிறார் சே. த. ராமலிங்கம் பிள்ளை.[38]

திருவண்ணாமலை மடத்தின் தலைவர் ஸ்ரீலஸ்ரீ ஆர். வி. வெங்கடராமன், இறைவன் நவராத்திரியில் ஒன்பது வகைத் தாண்டவங்களை நிகழ்த்தியதாகக் கூறியுள்ளார். அவை ஆனந்த தாண்டவம், சந்தியா தாண்டவம், திரிபுர தாண்டவம், ஊர்த்துவத் தாண்டவம், புஜங்க தாண்டவம், முனி தாண்டவம், பூத தாண்டவம், சுத்த தாண்டவம், சிருங்கார தாண்டவம் என்பன. இத்தாண்டவங்களிலிருந்து நவதுர்க்கையர் தோன்றியதாகக் கூறியுள்ளார்.[39]

ஸ்ரீதத்துவநிதி ஆனந்த தாண்டவம், சந்தியா தாண்டவம், உமா தாண்டவம், கௌரி தாண்டவம், திரிபுர தாண்டவம், சம்கார தாண்டவம் என்ற எழுவகைத் தாண்டவங்களைத் தெரிவிக்கிறது.[40] திருப்புத்தூர்ப் புராணமும் எழுவகைத் தாண்டவங்களை இயம்புகிறது.[41] ஆனால், ஸ்ரீதத்துவநிதி குறிப்பிடும் உமா தாண்டவம் இப்புராணத்தில் இடம்பெறவில்லை. அதற்குப் பதிலாக முனிதாண்டவம் கூறப்பட்டுள்ளது.

பரதர் இறைவன் ஆடியனவாகக் கூறும் தாண்டவங்கள் கரணங்களாகக் கும்பகோணம் சாரங்கபாணி கோயிலிலும், தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலிலும் ஆண் வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. தில்லை நடராசர் கோயிலிலும், திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயிலிலும், விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலிலும் பெண் வடிவில் கரணங்கள் காணப்படுகின்றன. இறைவன் ஆடியவையானால், அவற்றிற்கு நான்கு கைகள் அமைக்கப்பட வேண்டும். தஞ்சையில் மட்டும் கரணங்களில் நான்கு கைகள் உள்ளன. ஆனால், அவை மொத்தம் எண்பத்தொன்றுதான் உள்ளன. மற்ற கோயில்களில், ஆடக்கூடியவர் இரு கைகளுடனே கரணங்களில் அமைக்கப்பட்டுள்ளனர். பரதர் கூறிய கூற்றுப்படி இருந்தால், இக்கரணங்கள் இறைவனுக்குரிய தன்மைகளாக ஆகமங்கள் கூறும் நான்கு கைகளுடன் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். எனவே, இறைவன் ஆடியவை நூற்றெட்டுத் தாண்டவக் கரணங்கள் என்பது பொருத்தமுற அமையவில்லை.

கலைகள் அறுபத்து நான்கு என்பது முன்னரே கூறப்பட்டது. அத்தகைய அறுபத்து நான்கு கலைகளுள் ஆடற்கலை தவிர மற்ற கலைகளில் வல்லவனாக இராசசேகர பாண்டியன் விளங்கியதாகத் திருவிளையாடற்புராணம் தெரிவிக்கிறது.[42] அவன் ஆடற்கலையிலும் வல்லவனானபோது, தான் பட்ட துன்பங்களை எண்ணி, இறைவனைக் கால் மாறி ஆட வேண்டி

னான். இச்செய்தி மூன்றாவது இயலில் வெள்ளி மன்றம் என்ற துணைத் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. எனவே, அறுபத்து நான்கு கலைகளுக்கேற்ப அறுபத்து நான்கு தலங்களில் இறைவன் ஆடியதாகக் கருத்துத் தோன்றி இருக்க வேண்டும். ஆனால், எந்த நூலிலும் அறுபத்து நான்கு தலங்களில் இறைவன் ஆடியதற்கான குறிப்புக் காணப்பெறவில்லை.

பரதசேனாபதீயமும், சங்கீத ரத்னாகரமும் பன்னிரு தாண்டவங்களைப் பகருகின்றன. அவை பிற்காலத்தில் எழுந்த புராண நூற்கருத்துகளின் அடிப்படையில் தோன்றியவை. எனவே, அவற்றைக் கொண்டு இறைவன் ஆடியவை பன்னிரண்டு என்று வரையறுக்க முடியாது. சிற்பரத்னா, ஒன்பது வகைத் தாண்டவங்களின் பெயர்களைக் கூறவில்லை. பெயர் இல்லாமல் தாண்டவங்கள் ஒன்பது என்றுவரையறுக்க முடியாது. மு. தர்மலிங்கமும், ர. பக்தவத்சலமும் புராணக் கருத்துகளின் அடிப்படையில் ஒன்பது தாண்டவங்களை விளக்கியுள்ளனர். சே. த. ராமலிங்கம் பிள்ளையும் புராணக் கருத்துகளின்படியே ஒன்பது வகைத் தாண்டவங்களைக் கூறியுள்ளார். ஆர். வி. வெங்கடராமன் இறைவன் நவராத்திரியில் ஒன்பது வகைத் தாண்டவங்களை நிகழ்த்தியதாகக் கூறிய செய்திக்குச் சான்றுகள் காணப்படவில்லை. எனவே, தாண்டவங்கள் ஒன்பது என்பது பொருத்தமற்றது.

ஸ்ரீதத்துவநிதியும், திருப்புத்தூர்ப் புராணமும் குறிப்பிடும் தாண்டவங்கள் ஏழானாலும், அவற்றிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. இக்குழப்பங்களினால், இறைவன் ஆடியவை எழுவகைத் தாண்டவங்கள் என்பதை நிரூபிக்க முடியவில்லை. மயிலை சீனி. வேங்கடசாமி தான் எழுவகைத் தாண்டவங்களுக்குத் தத்துவ விளக்கம் கூறுகிறார்.

> ''காத்தல் செயலைச் செய்கிற கடவுள், உயிர்கள் செய்த இருவினைகளுக்குத் தக்கப்படி இன்பங் காத்தல், துன்பங் காத்தல் என்று இரண்டுவிதக் காத்தல் செயலைச் செய்கிறார். எனவே, அவர் செய்யும் ஐந்தொழில் ஆறும், ஐஞ்செயலையும், ஒருமிக்கச் செய்யும் ஆநந்த தாண்டவம் ஒன்றும் ஆகத் தாண்டவங்கள் ஏழாயின.''[43]

இதன்மூலம் தாண்டவங்கள் ஏழு என்கிறார் அவர். இக்கருத்தினையே, தண்டபாணி தேசிகரும் ஏற்றுப் போற்றுகிறார்.[44]

திருப்புத்தூர்ப் புராணம் ச, ரி, க, ம, ப, த, நி என்னும் எழுவகையான இசைகளிலிருந்து எழுவகைத் தாண்டவங்கள் தோன்றின என்று கூறுகிறது.[45]

புராணக் கருத்து என்பதாலும், வேறு சான்றின்மையாலும் இக்கருத்து ஏற்றுக்கொள்ளும்படி அமையவில்லை. வேங்கடசாமி கூறிய தத்துவக் கருத்துப் போல, கமில் வி. சுவெலபிலும் ஒரு தத்துவக் கருத்தை மேற்கோளாகக் காட்டுகிறார். மூலாதாரச் சக்கரத்திலிருந்து தோன்றிய குண்டலினி சக்தி ஏழாவது நிலையாகிய சகஸ்ராரச் சக்கரத்தை அடைய பல நிலைகளைத் தாண்டி வருகிறது. அந்த ஏழாவது நிலையில் உயிர்கள் அடைவது தான் ஆனந்தம். இதனையே, சத்-சித்-ஆனந்தம் (சச்சிதானந்தம்) என்று அழைப்பர்.[46] இக்கருத்தினையே ஹரிநாதன் என்பவர் நேர்காணலில் குறிப்பிட்டார்.[47] எனவே, இந்த அடிப்படையில்தான் எழுவகைத் தாண்டவங்கள் தோன்றி இருக்க வேண்டும். ஏனெனில், ஆனந்த தாண்டவ மூர்த்தியின் உருவ அமைப்பு முழுவதுமே தத்துவக் கருத்தினைத் தாங்கியது. எனவே, இறைவன் ஆடியவை எழுவகைத் தாண்டவங்கள் என்பது ஏற்புடையதே.

திருப்புத்தூர்ப் புராணம் கூறும் தாண்டவங்களுள் சங்கார தாண்டவத்திற்குரிய ஊர் குறிப்பிடப்படவில்லை.[48] மேலும், கௌரி தாண்டவத்தைத் திருப்புத்தூர்ச் சிற்சபையில் புரிவதாகக் கூறுகிறது.[49] பஞ்சசபைகள் உள்ள தலங்கள் என்று குறிப்பிடப் படுவனவற்றுள் திருப்புத்தூர் இடம்பெறவில்லை. சிற்சபையானது, சிதம்பரத்திற்கே உரியது. அதிலிருந்து இது மாறுபடுகிறது. அடுத்து, ஆதிசிதம்பரமாகிய திருவெண்காடும், மேலைச் சிதம்பரமாகிய பேரூரும் இதனுடன் இணைத்துக் கூறப்படவில்லை.

பஞ்சசபைகளில் திருப்புத்தூர் இல்லாத காரணத்தினால், அங்குள்ள சபையைச் சிற்சபையாக்கி, அதனைத் தாண்டவத் தலங்களுள் ஒன்றாகச் சேர்த்துள்ளார் சொக்கலிங்கச் செட்டியார். இதன்மூலம், திருப்புத்தூர்த் தலத்திற்கு அவர் சிறப்புச் செய்துள்ளார். தண்டபாணி தேசிகரும் இக்கருத்தினரே.[50] திருப்புத்தூர்ப் புராணம் இத்தகைய முரண்பாடுகளைக் கொண்டுள்ளதால், ஸ்ரீதத்துவநிதி அடிப்படையில் இறைவனின் எழுவகைத் தாண்டவங்கள் இங்கு ஆராயப்படுகின்றன.

**சந்தியா தாண்டவம்**

சந்தியா தாண்டவம் என்பது மாலை வேளையில் ஆடியதைக் குறிக்கும். இவ்வாடலைச் சிவபெருமான், பாற்கடலில் தோன்றிய நஞ்சை உண்டபின் ஆடினார். இறைவன் திரயோதசி திதியில் மாலை வேளையில் இவ்வாடலைப் புரிந்தார். எனவே, இதனை 'அந்தி நிருத்தம்' என்றும், 'சந்தியா தாண்டவம்' என்றும் அழைப்பர். இது, பிரதோஷ நடனம் எனவும் அழைக்கப்பெறும். அத்தமனத்திற்கு முன்னும் பின்னும் உள்ள மூன்றே முக்கால் நாழிகையில் திரயோதசி திதியன்று இறைவன் ஆடுவதே பிரதோஷ நடனம் எனப்படும்.

சிவபெருமான் ஆடியபோது திரிபுவனமாதா பொற்சிங்காசனத்தில் வெள்ளியங்கிரியிலே தேவர்கள் புடைசூழ வீற்றிருந்தாள். சரசுவதி வீணை வாசிக்க, இந்திரன் புல்லாங்குழல் ஊத, பிரமன் தாளம் போட, இலக்குமி பாட, விஷ்ணு மத்தளம் கொட்ட, தேவர்கள் புடைசூழ, இறைவன் இவ்வாடலை ஆடினான் என்று ஆனந்த குமாரசாமி ஸ்காந்த புராணத்திலுள்ள பிரதோஷாஷ்டகத்தைக் கொண்டு விளக்குகிறார்.[51]

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள்உய்யும் பொருட்டுத் திருநடனம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்மதேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், திக்குபாலர்கள் முதலிய அனைவரும் வந்து இறைவனை வழிபட்டார்கள். இந்த நடனத்திற்குத்தான் சந்தியா நிருத்தம் என்று பெயர்.[52]

இந்த ஆடலைக் காபாலிக நடனம் என்கிறார் அ. அறிவொளி.[53] மேலும் அவர், இவ்வாடல் மயிலாப்பூர் கபாலீச்சரத்திற்கே உரியது; அத்தலப் பெயராலும், பிரதோஷம் அங்குப் பெருமையாவதாலும், எலும்பைப் பெண்ணாக்கிய ஞான சம்பந்தா சித்தியாலும், கற்பகம் என்ற அம்மை பெயராலும் இந்த நடனத்துக்குரிய தலம் கபாலீச்சரமே ஆகும்; இதுவே மாலைக்கால நடனம் எனப்படும் என்கிறார்.[54] இதற்கு வேறு சான்றின்மையால், காபாலிக நடனம்தான் மாலைக்கால நடனம் என்பது ஏற்றுக்கொள்ளும்படியாக இல்லை.

மேற்கண்ட செய்திகள் சிறிது மாறுபாடாகக் காரணாகமத்தில் காணப்படுவதாக தட்சிணாமூர்த்தி தெரிவிக்கிறார். இதனை அவர்,

> ''கைலாயத்தின் உச்சியில் மணி பதித்த பொன்னிருக்கையில் அன்னை கௌரியின்முன் பிறை சூடிய பெம்மான் அந்திப் பொழுதில் ஆடுகின்றார். எல்லாத் தேவர்களும் காண்கின்றனர். பிரமன் தாளமிட, திருமால் பாடகம் இசைக்க, கலைமகள் குழலூத, தும்புருவும் நாரதரும் இசைபாட, குமரப்பிரான் முழவதிர நடனம் இயல்கிறது''[55]

என்று குறிப்பிடுகிறார். மேலும், இந்நடனம் ஆலமரத்தின் அடியில் நிகழ்ந்ததாக சிற்பசங்கிரகமும் மயமதமும் கூறுகின்றன என்று தட்சிணாமூர்த்தி கூறுகிறார்.[56] சிற்ப நூல்களும், புராணமும், ஆகமமும் இறைவன் ஆடும் இடத்தினை வெவ்வேறாகச் சுட்டுகின்றன. இவ்வாடல் இறைவன் ஆடும் நேரத்தினால் பெயர் பெற்றது. எனவே, இங்கு இறைவன் ஆடுமிடம் முக்கியத்துவம் பெறவில்லை.

சகளாதிகாரம் என்ற சிற்பநூல், இறைவன் ஆலமரத்தினடியில் ஆடும்போது கார்க்கோடகனால் தீண்டப்பட்டார். அப்போது புஜங்கத்ராஸிதம் என்ற ஆடலை இறைவன் ஆடினார் என்கிறது.[57] இக்கருத்து, இறைவன் நஞ்சுண்டு ஆடியதாகக் கூறும் கருத்தின் மறுசிந்தனையாகும்.

## அமைப்பு

இத்தாண்டவ மூர்த்தியின் உருவ அமைப்பை ஸ்ரீதத்துவநிதி பின்வருமாறு தெரிவிக்கிறது.

> ''நான்கு கைகளும் மூன்று கண்களும், ஜடாமகுடமும் தரிப்பவரும், வலது பக்கம் கைகளில் அபயத்தையும், டமருவையும், இடது கைகளில் மயில் தோகையையும், விஸ்மய ஹஸ்தத்தையும் தரிப்பவரும், அபஸ்மாரனின்றி பீடத்தின் மேலே இடதுகாலை குஞ்சிதமாக வைத்திருப்பவரும், ஸர்பங்களை கங்கணங்களாக அணிந்திருப்பவருமான ஸ்ரீபரமேசுவரன், இடதுபக்கமாக இருக்கும் வலது காலை ஊர்துவ முகமாகவாவது, குஞ்சிதமாகவாவது வைத்துக் கொண்டு செய்யும் தாண்டவமானது, ஸந்தியா தாண்டவமாகும்.''[58]

மேற்கண்ட அமைப்பு முறைக்கு மாறுபட்டுத் தண்டபாணி தேசிகர், மயிலை சீனி.வேங்கடசாமி ஆகியோரின் அமைப்பு முறைகள் காணப்படுகின்றன.

> "இத்தாண்டவ மூர்த்திக்குக் காலடியில் முயலகன் இல்லை. ஒரு முகமும், எட்டு, பத்து, பன்னிரண்டு கரங்களும் அமைப்பதுண்டு. பாம்பைத் திருவரையில் அரைஞாணாக அணிந்தும், இரு கரங்களால் வாலையும் தலையையும் தலைக்குமேல் தூக்கிப் பிடித்தும் நடிப்பதாக உருவ அமைப்பு காணப்படுகிறது"[59]

என்று தண்டபாணி தேசிகர் இறைவனின் தாண்டவ உருவ அமைப்பைக் காட்டுகின்றார். முயலகனைப் பாம்பின் உருவமாகக் கையில் ஏந்தியிருப்பதனால், சில சந்தியா தாண்டவ மூர்த்தத்தில் முயலகன் உருவம் அமைப்பது இல்லை என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி.[60]

மேலும், தாண்டவ மூர்த்திக்கு எட்டு, பத்து, பன்னிரண்டு கரங்கள் அமைப்பதுண்டு என்று தண்டபாணி தேசிகர் கூறுகிறார்.[61] ஆனால் வேங்கடசாமியோ எட்டு அல்லது பத்துக் கைகள் அமைப்பதுண்டு; இருப்பினும், நான்கு கைகளை அமைப்பதுதான் வழக்கம் என்று சுட்டுகிறார்.[62] சிவபெருமானுக்கு நான்கு கைகள்தான் அமைக்கப்படும் என்ற ஸ்ரீதத்துவ நிதியின் கருத்தும் முன்னரே கூறப்பட்டது. இத்தாண்டவத்தினை மதுரையில் புரிந்ததாகத் திருப்புத்தூர்ப் புராணம் தெரிவிக்கிறது.[63]

காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில் ஒரு காலை மடித்து முழங்காலிட்டு ஆடுவதுபோல் ஆடற்சிற்பம் உள்ளது. வலக்கை வேழமுத்திரையில் **உள்ளது**. இடக்கை தலைக்குமேல் மகுடத்தைத் தொட்டுக் கொண்டுள்ளது. வலக்கையில் உடுக்கை காணப்படுகிறது. அச்சிற்பத்தில் எட்டுக்கைகள் உள்ளன. மற்ற கைகளில் உள்ள பொருள்களை அடையாளம் காண முடியவில்லை. இச்சிற்பம் கருவறையின் பின்புறம் வெளிப்புறச் சுவரில் பிரகாரத்தில் காணப்படுகிறது. இதனை, சந்தியா தாண்டவம் புரியும் சிற்பம் என்கிறார் இரா. நாகசாமி.[64] ஸ்ரீதத்துவநிதி குறிப்பிடும் அமைப்பிற்கு இச்சிற்பம் மாறுபட்டுள்ளது. எனவே, இதனை சந்தியா தாண்டவம் என்று கூறுவது பொருந்தாது.

ஆகமத்திரட்டு என்ற நூல் சந்தியா தாண்டவத்தை விளக்குகையில் திரிசூலத்தைக் குறிப்பிடுகிறது. ஒருவேளை இக்காரணம்

கொண்டே கௌரி தாண்டவமே சந்தியா தாண்டவமாகக் கருதப்பட்டிருக்கலாம் என்று தட்சிணாமூர்த்தி கூறுகிறார்.[65] ஆனால், உமா தாண்டவம், காளிகா தாண்டவம், திரிபுர தாண்டவம், சங்கார தாண்டவம் ஆகிய தாண்டவங்களிலும் இறைவனின் கையில் திரிசூலம் காணப்படுகிறது. எனவே, இக் கருத்துப் பொருத்தமற்றது.

ஆகமங்களிலிருந்து தொகுத்த 'சிவபராக்கிரமம்' என்ற நூலில் 'ஊர்த்துவஜானு', ஸந்த்யா தாண்டவம் என்று குறிக்கப் பட்டுள்ளது. இதனை, வே. ராகவன் குறிப்பிடுகிறார்.[66] ஸ்ரீதத்துவநிதி இத்தாண்டவத்திற்குக் கூறும் விளக்கம் ஊர்த்துவ ஜானுவிற்குப் பொருந்தாது.

## உமா தாண்டவம்

ஸ்ரீதத்துவநிதி நடராசர் வலக்காலைத் தூக்கி ஆட வேண்டும் என்று கூறுகிறது.[67] வழக்கமாக ஆடும் ஆடலிலிருந்து இவ்வாடல் மாறுபட்டது எனவே, உமை அஞ்ச ஆடும் ஆடலே உமா தாண்டவமாகும்.

இத்தாண்டவம் பற்றித் தண்டபாணி தேசிகரும், மயிலை சீனி. வேங்கடசாமியும், சே. த. ராமலிங்கம் பிள்ளையும் குறிப் பிடவில்லை. ஸ்ரீதத்துவநிதி மட்டும்தான் சுட்டுகிறது. பூர்வ கருணாகமம் எழுவகைத் தாண்டவங்களைக் குறிப்பிடுகையில் உமா தாண்டவத்துக்குப் பதிலாக முனி தாண்டவத்தைக் குறிக் கின்றது என்று தட்சிணாமூர்த்தி தெரிவிக்கிறார்.[68]

## அமைப்பு

> ''ஒரு முகமுடையதும், மூன்று கண்களுடையதும், ஜடா மண்டலத்தைத் தரிப்பதும், வெளுப்பு நிறமுடையதும், ஆறு கைகளுடையதும், அபயம், டமரு, சூலம் இவை களை வலது பக்கம் கைகளிலும், கபாலம், விஸ்மயஹஸ் தம், கரிஹஸ்தம் இவைகளை இடதுபக்கம் கைகளிலும் தரிப்பதும், இடது காலை அபஸ்மாரன் மேலே வைத்துக் கொண்டிருப்பதும், இடது காலை ஒட்டி வலது காலை மேலே தூக்கிக் கொண்டிருப்பதும், இடது பக்கத்தில் உமாதேவியுடன் கூடியிருப்பதும், கங்கையைத் தரித்திருப்பதும், ஸகல ஆபரணங்களையும் அணிந்திருப்பதும், புலித்தோலாடையை யணிந்திருப்பது

மான பரமேசுவர மூர்த்தியானது, உமாதாண்டவ மூர்த்தி எனப்படும்''

என்று ஸ்ரீதத்துவநிதி சுட்டுகிறது.[69]

நெல்லைத் தாமிரசபையில் இறைவன் கங்காளமாகிய மண்டையோட்டைக் கையிலேந்தி, தாண்டவம் ஆடியதாகக் குறிப்பிடப்படுகிறது. இது முனி தாண்டவம் எனக் குறிக்கப்படுகின்றதெனினும், இது ஒரு வேளை உமா தாண்டவமாக இருக்குமோ என்று தட்சிணாமூர்த்தி ஐயுறுகிறார்.[70] ஆனால், உமா தாண்டவம் என்பது கால் மாறியாடியதைக் குறிக்கும். மண்டையோட்டைக் கையிலேந்தி ஆடும் தாண்டவம் முனி தாண்டவம் என்பது புராணக் கருத்து. திருநெல்வேலித் தாமிர சபையில் கால் மாறி ஆடிய நடராசர் கிடையாது. எனவே, தட்சிணாமூர்த்தியின் கருத்துப் பொருத்தமாகக் காணப்படவில்லை.

கைநிலைகளை மறந்து பார்த்தால், கால் மாறி ஆடும் திருமேனிகள் தஞ்சைக் கோயில் புஜங்காஞ்சிதக் கரணச் சிற்பத்தை அப்படியே ஒத்திருக்கின்றன என்கின்றனர் இரா. கலைக்கோவனும் இரா. வளர்மதியும்.[71] ஆனால், திருமேனிகளை அமைத்தவர்கள் ஏதேனும் ஓர் அடிப்படையில்தான் அமைத்திருக்க வேண்டும். அதனை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், கைகளை மறைத்துவிட்டு, கரணச் சிற்பங்களுடன் ஒப்பிட்டுக் கூறுவது சரியல்ல. கரணச் சிற்பங்கள் கற்களால் ஆனவை. அவற்றுடன் சிறப்பான முறையில் திகழும் திருமேனிகளை ஒப்பிட்டுக் கூறுவது பொருத்தமல்ல. மேலும், ஸ்ரீதத்துவநிதி இத்தாண்டவத்திற்குக் குறிப்பிடும் கைகள் ஆறு. ஆனால், அவர் சுட்டும் திருக்கோயில்களில் காணப்படும் திருமேனிகளில் நான்கு கைகள்தான் காணப்படுகின்றன.[72] இதன்மூலம், ஆகமங்கள் கூறும் அளவுகள் சரியல்ல என்ற அவரின் கருத்துப் புலனாகிறது. இக்கருத்துப் பொருந்தாத ஒன்றாகத் திகழ்கிறது.

மதுரை வெள்ளியம்பலத்தில் திகழும் ஆடல்வல்லான் சிற்பம் உமா தாண்டவம் ஆகும். அச்சிற்பத்தில் பன்னிரண்டு கைகள் உள்ளன. ஆனால் ஸ்ரீதத்துவநிதி கூறுவதோ ஆறு கைகள்தான். எனவே, இச்சிற்பத்தின் கைகள், சிற்பியின் கற்பனைக்கேற்பப் படைக்கப்பட்டிருக்க வேண்டும்.

## கௌரி தாண்டவம்

உமை காண ஆடிய ஆடலே, பிற்காலத்தில் கௌரி தாண்டவம் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், உமைக்கு, கௌரி என்ற சிறப்புப் பெயர் கொடுத்திருக்க வேண்டும். அருட் சக்தியாகிய அன்னை ஐயனிடம் ஊடல் கொண்டாள். அவ் வூடலைத் தீர்க்க இறைவன் இத்தாண்டவத்தைப் புரிந்தான் என்றும், தவம்புரிந்த கௌரியம்மைக்காகத் தம்பிரான் ஆடிய கூத்து இது என்றும் பலர் இத்தாண்டவம் புரிதற்குக் கூறும் காரணத்தை சே. த. ராமலிங்கம் பிள்ளை குறிப்பிடுகிறார்.[73]

இலக்குமி தேவியார் விரும்பியவாறே சிவபெருமான் மீண்டும் இக்கூத்தினை ஆடினார் என்றும், அதனால், இதற்கு இலக்குமி தாண்டவம் என்ற பெயரும் கூறப்படுவதுண்டு. இலக்குமி காண நடித்தலாலும், உலக ரக்ஷகியான கௌரி தொடர்பாலும் ரக்ஷா தாண்டவம் என்ற பெயரும் இத்தாண்டவத்திற்கு உண்டு என்று மேற்கண்ட கட்டுரை ஆசிரியரே கூறுகிறார்.[74] இலக்குமி தாண்டவம் என்ற பெயர்தான் பொருத்தமாகக் காணப்பட வில்லை. சைவ—வைணவ இணைப்பிற்காக, இலக்குமி வேண்ட சிவன் ஆடினான் என்ற கருத்துத் தோன்றியிருக்க வேண்டும். கௌரி தாண்டவம் என்பது உமையாள் கண்டு களிக்க சிவன் ஆடியதால் இது ஆனந்த தாண்டவத்திற்கே ஏற்பட்ட மற்றொரு பெயராகும் என்று வே. இராகவன் குறிப்பிடுகிறார்.[75] ஆனந்த தாண்டவம் என்பது உயிர்களின் களிப்பிற்காக இறைவன் ஆடியது; கௌரியின் களிப்பிற்காக அன்று. எனவே, இக்கருத்துப் பொருத்தமற்றது.

இத்தாண்டவத்தினைப் புஜங்கத்திராசம் என்கிறார் தண்டபாணி தேசிகர். புஜங்கத்திராசம் என்பது பாம்பு காலின்கீழ் வந்துவிட்டால் எங்ஙனம் அஞ்சிக்காலைத் தூக்குவார்களோ அங்ஙனம் காலைத் தூக்கி ஆடுவது ஆகும். இத்தாண்டவ நிலையும் அப்படியிருத்தலின் அப்பெயர் பெற்றது என்கிறார் அவர்.[76] ஆனால், இக்கௌரி தாண்டவம் கௌரிக்காக இறைவன் மகிழ்ச்சி நிலையில் ஆடியது. மகிழ்ச்சியில் விளைந்த இவ்வாடலை அச்சச் சுவையோடு பொருந்திப் பார்ப்பது பொருத்தமற்றது. எனவே, இது புஜங்கத்திராசமாகாது.

இத்தாண்டவம் 'பாம்பை அச்சுறுத்தும் நடனம்' என்றோர் கருத்தும் கூறப்படுவதை அவர் குறிப்பிட்டுள்ளார். எனினும், அக்கருத்தை அவரே ஏற்றுக் கொள்ளவில்லை.

''சிலர் பாம்பைப் பயமுறுத்தும் தாண்டவம் எனப் பொருள் கண்டு அதற்கேற்ற வண்ணம் வரலாறும் காட்டினர். தாருகாவனத்து முனிவர் எண்ணாயிரத்தார் இறைவனைக் கொல்ல அபிசார ஓமத்தீயிலிருந்து பாம்பை ஏவினர். அதனைச் சிவபெருமான் கையில் ஏந்தி அச்சுறுத்தி ஆடினார் என்பர். சிவபுராணமுடையார் கார்க்கோடகனும் வாசுகியும் வேண்டிக்கொள்ள அவற்றைத் தம் திருமேனியில் தாங்கி நின்றாடினர் என்பர். இவை நூற்றெட்டுத் தாண்டவ பேதங்களையும், அவற்றின் இலக்கணங்களையும் உணராமையால் வந்த கருத்துகளே''[77]

எனவே, கௌரிக்காக ஆடிய இத்தாண்டவத்தைப் பாம்போடு தொடர்புபடுத்தி, பாம்பைக் கண்டு அஞ்சும் நடம் என்றோ, அல்லது பாம்பை அச்சுறுத்தும் நடம் என்றோ கூறுவது முற்றிலும் பொருத்தமற்றது.

**அமைப்பு**

''மன அமைதியையுடையதும், நான்கு கைகளும் சிவப்பு நிறமும் சிரித்த முகமுடையதும், மண்டையோடு பக புஷ்பம் (கொக்கு மந்தாரைப்பூ), ஊமத்தம்பூ, எருக்கம்பூ இவைகளையும் இளம்பிறைச் சந்திரனையும் அணிந்து விரித்திருக்கும் சடைகளையுடையதும், ஸர்ப கங்கணத்தைத் தரிப்பதும், அபஸ்மாரன் மேலே வலது காலை குஞ்சிதமாக வைத்துக் கொண்டு, இடது காலை மேலே தூக்கிக் கொண்டிருப்பதும், வலது பக்கம் கையில் அபயமும், உடுக்கையும், இடதுபக்கம் கைகளில் கீழ்க் கையில் ஸர்பமும் மேல்கையில் அக்நி பாத்திரமும் தரிப்பதும், இடதுபக்கத்தில் கௌரீ தேவியுடனும், வலது பக்கத்தில் நந்திகேசுவரருடனும் கூடியிருப்பதும், விரிந்திருக்கும் சடையை அல்லது ஜடாமகுடத்தைத் தரிப்பதும், இடது பக்கத்தில் மௌலியை (கங்கையைத்) தரிப்பதுமான மூர்த்தியானது, கௌரீ தாண்டவ மூர்த்தி எனப்படும். மற்றவைகள் முதலாவது நர்த்தநத்தில் கூறியிருப்பதைப் போலவேயாகும்''

என்று ஸ்ரீதத்துவநிதி இத்தாண்டவ அமைப்பினைச் சுட்டுகிறது.[78]

கௌரி தாண்டவத்தில் கௌரி ஒரு பக்கத்தில் இருந்தால், நந்தி இன்னொரு பக்கத்தில் இருப்பது இன்றியமையாதது என்று தட்சிணாமூர்த்தி கூறுகிறார்.[79] ஆனால் ஸ்ரீதத்துவ நிதியோ, நந்திகேசுவரர் தான் வலப்பக்கம் வீற்றிருப்பார் என்று கூறுகிறது.[80] மேலும் மயமதம் என்ற சிற்பநூல் நந்தி வலப்பக்கமும், கௌரிக்குப் பதிலாக திருமால் இடப்பக்கமும் நிற்பதாகக் குறிப்பிடும் என்று தட்சிணாமூர்த்தி தெரிவிக்கிறார்.[81] சிவசக்தியைக் கௌரியாகவும், திருமாலாகவும் கூறுவது உண்டு. ஆகையால் இதில் தவறு இல்லை என்று கூறுகிறார் மயிலை சீனி. வேங்கடசாமி.[82] இக்கருத்து மேலும் ஆய்விற்குரியது. கௌரி தாண்டவம் திருப்புத்தூர்ச் சிற்சபையில் நிகழ்ந்தது என்று திருப்புத்தூர்ப் புராணம் தெரிவிக்கிறது.[83]

**காளிகா தாண்டவம்**

ஐந்தொழில்களில் படைத்தல் தொழிலைக் குறிப்பது காளிகா தாண்டவம் எனப்படும். இதற்கு முனி தாண்டவம் என்ற பெயரும் உண்டு என்று மயிலை சீனி. வேங்கடசாமி கூறுகிறார்.[84] இதே கருத்தையே சே. த. ராமலிங்கம் பிள்ளையும் தெரிவிக்கிறார்.[85] இத்தாண்டவம் திருநெல்வேலித் தாமிர சபையில் நிகழ்ந்ததாகத் திருப்புத்தூர்ப் புராணம் குறிப்பிடுகிறது.[86]

**அமைப்பு**

> ''ஒரு முகமும் இரண்டு கண்களும், ஜடைகளினாலே சுத்தப்பட்ட தலையும், எட்டுக் கைகளும், நன்கு உயரத் தூக்கிய வலது காலும், அபஸ்மாரன் மேலே குஞ்சிதமாக (சிறிது வளைந்திருக்கும்படி) வைக்கப்பட்டிருக்கும் இடது காலும் உடையதும், அபயம், சூலம், பாசம், உடுக்கை இவைகளை வலது கைகளிலும், கபாலம், அக்நிபாத்திரம், மணி, வலது பக்கத்தில் நீட்டித் தொங்க விடப்பட்ட கரிஹஸ்தம் போன்ற கை இவைகளை வலது கைகளிலும் தரித்து, ஸகல லக்ஷணங்களும் பொருந்தியிருக்கின்ற மூர்த்தியானது, காளிகா தாண்டவமூர்த்தி எனப்படும். மற்றவை முதலாவது நர்த்தநத்திற்குக் கூறியது போலவேயாகும்''

என்று ஸ்ரீதத்துவநிதி தெரிவிக்கிறது.[87]

காளிகா தாண்டவம் வேறு. காளி தாண்டவம் வேறு என்பது மயிலை சீனி. வேங்கடசாமியின் கருத்து.[88] தட்சிணாமூர்த்தியோ, காளி தாண்டவத்தைக் காளிகா தாண்டவமாகக் கருதி, பின்வருமாறு மொழிகிறார்.

> "திருப்புத்தூர்ப் புராணப்படி காளிகா தாண்டவம் திருவாலங்காட்டில் இயன்றிருக்கிறது. ஆனால், திருவாலங்காட்டு உருவம் ஊர்த்துவ தாண்டவராக உள்ளது. திருவாலங்காட்டுப் புராணம் இறைவன் வலக்காலில் நிற்பதாகவும், இடக்காலை வானை நோக்கித் தூக்கியதாகவும் கூறுகின்றது. திருவாலங்காட்டு உருவமே இக்கூற்றுக்கு இயைந்ததாக இல்லை."[89]

காளி தாண்டவமே ஊர்த்துவத் தாண்டவமாகும். திருப்புத்தூர்ப் புராணம் காளி தாண்டவத்தையே குறிப்பிடுகிறது. அவர் தான், காளி தாண்டவத்தைக் காளிகா தாண்டவமாகக் கருதி விட்டார். எனவே, இக்கருத்துப் பொருத்தமற்றது.

## திரிபுர தாண்டவம்

சிவபெருமான் முப்புரங்களை எரித்தபின், வெற்றிக் களிப்பினால் ஆடியது இத்தாண்டவம். இதனை, முப்புரம் எரித்த தாண்டவம் என்றும், எரித்த வரலாற்றை அமைத்து ஆடும் தாண்டவம் என்றும் சிலர் கூறுவது பொருந்தாது என்கிறார் தண்டபாணி தேசிகர்.[90] இறைவன் தன் சிரிப்பொன்றினாலேயே திரிபுரங்களை எரித்தான் என்பது இலக்கியங்கள் கூறும் கருத்து. எனவே, திரிபுரங்களை எரிக்கும் நிலையில் இறைவன் ஆடவில்லை. இக்காரணத்தால், இக்கருத்துப் பொருத்தமாகக் காணப்படுகிறது. திருமூலர் முப்புரம் என்பது புராணங்கள் குறிப்பிடும் மூன்று நகரங்களல்ல; ஆன்மாக்களைப் பற்றிக் கிடக்கிற மும்மலங்கள் என்று தத்துவ நிலையில் விளக்கம் அளிக்கிறார்.[91] திருக்குற்றாலத்தில் சித்திரசபையில் இத்தாண்டவத்தைப் புரிவதாகத் திருப்புத்தூர்ப் புராணம் தெரிவிக்கிறது.[92]

## அமைப்பு

> "பதினாறு கைகளுடன் கூடியதும், இடதுபக்கத்தில் கௌரீ தேவியை அணைத்துக் கொண்டிருப்பதும், வலது பக்கத்தில் முருகனுடனிருப்பதும், வலது கையை அஞ்ஜலியாக (குழிவாக) வைத்துக் கொண்டிருப்பதும், வலது பக்கத்திலுள்ள எட்டுக் கைகளில் அபயம்,

உடுக்கை, வஜ்ரம், சூலம், பாசம்,டங்கம் (உளி அல்லது மழு அல்லது மண்வெட்டி),தண்டம், நாகம் இவைகளை யும் இடது பக்கத்திலுள்ள எட்டுக் கைகளில் வலது பக் கத்தில் நீட்டிய பூர்வகரம், அக்நிபாத்திரம், புத்தகம், வரதம், துவஜம், கேடயம், மணி, கபாலம் இவை களையும் தரிப்பதும், ஸகல லக்ஷணங்களுடன் கூடியதுமான மூர்த்தியானது, திரிபுர தாண்டவ மூர்த்தி யாகும். மற்றவை முதலாவது நிருத்த மூர்த்திக்குக் கூறப்பட்டதைப் போன்றவைகளேயாம்''

ஸ்ரீதத்துவநிதி இத்தாண்டவத்திற்குரிய இலக்கணங் தெரிவிக்கிறது.[93]

;தாண்டவம் பற்றிய செய்திகள் சங்க காலத்தின் பிற் ல் இருந்து தொடர்ந்து காணப்பட்டது என்பது முதல் விளக்கப்பட்டது. அம்சுமத் பேதாகமம் திரிபுர தாண்ட எண்வகையாக மொழிகின்றது என்று தட்சிணாமூர்த்தி ார்.[94]

**தாண்டவம்**

கார தாண்டவத்தைச் சம்கார தாண்டவம் என்று 'வநிதி கூறுகிறது; அழித்தல் தொழிலைச் செய்வது இத் வம். இதனை, மகாசங்கார தாண்டவம், ஊழிக்கூத்து )ருவகைப்படுத்திப் பின்வருமாறு விளக்குகிறார் தண்ட தேசிகர்.

''ஊழிக்கூத்து ஒவ்வோரூழிக் காலத்தும் இறைவன் ஆடுவது. மகாசங்கார தாண்டவம் தன்னைத் தவிர எல்லாம் அழியும் பேரூழிக் காலத்து உலகமே சுடலை யாக இறைவன் காண்பார் யாருமின்றித் தனியாய் ஆடும் பேரூழிக்கூத்து''[95]

டில் இறைவன் ஆடும் ஆடலைப் பற்றிய செய்திகள் யலிலே விளக்கப்பட்டுள்ளன.

''ஸம்ஹார தாண்டவ மூர்த்தியானது மூன்று கண்கள், எட்டுக்கைகள், விரிந்த சடைகள், அபஸ்மாரன் மேலே குஞ்சிதமாக வைத்துக் கொண்டிருக்கின்ற இடதுகால்,

உயரத் தூக்கியிருக்கின்ற வலதுகால், மேலே அணியப் பட்ட புலித்தோலாடை இவைகளையுடையதும், வலது கைகளில் அபயம், சூலம், பாசம், உடுக்கைகளையும் இடது கைகளில் கபாலம், அக்நிபாத்திரம், விஸ்மயஹஸ் தம், வலது பக்கத்தில் நீட்டப்பட்டிருக்கும் கஜஹஸ்தம் போன்ற ஹஸ்தம் இவைகளைத் தரித்திருப்பதும், வலது பக்கத்தில் நந்திகேசுவரர், இடது பக்கத்தில் கௌரீ தேவி இவர்களுடன் கூடியிருப்பதுமாகும். இது ஏழாவது நிருத்தமாகும். இது, உலகத்திற்கு விருத்தியையளிக் கும். மற்றது முதலாவது நிருத்தத்தைப் போன்ற தாகும்.''

என்று ஸ்ரீதத்துநிதி தெரிவிக்கிறது.[96]

**ஆனந்த தாண்டவம்**

இத்தாண்டவத்தை இறைவன் முதன்முதலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்களுக்காகத் தில்லையில் ஆடினான் என்பது கோயிற்புராணக் கருத்து.[97] அதற்கு முன்பே, இலக்கியங்களில் ஆனந்த தாண்டவத்தைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அவை பின்னர் விளக்கப்படுகின்றன. முதலில், ஆனந்தம் என்ற சொல் ஆராயப்படுகிறது.

**ஆனந்தம்: சொல்லும் பொருளும்**

ஆனந்தம் என்ற சொல்லிற்குப் பேரின்பம் என்ற பொருளைத் தருகிறது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி.[98] மதுரைத் தமிழ்ப்பேரகராதி, அரத்தை, கடவுள், சந்தோஷம், பாக்குற்றங்களினோர் வகை, பேரின்பம் என்ற பொருள்களைக் குறிப்பிடுகிறது.[99] பேரின்பம், பாவில் வரும் குற்றங்களுள் ஒன்று என்ற பொருள்களைக் கழகத் தமிழ் அகராதி கூறுகிறது.[100] பேரின்பம், சாக்காடு என்ற பொருள்களைச் செந்தமிழ் அகராதி செப்புகிறது.[101]

மேற்கண்ட பொருள்களில் பேரின்பம் என்ற பொருளே ஆனந்தம் என்ற சொல்லிற்குப் பொருந்தி வருகிறது. அத்தகைய பேரின்பமயமான—மகிழ்ச்சியான நிலையில் இறைவன் ஆடிய தாண்டவமே ஆனந்த தாண்டவமாகும்.

**ஆனந்த தாண்டவத்தின் தோற்றம்**

ஆனந்த தாண்டவக்கோல நடராசரின் தோற்றம் பற்றிப் பல கருத்துகள் அறிஞர்களிடையே நிலவுகின்றன. ச. மெய்யப்

பன், ஆனந்த தாண்டவக்கோல நடராசரின் தோற்றம் பற்றி தம் நூலில்,

> ''சித்சபையில் விளங்கும் நடராஜப் பெருமானின் திருவுருவம் விஞ்ஞானம், மதம், கலை ஆகிய அனைத்தையும் ஒன்றாக்கி விளக்கும் ஓர் உண்மை ஒளியாகும். சோழப் பேரரசன் இராஜராஜன் காலத்தில்தான் இத்திருவுருவம் முதன்முதலில் தோற்றுவிக்கப்பட்டது என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. அதன் பின்னரே, அனைத்துச் சிவாலயங்களிலும் இத்திருவுருவம் அமையலாயிற்று''[102]

என்று குறிப்பிட்டுள்ளார்.

தென்னிந்தியாவில் மிகப்பல ஆனந்த தாண்டவத் திருமேனிகள் கிடைத்துள்ளன. ஆனால், அவை பெரும்பாலும் பதினான்காம் அல்லது பதினைந்தாம் நூற்றாண்டு அல்லது அதற்கும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவை என்று பானர்ஜி கூறுகிறார்.[103] ஆனந்த தாண்டவத் திருமேனிகள் சோழர் காலத்தில் தோற்றம் பெற்றவை என்பது ஆனந்த குமாரசாமியின் கருத்து.[104]

இக்கருத்துகள் பொருத்தமுற காணப்படவில்லை. ஏனெனில், ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமூலர் ஆனந்த தாண்டவத்தைக் குறிப்பிடுகிறார்.[105] ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசரும் ஆனந்த தாண்டவக் கோலத்தைப் பாடியுள்ளார்.[106] இச்செய்திகள் இலக்கியம் காட்டும் ஆனந்த தாண்டவம் என்ற துணைத்தலைப்பில் விளக்கப்பட்டுள்ளன. மேலும், நடராசரின் கலை வடிவம் ஆறாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகவே இருந்திருக்க வேண்டும் என்ற பி.ஸ்ரீ.யின் கருத்தும் இங்கே கருதத்தக்கது.[107]

இருப்பினும், ஆனந்த தாண்டவச் சிற்பங்கள் முழுமையான வளர்ச்சியை, செம்பியன் மாதேவியார் காலத்தில்தான் அடைந்தன. இக்காரணத்தால், சோழர் காலத்தில் ஆனந்த தாண்டவக் கோல நடராசர் தோற்றம் பெற்றிருக்கும் என்று மேற்கூறிய அறிஞர்கள் கருதியிருக்க வேண்டும். அவர் காலத்தில் தான் இவ்வழிபாடு நாடு முழுவதும் பரப்பப்பட்டது. மேலும், சோழர்களின் குலத்தெய்வமாக நடராசர் விளங்கினார் என்பதும் இங்கே கருதத்தக்கது. கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த ஆனந்த தாண்டவத் திருமேனிகள்தான் நமக்குக் கிடைத்துள்ளன. அதற்கு முன் இருந்த திருமேனிகளைப்

பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை. மேலும், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் கிடைத்திருக்கும் திருமேனிகள் முழுமையான அமைப்புடன் திகழ்கின்றன.

## இலக்கியம் காட்டும் ஆனந்த தாண்டவம்

கலித்தொகையில் காணப்படும் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்ற ஆடல்கள் ஆனந்த தாண்டவமாகாது. சிலப்பதிகாரத்திலும், காரைக்காலம்மையார் பாடல்களிலும் ஆனந்த தாண்டவம் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. இறைவன் சுடுகாட்டில் ஆடும் ஆடல்களையே அவை சுட்டுகின்றன. முதன்முதலில் திருமந்திரத்தில்தான் ஆனந்த தாண்டவம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

உயிர்கள் இன்பம் அடைதற்காக இறைவன் ஐந்தொழில் புரிகின்றான். அவ்வைந்தொழிலினால் ஏற்படும் இன்பத்தை எல்லா உயிர்களும் அனுபவிக்கின்றன. அதனால், அவ்வாடல் நிகழும் அரங்கு, ஆடுவதற்குரிய பாடல்கள், பாடும்பொழுது உடன் வாசிக்கப்படும் கருவிகள், இவ்வகிலத்திலுள்ள உயிருள்ள, உயிரற்ற பொருள்கள் அனைத்திற்கும் இன்பமே ஏற்படுகின்றது என்று திருமூலர் தெரிவிக்கிறார்.[108]

இவருக்கடுத்து அப்பர், தம் பாடலில் ஆனந்த தாண்டவத் திருமேனியையே படம்பிடித்துக் காட்டியுள்ளார்.[109] அப்பாடலில் இறைவன் குனித்த புருவத்துடனும், குமிண் சிரிப்பும் கொண்டவராக ஆடல் புரிகிறார் என்று கூறியுள்ளார். இந்த இரண்டும் ஆனந்த தாண்டவத்தில்தான் நிகழும். ஏனெனில், மற்ற தாண்டவங்கள் எல்லாம் பிறருக்காக ஆடியவை. அவற்றில் மற்ற மெய்ப்பாடுகள் தோன்ற வழியுண்டு. ஒருவர் மகிழ்ந்தால் தான், அம்மகிழ்ச்சி பிறரிடம் ஏற்படும். அதுபோல இறைவன் ஆனந்த நிலையில் ஆடுவதால், அம்மகிழ்ச்சி உயிர்களுக்கும் ஏற்படுகிறது. எனவேதான், அவன் குமிண் சிரிப்புடன் ஆடல் புரிகிறான்.

மேலும், நாம் ஒருவரை உற்றுப் பார்த்தால்தான், அவர் நம்மை நோக்குவார். அப்பொழுது புருவம் வளையும். அது போல இறைவன் நம்மை உற்றுநோக்குவதால், நாம் அவன் அழகில் மயங்கி, அவனுடன் ஒன்றுகிறோம்.

அப்பாடலில், 'எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்' என்ற ஓர் அடி இடம்பெற்றுள்ளது. 'எடுத்த பொற்பாதம்'

என்பது ஆனந்த தாண்டவத்தில் காணப்படும் தூக்கிய இடது திருவடியைச் சுட்டுகிறது. மேலும், அன்னை இறைவனின் இடப் பாகம் உள்ளவள் ஆதலால், அவளின் அருளை இடது திருவடியைத் தொழுதால் பெறலாம் என்பது பெறப்படுகின்றது.

சந்தியா தாண்டவம் என்பது சிவபெருமான் பாற்கடலில் தோன்றிய நஞ்சை உண்டபின், மாலை வேளையில் ஆடியது. எனவே, இந்நிலையில், ஆனந்தம் தோன்ற வழியில்லை. உமா தாண்டவத்தில் இறைவன் இடது காலை ஒட்டி வலது காலை மேலே தூக்கியிருக்க வேண்டும் என்று ஸ்ரீதத்துவநிதி சுட்டு கிறது.[110] ஆனந்த தாண்டவத்திலோ இடது கால் வலப்பக்கம் நோக்கித் தூக்கப்பட்டிருக்க வேண்டும். கௌரியின் பொருட்டு ஆடியதால், கௌரி தாண்டவத்தில் ஆனந்தம் தோன்றாது. காளிகா தாண்டவத்தில் இறைவனின் வலது கால் உயரத் தூக்கி யும்,இடது கால் குஞ்சிதமாக முயலகன்மீதும் இடம் பெற்றிருக்க வேண்டும் என்று ஸ்ரீதத்துவநிதி தெரிவிக்கிறது.[111] சிவபெரு மான் முப்புரங்களை எரித்தபின், வெற்றிக் களிப்பினால் ஆடியதே திரிபுர தாண்டவம். இதனால், உயிர்களுக்கு ஆனந் தம் தோன்ற வழியில்லை. சங்கார தாண்டவம் என்பது அழித் தல் தொழிலைக் குறிக்கும். எனவே, 'எடுத்த பொற்பாதம்' என்பது ஆனந்த தாண்டவத்தைத்தான் குறிக்கிறது என்று கூறலாம்.

ஓரறிவே மிக்கு விளங்க, சுந்தரர் தில்லையில் ஆனந்த தாண்டவத் திருமேனியைக் கண்டதாகப் பெரியபுராணத்தில் சேக்கிழார் செப்புகிறார்.[112] இத்தகைய ஆனந்த தாண்டவத் திருமேனிகளுக்குத் தத்துவக் கருத்து சேக்கிழார் காலத்திற்குப் பின்தான் தோன்றியிருக்க வேண்டும்.ஏனெனில் அவர்,பல செவி வழிச் செய்திகளையும் கேட்டறிந்து,தம் நூலில் சுட்டியுள்ளார். அம்முறையிலேயே ஆனந்த தாண்டவத்திற்குரிய தத்துவக் கருத் தையும் தெரிவித்திருக்க வேண்டும். அவர் குறிக்காத காரணத் தால், இத்தத்துவக் கருத்து, அவர் காலத்திற்குமுன் தோன்றா மல் இருந்திருக்க முடியாது என்றும் கூறமுடியாது. இருப்பினும், தத்துவ நூல்கள் எல்லாம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில்தான் தோன்றியுள்ளன. எனவே, ஆனந்த தாண்டவத் திற்குரிய தத்துவக் கருத்து பன்னிரண்டாம் நூற்றாண்டில்தான் தோன்றியது என்பது புலனாகிறது.

ஆனால், இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல்,மறைத் தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் புரிகின்றான் என்று

திருமந்திரம் கூறுகிறது. மேலும், அது, அரனின் துடி தோற்றத்தையும், அமைத்த கை காத்தலையும், தீ அழித்தலையும், ஊன்றிய திருவடி மறைத்தலையும் அரனடி அருளையும் வழங்குவதாகத் திருமூலர் தெரிவிக்கிறார்.[113] இச்செய்தியையே உண்மை விளக்கப் பாடல் குறிப்பிடுகிறது.[114] இச்செய்தியைப் பாமர மக்களுக்குப் புரியும் வகையில் குமரகுருபரர் தம் பாடலில் புலப்படுத்தியுள்ளார்.[115]

**ஆனந்த தாண்டவச் சிற்பங்களை அமைக்கும் முறை**

சிற்ப நூல்கள் ஆனந்த தாண்டவச் சிற்பங்களை எப்படி அமைக்க வேண்டும் என்று கூறுகின்றன. இச்சிற்பங்களை அமைக்க தியானம் செய்ய வேண்டும் என்று அவை குறிப்பிடுகின்றன. சிற்பிகள் நடராசு வடிவத்தியான மந்திரமாக ஒருசில மந்திரங்களைத் தியானிக்கின்றனர் என்கிறார் க. நவரத்தினம்.

> ''ஸ்ரீநடராஜ வடிவம் மூன்று கண்களும், நான்கு தோள்களும் சாந்த குணமும், சிவப்பு நிறமும், புன் முறுவல் செய்யும் முகமும் உடையதாகவும், தலையினோடும், கொக்கினிறகும், ஊமத்தையும், எருக்கும், கங்கையும் நிலவும் ஆகிய இவற்றைச் சிரசில் அணிந்ததாகவும், வலப்பாதம் அபஸ்மார முயலகன் மேலே ஊன்றி நிற்பதாகவும், இடப்பாதம் தூக்கப்பட்டுச் சற்றே குஞ்சித்ததாகவும், வலக்கரங்களுள் முன் கரம் அபயம் அளிக்கும் கரமாகவும், பின்கரம் டமருகம் தாங்கியதாகவும், இடக்கரங்களுள் முன்னது வீசித் தொங்கவிட்டுள்ளதாகவும், பின்னது அக்நி ஏந்தியதாகவும், இடச்செவியில் திருத்தோடும், வலச்செவியில் மகர குண்டலமும் அணிந்ததாகவும், அபயக்கரத்தில் நாகபூஷணம் பூண்டதாகவும், சர்வாங்கத்திலும் விபூதி தரித்து நிலவுவதாகவும் இருக்க வேண்டும்''[116]

மேற்கண்ட கருத்து வடமொழி சுலோகங்களின் தமிழ் மொழி பெயர்ப்பாகும்.

காரணாகமம் நடேசுவர வடிவத்தைப் பின்வருமாறு தியானிக்க வேண்டும் என்று கூறுவதாக சபாரத்தினம் குறிப்பிடுகிறார்.

> ''நான்கு திருக்கரங்களும் முக்கண்களும் உடையவராகவும், இளம்பிறை, பாம்பு, ஊமத்தை, நறுமணமலர்கள்-

> இவற்றால் அலங்கரிக்கப்பட்ட சடை மகுடம் உடைய வராகவும், அனைத்துவிதமான அழகிய இலக்கணங்கள் பொருந்தியவராகவும், செந்நிற ஆடை அணிந்துள்ளவ ராகவும், வெண்ணிறம் வாய்ந்தவராகவும் குமிண் சிரிப்பு உடையவராகவும் கூத்தப்பெருமானைத் தியானிக்க வேண்டும்''[117]

இச்செய்திகளைப் பூர்வகாரணம் குறிப்பதாக அவர் சுட்டியுள் ளார். மேலும் அவர், உத்ரகாரணம் குறிப்பிடும் தியான முறை யையும் பின்வருமாறு விளக்குகிறார்.

> ''முக்கண், நான்கு திருக்கரம், சாந்தமான தோற்றம், வலச்செவியில் மகரக்குண்டலம், இடச்செவியில் கர்ண பத்திரம், ஊமத்தை, எருக்கு, கொக்கு, மந்தாரை, கொன்றை, கங்கை, பாம்பு, இளம்பிறை இவற்றை உடைய விரிசடைக்கோலம், புன்முறுவல், வலது மேற் கையில் துடி, இடது மேற்கையில் அங்கி, வலது கீழ்க்கை அபய முத்திரை, இடது கீழ்க்கை வீசிய நிலை; எடுத்த திருவடி, அபஸ்மாரத்தின் மேல் ஊன்றிய திருவடி, சிங்கத்தோல் ஆடை, புலித்தோல் மேலாடை (உத்த ரீயம்); கிங்கிணி மாலை; நாகப் பூணூல், கடகம், கேயூரம், நூபுரம் முதலான திருவாபரணங்கள், ஓங் காரவாசி, வெண்மை நிறம்; முப்பத்திரண்டு இலக் கணங்கள்—இவற்றை உடையவராகக் கூத்தப்பெரு மானைத் தியானிக்க வேண்டும்''[118]

மேற்கண்ட செய்திகள் இன்றுள்ள நடராசப் பெருமானின் முழுமையான வடிவத்தைக் காட்டுவனவாக உள்ளன. இதனடிப் படையிலே நடராச வடிவம் இயற்றப்படுகிறது. ஸ்ரீதத்துவ நிதி இதனையே சற்று விரித்துக் கூறுகிறது.

> நான்கு கைகளை உடையவரும், மூன்று கண்களை உடையவரும், விரிந்த சடைகளையுடையவரும், வெளுப்பு நிறமுடையவரும், மயில்தோகையை யணிந் திருப்பவரும், தலையில் சடையில் இடதுபக்கத்தில் ஊமத்தம்பூவையும் அரைவட்ட சந்திரனையும் தரிப்ப வரும், வலது பக்கத்தில் தனது சடையின் நுனியில் கங்கையினாலே சோபிப்பவரும், இடது காதில் கர்ண பத்ரமும், வலது காதில் மகரக் குண்டலமும் அணிந்திருப்பவரும், ஸகல ஆபரணங்களையுமணிந்

திருப்பவரும், யஞ்ஞோபவீதத்தைத் தரிப்பவரும், புலித்தோல் ஆடையை அணிந்திருப்பவரும், கால்களில் சதங்கைகளை அணிந்திருப்பவரும், இடது பக்கத்தில் கையை நீட்டிக்கொண்டிருப்பவரும், வலது பக்கத்தில் அபய ஹஸ்தத்துடனிருப்பவரும், வலது கையில் உடுக்கையைத் தரிப்பவரும், இடது கையில் அக்நியைத் தரிப்பவருமான பரமேசுவரன், அபஸ்மாரன் மேலே வைத்திருக்கும் வலது காலைக் கோணலாக வைத்துக்கொண்டும், ஊர்துவமுகமான இடதுகாலின் நுனிப் பக்கத்தை வலது பக்கமாக வைத்துக்கொண்டும் செய்யும் நர்த்தநமானது ஆநந்த தாண்டவம் எனப் படும்''

என்று ஸ்ரீதத்துவநிதி தெரிவிக்கிறது.[119]

சகளாதிகாரம் என்ற சிற்பநூல், நடேசுவரனின் ஒவ்வோர் உறுப்பினையும் எந்த அளவில் அமைக்க வேண்டும் என்று கூறு கிறது. அபஸ்மாரன் கறுப்பு வர்ணத்தோடும், சிவந்த கேசத் தோடும், பயந்த முகத்தோற்றத்தோடும், இடது கையில் சர்ப்ப மும், வலது கையில் சர்ப்பசீர்ஷ முத்திரையும் உள்ளதாகவும் அமைக்கப்பட வேண்டும்.இந்த உருவத்தின் நீளம் தேவாங்குலம் என்ற அளவு முறைப்படி 18 அங்குலம் இருக்க வேண்டும்.[120]

சிற்பரத்தினம் என்ற நூல் ஒன்பது வகையான நடன மூர்த்திகளைக் கூறுகிறது. ஒன்பது வகை நடன மூர்த்திகளுக்கும் பெயர் குறிப்பிடப்படவில்லை. ஆனால், முதலாவது நடன மூர்த்திக்குக் கூறிய முறைகள் ஆனந்த தாண்டவ மூர்த்திக்குப் பொருந்தமாக உள்ளன. இதில், இடது கையின் உள்ளங்கையின் மத்தியிலாவது அல்லது நடுவிரலின் நுனியிலாவது அல்லது நடு விரலின் நடுக்கணுவிலாவது நெருப்புச் சட்டியை அமைக்க வேண்டும். வலது கையின் விரல் நுனியை நெஞ்சுக்கு நேராக உயர்த்த வேண்டும். அபயக்கரத்தின் முற்பகுதியின் நடுவில் பாம்பு வலயத்தை அமைக்க வேண்டும். ஊன்றி நிற்கும் காலின் முழங்காலுக்கும் இடது காலின் முழங்காலுக்கும் பதினாறு அங்குலம் இடைவெளியும் உயரமும் இருக்க வேண்டும். சிவபெரு மானின் பாதத்தின் கீழுள்ள முயலகனின் அளவு நான்கு தால மாகும். இம்முயலகனின் தலை சிவனது வலதுபுறம் கீழ்நோக்கிய வாறு இருக்கும். இம்முயலகனை, சிறப்பாகப் பசுமையான பயிர் நிறமுள்ளதாகச் செய்ய வேண்டும். அதன்கீழ் பதினாறு அங்குலம் உயரமுள்ள தாமரை மலர்ப் பீடம் அமைக்க வேண்டும். அந்தப்

பீடத்தைப்போல் நான்கு மடங்கு அகலமுள்ள வட்டமான பிரபையுடன், சிவபெருமானை அமைக்க வேண்டும். அந்தவட்ட வடிவமான பிரபை சூரிய மண்டலம் போல் அமைக்கப்பட வேண்டும். இடதுபுறம் பார்வதி தேவியையும் அமைக்க வேண்டும்.[121]

சிவபெருமானைத்தான் ஆடல்கோலத்தில் அடியார்களும் இலக்கியவாதிகளும் சிற்பிகளும் கண்டு வந்திருக்கின்றனர். ஆகவே, ஆடல்வல்லானை அமைக்கும் முறையைச் சிற்ப நூல் களும், ஆகமங்களும் சுட்டியுள்ளன. ஆனால், பிற்காலத்தில் விநாயகரையும், விஷ்ணுவையும் ஆடல்கோலத்தில் படைத் திருப்பதைக் காண முடிகிறது.

**கூத்தாடும் விநாயகர்**

திருவான்மியூர் மருந்தீசுவரர் கோயிலில் அம்மன் சந்நிதியின் முன்னுள்ள மண்டபத்தின் இடப்பக்கம் முதல் வரிசையில் மூன் றாவது தூணில் கூத்தாடும் விநாயகர் சிற்பம் காணப்படுகிறது. அவர் நான்கு கைகளுடன் திகழ்கிறார். வலக்கைகள் இரண்டில் சங்கும் மணியும் உள்ளன. இடக்கைகளில் பாசக்கயிறும் கொழுக் கட்டையும் காணப்படுகின்றன. காலடியில் படமெடுத்த பாம்பு உள்ளது. படமெடுத்த பாம்பின் தலையில் இடக்காலின் விரல் கள் ஊன்றப்பட்டுள்ளன. வலக்கால் சுற்றப்பட்டுள்ள பாம்பின் மேலுள்ளது.

திருச்சக்திமுற்றும் சிவக்கொழுந்தீசர் கோயிலில் சுவாமி சந்நிதியின் வெளியேயுள்ள மண்டபத்தில் இரண்டாவது வரிசை யில் ஆறாவது தூணில் நர்த்தன கணபதி காணப்படுகிறார். அவருக்கு நான்கு கைகள் உள்ளன. அவர் இடக்காலைத் தூக்கியாடுகிறார்.

தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் முன்னுள்ள மண்டபத்தில் இடப்புறம் இரண்டாவது வரிசையில் முதல் தூணில் நர்த்தன கணபதி சிற்பம் உள்ளது. அவர் வலக் காலைத் தூக்கியாடுகிறார்.

திருச்சி தாயுமானவர் கோயிலில் சித்திரமண்டபத்தில் முதல் தூணில் நர்த்தன விநாயகர் சிற்பம் உள்ளது.

பேரூர்ப் பட்டீசுவரப்பெருமான் கோயிலில் கனகசபையின் முன்னுள்ள மண்டபத் தூணில் வலப்பக்கம் நான்காவது தூணில்

நர்த்தன கணபதி சிற்பம் உள்ளது. அவர் எட்டுக் கைகளுடன் திகழ்கிறார்.

தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலிலும், உத்தரகோச மங்கை மங்களநாத சுவாமி கோயிலிலும் நர்த்தன விநாயகர் கோயிலின் முன்புறம் காணப்படுகிறார்.

குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலிலும், மயிலை கபாலீஸ் வரர் கோயிலிலும் பிரகாரத்தில் நர்த்தன விநாயகர் சிற்பம் காணப்படுகிறது.

கீழ்வேளூர் அட்சயலிங்க சுவாமி கோயிலில் இராஜகோபுரத் தின் உட்புறம் இடப்பக்கம் கூத்தாடும் விநாயகர் சிற்பம் உள்ளது. அவர் வலக்காலைத் தூக்கியாடுகிறார். அவர் தாமரைப் பூவின்மேல் ஆடுகிறார். அவருக்கு நான்கு கைகள் உள்ளன. வலக்கையின் விரல்கள் உடைந்துள்ளன; இடப்புற முள்ள வீசிய கரத்தில் பாம்பைப் பிடித்துள்ளார்.

### ஆனந்த தாண்டவ விஷ்ணு சிற்பம்

ஸ்ரீரங்கத்தில் உள்ள அரங்கநாத சுவாமி கோயிலில் ஆஞ்ச னேயருக்குப் பின்புறத்தில் உள்ள பலிபீடத்தில் பல சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒரு சிற்பம் ஆனந்த தாண்டவ விஷ்ணு சிற்பமாகும். இச்சிற்பத்தில் வலக்கைகளில் ஒன்று அபயக் கரத்திலும், மற்றொன்று சக்கரத்தை ஏந்தியும், இடக்கைகளில் ஒன்று வேழ முத்திரையிலும், மற்றொன்று சங்கினை ஏந்தியும் உள்ளது. வலக்கால் வளைந்த நிலையில் தரையில் ஊன்றியும், இடதுகால் வலப்பக்கம் நோக்கி வளைந்த நிலையில் தூக்கப் பட்டும் அமைந்துள்ளது.

இம்மாதிரியான சிற்பம் ஒன்று உள்கோபுரத்தின் இடப்பக் கத்திலும் காணப்படுகிறது என்று இரா. கலைக்கோவன் குறிப் பிடுகிறார்.[122] இது விஷ்ணுவின் காளிங்க நர்த்தனம் அல்ல. இது வேறு; அது வேறு. இச்சிற்பம் ஆனந்த தாண்டவ நடரா சரைக் கண்ட சிற்பியின் கலை வண்ணத்தால் கற்பனையில் உருவாக்கப்பட்டதாகும். எனவே, ஆனந்த தாண்டவக் கோலம் நடராசருக்கே உரிய ஒன்று.

### ஆனந்த தாண்டவச் சிற்பங்கள்

சுண்ணாம்புக் கல்லினால், ஆடவர் ஆடும் கோலத்தில் செய்யப்பட்ட சிலை, சிந்துவெளி சின்னங்களில் கிடைத்துள்ளது.

இச்சிலை, சிவபெருமானின் நடனக் கோலமான நடராச வடிவத்திற்கு முன்னோடியாக—தொல் பழங்கால வடிவமாக சர் ஜான்.மார்ஷல் கருதுகிறார்.[123] இச்செய்தி முதல் இயலிலே விளக்கப்பட்டது.

இச்சிற்பத்திற்குப்பின் பல்லவர் காலம் வரை ஆனந்த தாண்டவச் சிற்பங்கள் இருந்ததற்கான சான்றுகள் ஒன்றும் இல்லை. அவை, காலமென்னும் தீயில் கருகிவிட்டன. நமக்கு இன்று கிடைத்திருக்கும் சிற்பங்களுள் சீயமங்கலத்தில் உள்ள தூண் சிற்பம்தான் முதன்மையானதாகத் திகழ்கிறது. ஆனால், அச்சிற்பத்தில் முழுமையான—இன்றுள்ள ஆனந்த தாண்டவ அமைப்பு இடம்பெறவில்லை.

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டத்தைச் சார்ந்த சீயமங்கலத்தில் உள்ள குகைக்கோயிலின் தூணில் ஆடல்வல்லான் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பம் பல்லவர் காலத்தைச் சார்ந்தது. இதனை, ஆனந்த தாண்டவச் சிற்பத்தின் முன்னோடியாகக் கூறலாம். இருப்பினும், ஆனந்த தாண்டவ அமைப்பின் முழுமை இச்சிற்பத்தில் காணப்பெறவில்லை. கிடைத்திருக்கும் சிற்பங்களில் இதுதான் முதன்மையானது. இச்சிற்பம் நான்கு கைகளுடன் விளங்குகிறது. இடது கால் வலப்பக்கம் நோக்கி தூக்கப்பட்டுள்ளது. வலக்கால் ஊன்றப்பட்டுள்ளது. காலடியில் முயலகன் இல்லை. வலக்கைகளில் ஒன்று அபயக்கரமாகவும், மற்றொன்று அகலில் தீ ஏந்தியதாகவும், இடக்கைகளில் ஒன்று கோடரி ஏந்தியதாகவும், மற்றொன்று இடப்பக்கமே தொங்க விடப்பட்டதாகவும் காணப்படுகிறது. இச்சிற்பம் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி அல்லது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தது என்கிறார் கமில் வி.சுலெபில்.[124]

திருச்சென்னமௌண்டியில் சிதைந்த நிலையிலுள்ள சடையர் கோயிலில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பம் தான் நமக்குக் கிடைத்திருக்கும் முழுமையான ஆனந்த தாண்டவச் சிற்பங்களுள் முதன்மையானது என்ற பாரட் (Barrett)டின் கருத்தைக் கமில் வி. சுலெபில் தம் நூலில் குறித்துள்ளார்.[125]

மேலும் அவர், திருவாவடுதுறை கோமுக்தேசுவரர் கோயிலிலும், புஞ்சை நல்துணை ஈசுவரர் கோயிலிலும், திருவெறும்பூர் எறும்பீசர் கோயிலிலும், காணப்படும் ஆனந்த தாண்டவச் சிற்பங்களில் முழுமையான அமைப்புக் காணப்படவில்லை என்று கூறுகிறார்.[126]

இனி, தமிழகத்திலுள்ள ஆனந்த தாண்டவச் சிற்பங்கள், தேவகோட்டம், பிரகாரம், தூண், இதர சிற்பங்கள், கோபுரம், சுதை, மரம், ஓவியம், திருமேனிகள் போன்ற துணைத் தலைப்புகளில் முறையே விளக்கப்படுகின்றன.

## தேவகோட்டச் சிற்பங்கள்

கருவறைக்கு வெளிப்புறம் உள்ள மாடங்கள் தேவகோஷ்டம் என்று அழைக்கப்படும். இது தமிழில் தேவகோட்டம் என்று வழங்கப்படுகிறது. பிற்காலப் பல்லவர் காலக் கோயில்களில் ஒன்றான திருத்தணி வீரட்டானேசுவரர் கோயிலில் தேவ கோட்டங்கள் காணப்படுகின்றன. ஆனால், அவற்றில் நடராசர் சிற்பம் இடம்பெறவில்லை. இத்தேவகோட்டங்கள் முற்காலச் சோழர் காலத்தில் மூன்று அல்லது ஐந்து என்ற அளவில் இடம் பெற்றன. விசயாலய சோளீசுவரம் போன்ற சில கோயில்களில் தேவகோட்டங்களே இல்லை என்கிறார் எஸ்.ஆர். பாலசுப்பிர மணியம்.[127]

கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருநல்லம் எனும் கோனேரிராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலில் தேவகோட்டத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. இக்கோயில் செம்பியன் மாதேவியால் கட்டப்பட்டது. இச்சிற்பந் தான் முதன்முதலில் தேவகோட்டத்திலுள்ள முழுமையான ஆனந்த தாண்டவக்கோல நடராசர் சிற்பமாகும். இக்கருத்தினைக் கொண்டவராக, பாரட் (Barrett) திகழ்வதாக, கமில் வி. சுவெபில் தம் நூலில் குறிப்பிடுகிறார்.[128] செம்பியன் மாதேவிக்கு அடுத்து, உத்தமசோழர் காலத்தில்தான் எல்லாக் கோயில்களிலும், ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் தேவ கோட்டத்தில் இடம்பெற்றன.

### சோழமண்டலக் கோயில்கள்

திருநல்லம் எனும் கோனேரிராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலில் தேவகோட்டத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் காணப்படுகிறார். விரித்த சடையுள்ளது; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; காலடியில் முயலகன் உள்ளான்; அருகில் காளி காணப்படுகிறாள். மூன்று கால்களை உடைய முனிவர் வலப்பக்கம் உள்ளார். அவர் பிருங்கி முனிவராவார். மேலும், இந் நடராசரை ஜுவரஹரர் என்று அழைக்கின்றனர்; தேவகோட்டத்தின் மேலும்

ஜுவரஹரர் என்று எழுதப்பட்டுள்ளது. இது தவறான ஒன்று. தாண்டவ நடராசர் என்பதுதான் சரியானது. நடராசரின் காலடியில் தேவகணங்களும் உள்ளன.

ஆடுதுறை ஆபத்சகாயேசுரர் கோயிலில் உள்ள தேவ கோட்ட நடராசச் சிற்பத்தில் இடப்புறக்கையும், காலும் உடைந்திருக்கின்றன. சடை உண்டு; பிரபை இல்லை; இடது உள்ளங் கையில் தீயுள்ளது. முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். அவனின் பார்வை நேராகவுள்ளது. நடராசரின் அருகில் காரைக்காலம்மையாரும், கீழே தேவகணங்களும் உள்ளன. சிவகாமி இல்லை.

திருச்சக்திமுற்றம் சிவக்கொழுந்தீசர் கோயிலில் தேவ கோட்ட நடராசர் சிற்பம் காணப்படுகின்றது. சடை இல்லை; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; வேழ முத்திரைக்கை மிகவும் உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கையில் உடுக்கையும் இடக்கையில் தீப்பிழம்பும் காணப்படுகின்றன. தூக்கிய திருவடியும் உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வேழ முத்திரைக்கையில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் இல்லை. காளி உடனுள்ளாள்.

திருவலஞ்சுழி சடைமுடிநாதர் கோயிலில் தேவகோட்டத்தில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது. சடை இல்லை; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; முயலகன் இல்லை; இடது உள்ளங் கையில் தீயுள்ளது; இரு கைகளும் மடித்து மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளன. அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. அப்பாம்பின் தலையானது வேழ முத்திரைக்கையின் கீழுள்ளது. நடராசரின் பார்வை சாய்ந்த நிலையில் உள்ளது. காளி நடனக் கோலத்தில் அருகில் உள்ளாள்.

திருப்புறம்பயம் சாட்சிநாதர் கோயிலில் உள்ள தேவ கோட்ட நடராசர் சிற்பம் சிதைந்த நிலையில் உள்ளது. பிரபை இல்லை; சடை இல்லை; சிவகாமி இல்லை; இருகைகளும் மடித்து உயர்த்தப்பட்டுள்ளன. உள்ளங்கையில் உள்ள தீயும், வேழ முத்திரைக் கையும், இரு கால்களும் உடைந்திருக்கின்றன. காலடியில் முயலகன் குப்புறப் படுத்திருக்கிறான்.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் தேவகோட்டத்தில் உள்ள சிற்பத்தில் பிரபை இல்லை; சடை உண்டு; சிவகாமி

இல்லை. வேழமுத்திரைக்கையில் பாம்பு சுற்றியுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இல்லை.

மாயவரம் மாயூரநாதசுவாமிக் கோயில் தேவகோட்டத்தில் நடராசர் சிற்பம் உள்ளது. சடை உண்டு; சிவகாமி இல்லை; பிரபை இல்லை; முயலகன் உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடப்பக்கம் காரைக்காலம்மையார் சிற்பமும் உள்ளது.

கங்கைகொண்டசோழபுரத்தில் உள்ள கங்கைகொண்ட சோழேச்வரம் கோயிலின் தேவகோட்ட நடராசர் சிற்பத்தில் பிரபை இல்லை; சடை உண்டு; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; இடப்பக்கம் காளி ஆடும் நிலையில் உள்ளாள்; காலடியின் கீழே காரைக் காலம்மையாரும், வாத்தியங்களை இயக்கும் தேவகணங்களும் உள்ளன.

பொதுவாக, தேவகோட்ட நடராசர் சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்படுவதில்லை; சிவகாமி அமைக்கப் பெறுவதில்லை; சடை உள்ளது; உள்ளங்கையில் தீயுள்ளது; வேழமுத்திரைக்கையும், தூக்கிய திருவடியும் உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளன. மற்ற இரு கைகளும் மடித்து, மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளன.

திருச்சக்தி முற்றம், திருவலஞ்சுழி, தஞ்சாவூர் ஆகிய இடங்களில் உள்ள தேவகோட்ட நடராசரின் காலடியில் முயலகன் இடம்பெறவில்லை.

தேவகோட்ட நடராசர் சிற்பங்கள் சோழமண்டலத்தில் காணப்படுகின்றன. மற்ற மண்டலங்களில் இடம்பெறவில்லை.

காரைக்காலம்மையார் சிற்பம் பெரியபுராணக் கருத்துப்படி நடராசர் காலடியில் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் ஆடுதுறை, மாயவரம், கங்கை கொண்ட சோழபுரம் ஆகிய இடங்களில் காணப்படுகிறது. இச்சிற்பங்களுடன் தேவ கணங்களும் இடம்பெற்றுள்ளன. அவை, ஆடுதுறை, கங்கை கொண்டசோழபுரம் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

காளிக்கும், இறைவனுக்கும் நடைபெற்ற ஆடற்போட்டிக் குப்பின் காளியும் அமைக்கப்பெறும் முறை தோன்றியிருக்க வேண்டும். இப்போட்டியானது, புராணங்களில் குறிக்கப்படு கிறது. எனவே, காலத்தை வரையறுத்துக் கூறமுடியாது. இச் சிற்பம் திருச்சக்திமுற்றம், திருவலஞ்சுழி, கங்கைகொண்ட சோழபுரம் ஆகிய இடங்களில் காணப்படுகிறது. கங்கைகொண்ட சோழபுரத்தில் மட்டும் காரைக்காலம்மையார், தேவகணங்கள், காளி ஆகிய மூவகைச் சிற்பங்களும் ஒருங்கே இடம்பெற்றுள்ளன.

## பிரகாரச் சிற்பங்கள்

கருவறையின் வெளிப்புறம் பிரகாரம் எனப்படும். அவற்றில் இடம்பெற்றுள்ள சிற்பங்கள் பிரகாரச் சிற்பங்களாகும்.

### சோழமண்டலக் கோயில்

கஞ்சனூர் அக்நீசுவரர் கோயிலின் பிரகாரத்தில் சிறிய அளவில் நடராசர் சிற்பம் உள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு. சிவகாமி உண்டு; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; வலக்கையில் உடுக்கையை ஏந்தியுள்ளார். வலக்காலை நேராக முயலகன் முதுகின் மேல் வைத்து அழுத்து கிறார். அவன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான். அவனின் தலை தூக்கிய நிலையில் உள்ளது.

### பாண்டி மண்டலக் கோயில்கள்

தென்காசி காசிவிசுவநாதர் கோயிலில் மூலத்தானத்தின் வெளிச்சுற்றில் கூத்தப்பெருமானின் கற்சிலை அமைந்துள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் இடக்காலை மடித்து நீட்டிப் படுத்துள்ளான். இச்சந் நிதியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உள்ளன. இச்சிற்பத்தின் வலப்பக்கம் காரைக்காலம்மையார் சிற்பமும் இடம்பெற்றுள்ளது. இக்கோயிலின் சிற்பம் மிகவும் பழு தடைந்த நிலையில் உள்ளது. இச்சிற்பத்தைப் பார்க்கும்பொழுது, மிகவும் பழங்காலத்தைச் சார்ந்தது என்பது புலனாகிறது. இச் சிற்பத்தில் சடைகள் பரந்து விரிந்து காணப்படவில்லை. தலை யில் மகுடம்தான் உள்ளது.

நெல்லையப்பர் கோயிலில் உள்ள சந்தன நடராசருக்குச் சடைகள் மூன்று மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளன. தலையில் மகுடம் உள்ளது. புலித் தோலாடை இடையில் சுற்றப்பட்டிருக்கிறது. அபயக்கரமான வலக்கை, வேழ முத்திரக்கையின் மேல் அமைந்துள்ளது. பிரபையில் தீப்பிழம்புகள் காணப்பெறவில்லை. அப்பிரபையின் நடுவில் ஒரு கோடு வரைந்தது'போல் உள்ளது. இடப்பக்கம் சிவகாமி வீற்றிருக்கிறாள். அந்நடராசர் சிற்பத்தில் இடது விரல் நுனியில் தீயுள்ளது. தூக்கிய திருவடியின் ஒருபகுதி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையைத் தொட்டுக் கொண்டுள்ளது. முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் முன்னே உள்ளன.

களக்காடு சத்திவாகீசர் கோயில் சிற்பத்தில் தீப்பிழம்புகளுடன் கூடிய பிரபை இடம்பெற்றுள்ளது. அப்பிரபையானது முழுவதும் வளைவாக இல்லாமல், கீழ்ப்பகுதியில் சற்று நேரே அமைந்துள்ளது. அப்பிரபையில் முப்பத்தைந்து தீப்பிழம்புகள் இடம்பெற்றுள்ளன. விரித்த சடை இல்லை; தலையில் கிரீடம் காணப்படுகிறது. கையில் கடகம் பூண்டது போல் உள்ளது. வேழ முத்திரைக்கையானது, அபயக்கரத்தின் பாதியை மறைத்துக் கொண்டுள்ளது. இடையில் புலித்தோலாடை சுற்றப்பட்டிருக்கிறது. இடது உள்ளங்கையில் தீ வைக்கப்பட்டுள்ளது. வலக்கை விரல் நுனியில் உடுக்கையைப் பிடித்துள்ளார். வலது காலடியில் உள்ள முயலகன் வலக்கையில் பாம்பைத் தூக்கிப் பிடித்திருக்கிறான். அப்பாம்பின் தலையானது, தூக்கிய இடது திருவடியின் கீழே அமைந்துள்ளது. முயலகன் நிமிர்ந்த பார்வையுடன் திகழ்கிறான். இடப்புறம் சிவகாமி தேவி இடம்பெற்றுள்ளாள்.

ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் சிற்பத்தில், இருபத்தேழு தீப்பிழம்புகளுடன் கூடிய பிரபை வளைந்த நிலையில் உள்ளது. விரிந்த சடையானது மூன்று மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. தலையில் கிரீடம் உள்ளது. அபயக்கரத்தின் கீழ்ப்பகுதியை வேழ முத்திரைக்கையானது மறைத்துக் கொண்டுள்ளது. கையில் கடகங்கள் காணப்படுகின்றன. இடது உள்ளங்கையில் தீ வைக்கப்பட்டுள்ளது. இடையில் சிவப்பு நிறப் பட்டுத் துணி கட்டப்பட்டிருக்கிறது. வலது காலடியில் உள்ள முயலகன் இருகைகளிலும் பாம்பைத் தூக்கிப் பிடித்திருக்கிறான். அப்பாம்பின் தலையானது தூக்கிய இடது திருவடியைத் தொட்டுக்

கொண்டுள்ளது. முயலகன் சாய்ந்த பார்வையுடன் திகழ்கிறான். இடப்புறம் சிவகாமிதேவி வீற்றிருக்கிறாள். அச்சிற்பத்திற்கு முன் காரைக்காலம்மையாரும் இடம்பெற்றுள்ளார்.

மதுரை மாவட்டத்தின் தலைநகரான மதுரையில் உள்ள பழைய சொக்கநாதர் கோயிலிலும் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பமும் நான்கு கைகளுடன் திகழ் கிறது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; ஆனால், தூக்கிய இடது திருவடியானது, வலது காலடியில் உள்ள முயலகன் பிடித் துள்ள படம் விரித்த பாம்பின் தலையின் மேல் காலை வைத்த நிலையில் அமைந்துள்ளது. பதஞ்சலி,வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடனுள்ளன.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலும் சுவாமி சந்நிதியின் வெளிச்சுற்றில் முதற் பிரகாரத்தில் வலப்பக்க மாடத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் இடம் பெற்றுள்ளது. இச்சிற்பத் திலும் முற் கூறியதைப் போல் தூக்கிய இடது திருவடியானது, வலது காலடியில் உள்ள முயலகன் பிடித்துள்ள படம் விரித்த பாம்பின் தலையின்மேல் காலை வைத்த நிலையில் உள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங் கையில் தீயுள்ளது மாணிக்கவாசகர்; உடன் அமர்ந்துள்ளார்.

அக்கோயிலில் இரண்டாவது பிரகாரத்தில் வடகிழக்கு மூலையில் உள்ள நூற்றுக்கால் மண்டபத்தில் (மண்டப நாயகம்) கற்சிலையாக நடராசர் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் சடை யானது, மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது. அந்திருவடியின் கீழே முயலகன் பிடித்துள்ள பட மெடுத்த பாம்பின் தலையுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி வலக்கையில் ஊமத்தம்பூவுடன் பிரபையின்றிஉள்ளாள். பிரபையானது வட்ட வடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது.

திருப்பரங்குன்றம் முருகன் கோயிலில் உள்ள முருகப் பெரு மானின் சந்நிதிக்குச் செல்லும் வழியில் பிரகாரத்தின் வலப் பக்கம் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இச் சிற்ப மும் முற்கூறிய அமைப்பிலே திகழ்கிறது. இவ்வமைப்பு முறையே பெரும்பாலான கோயில்களில் காணப்படுகிறது.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலின் பிரகாரத்தில் கௌரி தாண்டவ கற்சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் மேல் வண்ணம் பூசப்பட்டுள்ளது; பத்துக் கைகள் உள்ளன; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை மும்மூன்றாக இருபக்கமும் பரவி யுள்ளது; கங்கையும் பிறையும் உள்ளன; அபயக்கரத்தில், சூலம் உள்ளது; வலக்கைகளில் உடுக்கை, பென்சில், கத்தி, மணி ஆகியனவுள்ளன. இடக்கைகளில் தீ, பாம்பு, கேடயம், பாசம் உள்ளன. இடையில் புலித் தோலாடையுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். இச்சந்நிதியின் வெளியே வலப்பக்கம் காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் ஓவியங்களும், இடப்பக்கம் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஓவியங் களும் உள்ளன.

பொதுவாக ஆனந்த தாண்டவத்திற்கு நான்கு கைகள் இருக்க வேண்டும். இக்கோயில் சிற்பத்திலோ பத்து கைகள் உள்ளன. ஸ்ரீதத்துவநிதியும் கௌரி தாண்டவத்திற்கு நான்கு கைகள் இருக்க வேண்டும் என்று கூறியது முன்னரே விளக்கப்பட்டது. மேலும், இத்திருப்புத்தூரின் சிற்சபையில் கௌரி தாண்டவம் நிகழ்ந்ததாகப் புராணக்கதை. இதனடிப் படையில் இச்சிற்பம் கௌரி தாண்டவச் சிற்பம் எனப்படுகிறது. எனவே, இச்சிற்பம் ஆனந்த தாண்டவச் சிற்பமன்று.

திருப்பூவணம் எனும் திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் திருக் கோயிலின் பிரகாரத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது விரல் நுனியில் தீயுள்ளது; வலது விரல் நுனியில் உடுக்கையுள்ளது. அபயக்கரமானது தூக்கிய திருவடியின் முட்டிக்கு நேரே நீட்டப் பட்டுள்ளது; முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது; இடையில் புலித் தோலாடையுள்ளது. சந்நிதியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உள்ளன.

திருச்சுழியிலுள்ள திருமேனிநாதர் கோயிலின் சுவாமி சந்நி தியின் வெளிப் பிரகாரத்தில் சுதையுருவில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை வட்ட வடிவில் உள்ளது; சடை உண்டு. சடை யில் கங்கையும், பிறையும் உள்ளன. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது.

தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையின் மேலுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக் காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி இடப் பக்கம் உள்ளாள். இடப்பக்கம் பதஞ்சலி சிற்பமும், வலப்பக்கம் வியாக்கிரபாதர் சிற்பமும் உள்ளன.

திருவாப்பனூர் திருவாப்புடையார்க் கோயிலில் வெளிப் பிரகாரத்தில் சுதைச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. சடையில் கங்கை, பிறை உள்ளன; வலக்கையில் உடுக்கையுடன் சுற்றி யுள்ள பாம்பைப் பிடித்துள்ளார்; இடக்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. வலக்கால் சற்று வளைத்து, முயலகன் மேல் ஊன்றப்பட்டுள்ளது. வேழ முத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது. முயலகன் பிடித் துள்ள பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது; வலப் பக்கம் சாய்ந்து வலக்காலை மடக்கியும், இடக்காலைச் சிறிது மடக்கிப் பின் நீட்டியும் படுத்துள்ளான்; வலக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; இடக்கையில் கேடயத்தை வைத்துள்ளான்; சிவ காமி பிரபையுடன் உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள். வலப்பக்கம் காலடியில் காரைக்காலம்மையார் தாளம் போடுகிறார்; நந்தி மத்தளம் வாசிக்கிறார். வலப்பக்கச் சுவரில் வியாக்கிய பாதரும், இடப்பக்கச் சுவரில் பதஞ்சலியும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

அக்கோயிலின் சுவாமி சந்நிதியின் இடப்பக்கம் சுதைச்சிற் பம் உள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; மும்மூன்றாக இரு பக்கமும் பரவியுள்ளது; கங்கை பிறையுள்ளன; இடது உள்ளங் கையில் தீயுள்ளது. வலக்கையில் உடுக்கையைச் சுற்றியுள்ள பாம்பைப் பிடித்துள்ளார். அபயக்கரத்திற்கும் வேழமுத்திரைக் கைக்கும் இடைவெளியுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது;முயலகன் முதுகின்மேல் வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. அவன் இரு கால்களையும் நீட்டிப் படுத் துள்ளான். அவன் பிடித்துள்ள பாம்பின் தலையின்மேல் தூக்கிய திருவடியுள்ளது. சிவகாமி கையில் ஊமத்தம்பூவுடன் பிரபை யுடன் இடப்பக்கம் உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் திரு முறைகள் உள்ளன.

பாபநாசம் பாபவிநாசர் திருக்கோயிலின் பிரகாரத்தில் 'புனுகுசபாபதி' என அழைக்கப்படும் நடராசர் கற்சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; இடது உள்ளங்

கையில் தீயுள்ளது. வலக்கையில் உடுக்கையைப் பிடித்துள்ளார். முயலகன் இடக்காலை ஊன்றி, வலக்காலை மடித்து நீட்டிப் படுத்துள்ளான். தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலை மேலுள்ளது. சிவகாமி கையில் ஊமத்தம்பூவுடன் திகழ்கிறாள். வலப்பக்கம் காரைக்காலம்மை யார், பதஞ்சலி, மாணிக்கவாசகர் சிற்பங்களும் இடப்பக்கம் வியாக்கிரபாதர் சிற்பமும் காணப்படுகின்றன.

சங்கரன் கோயிலில் சங்கரநாராயணர் கோயிலுள்ளது. அக் கோயிலில் வெளிப்பிரகாரத்தில் அம்பலத்தில் நடராசர் கற் சிற்பம் உள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; இடது விரல் களில் தீயை ஏந்தியுள்ளார்; அபயக்கரத்திற்கும், தூக்கிய திரு வடிக்கும் இடையே உடுக்கை உள்ளது. தூக்கிய திருவடி முயல கன் பிடித்துள்ள பாம்பின் தலைமேல் உள்ளது. வலப்பக்கம் காரைக்காலம்மையார் சிற்பம் உள்ளது. இடப்பக்கம் சிவகாமி பிரபையின்றியுள்ளாள். அச்சந்நிதியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உள்ளன.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமி கோயிலின் பிர காரத்தில் மரகதக்கல் நடராசர் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் மேல் சந்தனம் பூசப்பட்டுள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடது உள்ளங் கையில் தீயுள்ளது; சிவகாமி உண்டு. முயலகன் இடக்காலை ஊன்றி, வலக்காலை மடித்து நீட்டிப் படுத்துள்ளான். வலப் பக்கம் காரைக்காலம்மையார் சிற்பம் உள்ளது.பதஞ்சலி வியாக் கிரபாதர் சிற்பங்களும் இருபக்கமும் உள்ளன. இடப்பக்கம் திரு முறைக்கோயில் உள்ளது.

பொதுவாக, சோழ மண்டலக் கோயிலில் பிரகாரச் சிற்பத் தில் நடராசருக்குப் பிரபை அமைக்கப்பட்டுள்ளது; சடைஉண்டு; சிவகாமி உண்டு. முயலகன் உண்டு; நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது. இம்மண்டலத்தில் உள்ள கஞ்சனூர்கோயில் தவிர, மற்ற ஊர்க்கோயில்களில் பிரகாரச் சிற்பங்கள் காணப் படவில்லை.

பாண்டி மண்டலப் பிரகாரச் சிற்பங்களில் நடராசருக்குப் பிரபை அமைக்கப்பட்டுள்ளது; சடை உள்ளது; சிவகாமி உண்டு. முயலகன் குப்புறப் படுத்துள்ளான்; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின்மேல் உள்ளது. சந்நிதியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் பிற்காலத்தில் வைக்கப்பட்டுள்ளன.

நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. ஆனால், திருநெல்வேலி, திருப்பூவணம், சங்கரன்கோயில் ஆகிய இடங்களில் உள்ள நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது. அதற்குக் காரணம் சிற்பியின் கைவண்ணமே.

'அறவா நீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க' வேண்டும் என்று காரைக்காலம்மையார் வேண்டிப் பெற்றதாகப் பெரிய புராணம் மொழிகிறது,[129] இதனடிப்படையில்தான் காரைக் காலம்மையாரை நடராசருடன் அமைக்கும் முறை தோன்றி யிருக்க வேண்டும். தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கி.பி. பதி னொன்றாம் நூற்றாண்டு வரை காரைக்காலம்மையாரின் வழி பாடு, ஊழிக்கூத்தாடும் நடராசருடன் இணைந்து இருந்தது என்கிறார் க.த. திருநாவுக்கரசு[130] ஊழிக்கூத்தாடும் நடராச ருடன் வைத்து வழிபடப்பட்ட காரைக்காலம்மையார் வழி பாடே,பிற்காலத்தில் ஆனந்த தாண்டவ நடராசருடன் வைத்து வழிபடும் வழிபாடாகியிருக்க வேண்டும். எனவே, இம்முறையில் தான் காரைக்காலம்மையாரை ஆனந்ததாண்டவ நடராசருடன் தென்காசி, ஸ்ரீவைகுண்டம், பாபநாசம், சங்கரன்கோயில், உத்தர கோசமங்கை, திருவாப்பனூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் அமைத்திருக்க வேண்டும். திருப்புத்தூர் கோயிலில் மட்டும் காரைக்காலம்மையார் ஓவிய வடிவில் இடம் பெற்றுள் ளார்.

ஆனால், பிற்காலத்தில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் கதை தோன்றிய பின், காரைக்காலம்மையார் பெரும்பாலும் இடம் பெறுவதில்லை. தென்காசி, திருநெல்வேலி, மதுரை, திருப் பூவணம், திருச்சுழி, திருவாப்பனூர், பாபநாசம், சங்கரன் கோயில்,உத்தரகோசமங்கை ஆகிய இடங்களில் உள்ள கோயில் களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் இடம் பெற்று ள்ளன. திருப்புத்தூர் கோயிலில் மட்டும் பதஞ்சலி, வியாக் கிரபாதர் உருவங்கள் ஓவியங்களாக உள்ளன. பதிமூன்றாம் நூற்றாண்டில் கோயிற்புராணம் தோன்றியபின் தான், இம் மாதிரி அமைக்கும் முறை தோன்றியிருக்க வேண்டும்.

பாண்டி, சோழ மண்டலங்களில் மட்டும்தான் பிரகாரச் சிற் பங்களில் நடராசர் இடம்பெற்றுள்ளார். மற்ற மண்டலங்களில் இடம்பெறவில்லை.

பாண்டி மண்டலத்தில் காணப்படும் நடராசர் சிற்பங்கள் 'சந்தன நடராசர்' என்று அழைக்கப்படுகின்றன. அச்சிற்பங்கள் உள்ளே பொள்ளல் கொண்டவையாகத் திகழ்கின்றன. அவற்

றின் மேல் சந்தனம் பூசப்பட்டிருக்கிறது. எனவே, அச்சிற்பங்கள் 'சந்தன நடராசர்' என்று வழங்கப்படுகின்றன. இவ்வகைச் சிற்பங்கள் திருநெல்வேலி, களக்காடு, ஸ்ரீவைகுண்டம் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

பாபநாசம் கோயிலில் உள்ள நடராசர் 'புனுகுசபாபதி' என்றழைக்கப்படுகிறார். ஏனெனில், சந்தனத்துடன் புனுகு சேர்த்து சாத்தப்படுகிறது.

உத்தரகோசமங்கையில் மட்டும் மரகதக்கல் நடராசர் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின்மேல் சந்தனம் சாத்தப்பட்டுள்ளது.

திருப்புத்தூர் கோயிலில் கௌரி தாண்டவ கற்சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தின் மேல் வண்ணம் பூசப்பட்டுள்ளது.

திருச்சுழி, திருவாப்பனூர் ஆகிய இடங்களில் உள்ளகோயில்களின் பிரகாரத்தில் சுதைச் சிற்பமாக நடராசர் விளங்குகிறார்.

தில்லைக்கோயிலில் மாணிக்கவாசகர் பெற்றிருந்த சிறப்பின் காரணமாக ஆனந்ததாண்டவநடராசருடன் மாணிக்கவாசகரை அமைக்கும் முறை தோன்றியிருக்க வேண்டும். இவ்வகைச்சிற்பம் மதுரை, பாபநாசம் ஆகிய இடங்களில் காணப்படுகிறது.

திருவாப்பனூர், உத்தரகோசமங்கை ஆகிய இடங்களில் நடராசருடன் தேவாரத் திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் திருமுறைகள் நடராசர் அருளால் கிட்டியதே ஆகும். அதாவது முதலாம் இராசராசன் காலத்தில் தில்லையில் மூவர் திருமேனிகளை நடராசரின் முன் எழுந்தருளச் செய்த போது,திருமுறைகள் இருந்த கதவு தானே திறந்தது. அவ்வறையில் புற்றிலிருந்து எடுக்கப்பட்டவைதான் இன்று தொகுக்கப் பட்டுக் காணப்படும் திருமுறைகள்.

திருவாப்பனூர் கோயிலில் நந்தி மத்தளம் வாசிக்கும் சிற்பம் உள்ளது. இச்சிற்பமானது, புராணக் கருத்துப்படி அமைக்கப் பட்டிருக்க வேண்டும்.

பாண்டி மண்டலப் பிரகாரச் சிற்பங்களில், முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின்மேல், தூக்கிய திருவடியுள்ளது. இவ்வமைப்பினைக் கண்டு ஆனந்த தாண்டவச் சிற்பங்களைப் புஜங்கத்திராசம் என்று ஆகமங்கள் சுட்டின. புஜங்கத்திராசம் என்பதற்குப் பாம்பைக் கண்டு அஞ்சி ஆடுவது என்று

பொருள். ஆனந்த தாண்டவம் என்பது மகிழ்ச்சியில் ஆடுவது. அந்நிலையில் பயம் தோன்றவே வழியில்லை. எனவே, ஆனந்த தாண்டவச் சிற்பங்களைப் புஜங்கத்திராசம் என்று சுட்டுவது பொருந்தாது.

## தூண் சிற்பங்கள்

கோயில்களின் தூண்களில் இடம்பெற்றுள்ள நடராசர் சிற்பங்கள் இங்கே விளக்கப்படுகின்றன.

### சோழ மண்டலக் கோயில்கள்

திருச்சி தாயுமானவர் கோயிலில் சுவாமி சந்நிதிக்குச் செல்லும் வழியிலுள்ள சித்திரமண்டபத்தில் வலப்பக்கம் மூன்றாவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின் மேல் வைக்கப்பட்டுள்ளது.

திருச்சி உச்சிப்பிள்ளையார் கோயிலில் வலப்பக்கம் நான்காவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது;சடை உண்டு; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் சற்று எழுந்த நிலையில் உள்ளான். எனவே, ஒரு கால் முயலகனின் காலின்மீது ஊன்றப்பட்டுள்ளது. நடராசரின் தூக்கிய திருவடி முயலகனின் தலையைத் தொட்டுக் கொண்டுள்ளது. அவனின் வலக்கையில் கத்தியுள்ளது.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் நுழைவு மண்டபத்தில் வலப்பக்கம் முதல் வரிசையில் மூன்றாவது தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; முயலகன் உண்டு;பிரபை இல்லை;சிவகாமி இல்லை; இடது விரல் நுனியில் தீயுள்ளது; பாம்பு சுற்றியுள்ள உடுக்கையை வலக்கை விரல் நுனியில் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது. காலடியில் இருபுறமும் தேவகணங்கள் உள்ளன.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் அம்பாள் சந்நிதியின் முன்னுள்ள கொலுமண்டபத்தில் இடப்பக்கம் ஆறாவது தூணில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது; பிரபை இல்லை; சடை உண்டு;சிவகாமி இல்லை;இடதுஉள்ளங்கையில் தீயுள்ளது. வலது உள்ளங்கையில் அழுத்தி உடுக்கையைப் பிடித்துள்ளார். தூக்கிய திருவடியில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன்

வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; வலக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்.

### பாண்டி மண்டலக் கோயில்கள்

மதுரை மாவட்டத்திலுள்ள திருப்பரங்குன்றம் முருகன் கோயிலிலும் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இக் கோயிலின் முன்மண்டபத்தில் முதல் வரிசையில் ஏழாவது தூணில் இச்சிற்பம் அமைந்துள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; முயலகன் உண்டு; தூக்கிய இடது திருவடியின் கீழே படம் விரித்த நிலையில் பாம்பு வீற்றிருக்கிறது. சிவகாமி உடனுள்ளாள் மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலும், கம்பத் தடி மண்டபத் தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் அமைந்துள் ளது. இச்சிற்பமும் திருப்பரங்குன்றத்தில் உள்ளது போலவே காணப்படுகிறது. இச்சிற்பத்தின் கீழே தேவகணங்கள் சூழ்ந் துள்ளன. நந்திதேவர் மத்தளம் வாசிக்கிறார்.

இராமேஸ்வரம் இராமநாத சுவாமி திருக்கோயிலில் சேதுபதி மண்டபத்தில் இரண்டாவது வரிசையில் மூன்றாவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது; சடை உண்டு; பிரபை உண்டு. பிரபையில் பத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சிவகாமி இல்லை. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. வலக்கையில் உடுக்கையைப் பிடித் துள்ளார். அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. அபயக்கரத்திற்கும் வேழமுத்திரைக்கைக்கும் இடைவெளி யுள்ளது. தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையின் மேலுள்ளது.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமி கோயிலில் சுவாமி சந்நிதிக்கு முன்னுள்ள மண்டபத்தில் ஐந்தாவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்ந்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் சற்று வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலில் சிநேகவல்லி அம்மன் சந்நிதியின் முன்னுள்ள நான்காவது தூணில் இடப் பக்கம் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; வலக்கை விரல் நுனியில் உடுக்கையும், இடக்கை விரல் நுனியில் தீயுமுள்ளன. வேழ

முத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது. முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது.

திருப்பூவணம் எனும் திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் திருக்கோயிலில் சுவாமி சந்நிதியில் இடப்பக்கம் இரண்டாவது தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. காலடியில் உள்ள முயலகனின் தலை தூக்கிய நிலையிலுள்ளது.

அக்கோயிலில் சுவாமி சந்நிதிக்குச் செல்லும் வழியில் இடப்பக்கம் இரண்டாவது வரிசையில் இரண்டாவது தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை இல்லை; சடை உண்டு; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. முயலகன் வலப்பக்கம் சாய்ந்துப் படுத்துள்ளான். அவன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது.

திருச்சுழி திருமேனிநாதர் கோயிலில் சுவாமி சந்நிதிக்கு முன்னுள்ள ஆறுகால் மண்டபத்தில் நடராசர் சிற்பம் உள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கை உள்ளது; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின் மேலுள்ளது.

அக்கோயிலில் தண்டபாணி சந்நிதியின் முன்னுள்ள முதலாவது தூணில் இடப்பக்கம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை இல்லை; சடை இல்லை; சிவகாமி இல்லை; வலக்கை விரல் நுனியில் உடுக்கையும் இடக்கை விரல் நுனியில் தீயும் உள்ளன. அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. முயலகன் சற்று எழுந்த நிலையில் உள்ளான். அவன் பிடித்துள்ள பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது.

**கொங்கு மண்டலக் கோயில்கள்**

பேரூரில் பட்டீசுவரர் கோயிலில் நடராசர் வீற்றிருக்கின்ற சபையில் இடப்பக்கம் இரண்டாவது தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; இருகைகளும் மடக்கித் தூக்கப்பட்டுள்ளன; முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். அவன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடி வைக்கப்பட்டுள்ளது.

அக்கோயிலில் பட்டீசுவரர் சந்நிதியின் முன்னுள்ள மண்டபத்தில் இடப்பக்கம் மூன்றாவது வரிசையில் முதல் தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி இல்லை; அபயக்கரத்திற்கும் வேழமுத்திரைக் கைக்கும் இடைவெளி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலைமேல் வைக்கப்பட்டுள்ளது; வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப்பட்டுள்ளது.

திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோயிலில் சிங்க மண்டபத்தில் வலப்பக்கம் இரண்டாவது தூணில் நடராசர் சிற்பம் உள்ளது; விரித்த சடை இல்லை; பிரபை இல்லை; சிவகாமி இல்லை. நடராசர் இரு விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்.

## நடுநாட்டுக் கோயில்

திருவண்ணாமலையில் உள்ள அருணாசலேசுவரர் கோயிலில் உள்ள பதினாறு கால் மண்டபத்தில் முதலாவது வரிசையில் நான்காவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பத்தில் முயலகனின் தலை நிமிர்ந்த நிலையில் உள்ளது. அவனின் வலக்கை ஊன்றிய நிலையில் உள்ளது. முயலகனின் தலைமேல் இடது கால் வைக்கப்பட்டுள்ளது. தீப்பிழம்புகளற்ற பிரபை இடம் பெற்றுள்ளது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. வேழமுத்திரையாகவுள்ள இடக்கையின்மேல் அபயக்கரமான வலக்கை வைக்கப்பட்டுள்ளது. சடை உண்டு; சிவகாமி இல்லை.

## தொண்டை மண்டலக் கோயில்கள்

சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீசுவரர் கோயிலின் தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பமானது கோயிலின் உள்ளே இரண்டாவது வரிசையில் இடப்பக்கமிருந்து இரண்டாவது தூணில் இடம்பெற்றுள்ளது. இச்சிற்பத்தில் அபயக்கரமானது வேழமுத்திரைக் கையின்மேல் வைக்கப்பட்டுள்ளது. சிவகாமி இடம்பெறவில்லை; பிரபை இடம்பெறவில்லை; விரித்த சடையும் காணப்பெறவில்லை. முயலகன் உண்டு.

சென்னையில் உள்ள மயிலை கபாலீசுவரர் கோயிலின் கிழக்கு நுழைவாயிலில் உள்ள இரண்டாவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தின் அருகில் சிவகாமி

இடம்பெறவில்லை; விரித்த சடை உண்டு; பிரபை இல்லை; முயலகன் உண்டு; ஆனால், அவன் கையில் பாம்பு இல்லை.

சென்னை கந்தகோட்டம் ஸ்ரீமுத்துக்குமார சுவாமி கோயிலில் உற்சவர் மண்டபத்தில் முதல் வரிசையில் மூன்றாவது தூணில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. பிரபை இல்லை; சிவகாமி இல்லை; சடை உண்டு; முயலகன் பிடித்துள்ள பாம்பு, முயலகனை நோக்கியுள்ளது.

திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலின் வெளியேயுள்ள பதினாறுகால் மண்டபத்தில் முதலாவது வரிசையில் மூன்றாவது தூணில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. சடைகள் மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளன. பிரபை இல்லை; சிவகாமி இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான். நடராசரின் தூக்கிய திருவடி படம் விரித்த பாம்பின் தலையின்மேலும், அப்பாம்பைப் பிடித்துள்ள முயலகனுடைய தலையின்மேலும் வைக்கப்பட்டுள்ளது.

அக்கோயிலில் திருவொற்றீசர் சந்நிதியின் வெளியேயுள்ள மண்டபத்தில் முதலாவது வரிசையில் ஐந்தாவது தூணில் வடக்குப் பார்த்த சிற்பம் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பமாகும். சடைகள் மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளன. பிரபை இல்லை; சிவகாமி இல்லை; தூக்கிய திருவடி முயலகன் கையிலுள்ள படம் விரித்த பாம்பின் தலையின்மேல் வைக்கப்பட்டுள்ளது.

அக்கோயிலில் உள்ள வசந்த மண்டபத்தில் இரண்டாவது வரிசையில் ஆறாவ்து தூணில் தெற்கு நோக்கி, ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. சடைகள் மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளன. பிரபை இல்லை; சிவகாமி இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான். இடக்கையின் இரண்டு விரல்களால் நடராசர் தீயை ஏந்தியுள்ளார். முயலகனின் வலக்கையில் உள்ள பாம்பு படம் எடுத்த நிலையிலுள்ளது.

பல்லாவரம் ஊராட்சி ஒன்றியத்தைச் சார்ந்த மாடம்பாக்கம் தேனுபுரீசுவரர் கோயிலில், சுவாமி சந்நிதியின் வலப்பக்கம் முதலாவது தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. சிவகாமிதேவி உடன் அமர்ந்திருக்கிறாள். அச்சிற்பத்தின் வலப்பக்கம் பதஞ்சலியும், வியாக்கிரபாதரும் வீற்றிருக்கின்றனர். பிரபை உண்டு; விரித்த சடைகள் ஐந்தைந்தாக

இருபக்கமும் பரவியுள்ளன. முயலகன் நிமிர்ந்த பார்வையுடன் திகழ்கிறான். அவனின் இடக்கையில் பாம்பு காணப்படுகிறது.

அக்கோயிலிலே சுவாமி சந்நிதிக்கு முன் இடப்பக்கம் முதலாவது வரிசையில் எட்டாவது தூணில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. விரித்த சடைகள் ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளன. பிரபை இல்லை. சிவகாமி இல்லை. முயலகன் வலப்பக்கம் சாய்ந்து படுத்துள்ளான். அவனின் இடக்கையில் பாம்புள்ளது. அக்கோயிலில் கல்யாண மண்டபத்தில் இடப் பக்கம் இரண்டாவது தூணில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. பிரபை உண்டு; சடைகள் இரண்டிரண்டாக இருபக்கமும் பரவியுள்ளன. சிவகாமிதேவி உள்ளாள்; முயலகன் நிமிர்ந்த பார்வையுடன் திகழ்கிறான்.

செங்கை அண்ணா மாவட்டத்தின் தலைநகரான காஞ்சிபுரத்தில் உள்ள ஏகாம்பரநாதர் கோயிலில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பம் ஏகாம்பரநாதர் சந்நிதிக்கு வெளியேயுள்ள பிரகாரத்தில் உற்சவர் மண்டபத்தின் இடப் பக்கம் பதினோராவது தூணில் இடம்பெற்றுள்ளது. இச்சிற்பத்தில் நடராசர் நான்கு கைகளுடன் திகழ்கிறார். ஊன்றிய வலது திருவடியின் கீழே முயலகன் இருக்கிறான். முயலகன் பிடித்துள்ள பாம்பு தூக்கிய திருவடியின் கீழேயுள்ளது; விரித்து சடை இல்லை; சிவகாமி இல்லை; பிரபை உண்டு; முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான். நடராசரும் நிமிர்ந்த நிலையில் உள்ளார்.

அக்கோயிலின் முன்னுள்ள பதினாறுகால் மண்டபத்தில் மூன்றாவது வரிசையில் முதல் தூணில் உட்புறம் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. பிரபை உண்டு; விரித்த சடை இல்லை; சிவகாமி இல்லை; முயலகனின் பார்வை ஒரு புறம் சாய்ந்த நிலையில் உள்ளது. முயலகன் பிடித்துள்ள படம் விரித்த பாம்பின் தலை தூக்கிய இடது திருவடியின் கீழுள்ளது.

காஞ்சிபுரத்தில் உள்ள கச்சபேஸ்வரர் கோயிலில் சுவாமி சந்நிதிக்கு முன்னுள்ள மண்டபத்தில் ஏழாவது தூணில் உட்பக்கம் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது, பிரபை இல்லை; சிவகாமி இல்லை; சடை இல்லை; முயலகனின் வலக்கையில் பாம்புள்ளது.

அக்கோயிலில் உற்சவர் மண்டபத்தின் முதல் வரிசையில் வலப்பக்கத்தில் உள்ள முதலாவது தூணின் உட்பக்கம் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் இடம்பெற்றுள்ளது. விரித்த சடை

உள்ளது. பிரபை இல்லை; சிவகாமி இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான். அவனின் கையில் பாம்புள்ளது. நடராசரின் இடக்கை வேழமுத்திரையாகவுள்ளது. அதன்மேல் அபயக்கரம் வைக்கப்பட்டுள்ளது.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலின் முன்னுள்ள பதினாறு கால் மண்டபத்தில் வலப்பக்கம் முதல் வரிசை முதல் தூணில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. முயலகன் சற்று எழுந்த நிலையில் இருக்கிறான். அதனால் தூக்கிய திருவடி முயலகனின் தலைக்கு மேலேயுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்.

பொதுவாக, சோழமண்டலக் கோயில்களில் தூண் சிற்பங்களில் சிவகாமி அமைக்கப்படுவதில்லை; பிரபையும் இடம் பெறுவதில்லை; சடை அமைக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூர் கோயிலில் மட்டும் தேவகணங்கள் உடன் அமைக்கப்பட்டுள்ளன. திருச்சி கோயிலில் மட்டும் முயலகன் கையில் கத்தியுள்ளது; அவ்வூரில் மட்டும் பிரபை அமைக்கப்பட்டுள்ளது.

பாண்டி மண்டலக் கோயில் சிற்பங்களிலும் சிவகாமி அமைக்கப்படுவதில்லை. ஆனால், மதுரை, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் மட்டும் சிவகாமி அமைக்கப்பட்டுள்ளாள். இம்மண்டலக் கோயில் சிற்பங்களுக்குப் பிரபையும் அமைக்கப்பட்டுள்ளது. ஆனால், திருவாடானை, திருப்பூவணம், திருச்சுழி ஆகிய இடங்களில் உள்ள கோயில்களின் தூண் சிற்பங்களில் பிரபை காணப்படவில்லை, இம்மண்டலச் சிற்பங்களுக்குச் சடையும் அமைக்கப்பட்டுள்ளது. திருச்சுழி சிற்பத்தில் மட்டும் சடை காணப்படவில்லை. மதுரை கோயிலில் நடராசருடன் தேவகணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. நந்தி தேவர் மத்தளம் வாசிக்கும் சிற்பமும் உடனமைந்துள்ளது.

கொங்குமண்டலச் சிற்பங்களிலும் சிவகாமி அமைக்கப்படவில்லை; பிரபை அமைக்கப்பட்டுள்ளது; சடையும் காணப்படுகிறது. ஆனால், திருச்செங்கோடு கோயிலில் மட்டும் சடை, பிரபை ஆகியன காணப்படவில்லை.

நடுநாட்டுக் கோயிலில் சிவகாமி அமைக்கப் பெறவில்லை; சடையும் பிரபையும் அமைக்கப்பட்டுள்ளன.

தொண்டைமண்டலத் தூண் சிற்பங்களில் சிவகாமி அமைக்கப் பெறுவதில்லை. ஆனால் பல்லாவரம் ஊராட்சியைச் சார்ந்த

மாடம்பாக்கம் கோயிலில் மட்டும் சிவகாமி அமைக்கப்பட்டிருக் கிறாள். இம்மண்டலச் சிற்பங்களுக்குப் பிரபையும் அமைக்கப் படுவதில்லை. மாடம்பாக்கம் கோயிலிலும், காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலிலும், திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயி லிலும், சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்பட்டுள்ளது. அம் மண்டலச்சிற்பங்களில் சடையும் காணப்படுகிறது. ஆனால் சிந்தா திரிப் பேட்டை கோயிலிலும், ஏகாம்பரநாதர் கோயிலிலும், கச்ச பேசுவரர் கோயிலிலும் உள்ள சிற்பங்களில் சடை அமைக்கப் பெறவில்லை. மாடம்பாக்கம் கோயிலில் மட்டும் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடன் அமைக்கப்பட்டுள்ளன.

எல்லா மண்டலங்களில் உள்ள கோயில்களிலும் தூண்சிற்பங் களில் சிவகாமி காணப்பெறவில்லை. தூணில் ஒரு சிற்பமே அமைக்க முடியும் என்ற நிலையில், சிவகாமி அமைக்கப்பெற வில்லை. ஆனால், திருப்பரங்குன்றம், மதுரை, மாடம்பாக்கம் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் சிவகாமி அமைக்கப் பெற்றுள்ளாள். தூண் பெரியதாக உள்ளதாலும், சிற்பியின் எண்ணத்தாலும் சிவகாமி இக்கோயில்களில் இடம்பெற்றுள் ளாள்.

## இதர சிற்பங்கள்

தேவகோட்டம், பிரகாரம், தூண் ஆகிய இடங்களில் இருந்த கற்சிற்பங்களின் அமைப்பும் அழகும் முன்னர்க் கூறப்பட்டன. இனி, கருவறையின் வெளிச் சுற்றுச்சுவர், நுழைவாயில் சுவர், சந்நிதியின் வெளிச்சுவர் ஆகிய இடங்களில் உள்ள கற்சிற்பங்கள், 'இதர சிற்பங்கள்' என்ற இத்துணைத் தலைப்பில் விளக்கப் பட்டுள்ளன.

### சோழமண்டலக் கோயில்கள்

கோனேரிராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் தெற்கு வாயிலின் இடப்பக்கம் நடராசர் கற்சிற்பம் சிறிய அளவில் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. காலடியில் முயலகன் உள்ளான். இடப்பக்கம் செம்பியன் மாதேவி நடராசரை வணங்குவதுபோல் சிற்பம் உள்ளது. சிவகாமி இல்லை.

கஞ்சனூர் அக்நீசுவரர் கோயிலில் மூலவ நடராசர் சந்நிதி யின் முன்னுள்ள சுவரின் இடப்பக்கம் கற்சிற்பமாக நடராசர்

திகழ்கிறார்; சடையுடன் விளங்குகிறார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. பிரபை இல்லை; சிவகாமி உண்டு; நான்முகன் உடன் உள்ளார். இடப்பக்கம் பதஞ்சலியும் வலப்பக்கம் வியாக்கிர பாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர். முயலகன் உண்டு.

## பாண்டி மண்டலக் கோயில்கள்

பிள்ளையார்ப்பட்டி கற்பக விநாயகர் கோயிலில் இராஜ கோபுரத்தின் கீழே துவாரபாலகரின் பக்கத்தில் வலப்பக்கம் சிறிய அளவில் ஆனந்த தாண்டவக் கற்சிற்பம் உள்ளது; பிரபை இல்லை; சடை இல்லை;சிவகாமி இல்லை; வேழ முத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

திருப்பூவணம் எனும் திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் திருக் கோயிலில் சுவாமி சந்நிதியின் வெளிச்சுவரில் ஆனந்த தாண் டவச் சிற்பம் சிறிய அளவில் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

சங்கரன் கோயிலில் சங்கரநாராயணார் திருக்கோயிலில் சங்கரலிங்கப் பெருமான் சந்நிதியின் வெளிச்சுவரில் சிறிய அளவில் கற்சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; வலக்கை விரல் நுனியில் உடுக்கையும், இடக்கை விரல் நுனியில் தீயும் உள்ளன; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; தூக்கிய திருவடி பாம்பின் தலையின் மேல் வைக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் இடப்பக்கம் நடராசர் சிற்பம் காணப் படுகிறது. அச்சிற்பத்தில் தூக்கிய திருவடி உடைந்த நிலையில் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயும், வலது விரல் நுனியில் உடுக்கையும் உள்ளன. முயலகன் ஒரு காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். இடப்பக்கம் நடராசருக்கும் சிவகாமிக்கும் இடையில் காரைக்காலம்மையார் சிற்பம் உள்ளது. வலப்பக்கம் முனிவர் ஒருவர் வணங்கிய நிலையில் நிற்கும் சிற்பமும், குடமுழா வாசிக்கும் நிலையில் ஒரு சிற்பமும் காணப்

படுகின்றன. தூக்கிய திருவடியின் கீழ் பாம்பு இருந்ததற்குரிய அமைப்பு காணப்படுகிறது.

**தொண்டை மண்டலக் கோயில்கள்**

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் சுவாமி சந்நிதியின் வெளிச்சுவரின் மேலே ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படு கிறது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. முயல கன் பிடித்துள்ள பாம்பின் மேல் தூக்கிய திருவடியுள்ளது. வேழ முத்திரைக் கையின்மீது அபயக்கரம் வைத்தது போன்ற அமைப் புள்ளது. முயலகனின் பார்வை மேல் நோக்கியுள்ளது. நடராச ரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது.

மாடம்பாக்கம் தேனுபுரீசுவரர் கோயிலின் நுழைவாயிலின் பின்பகுதியில் வலப்பக்கம் எட்டாவது சிற்பமாக ஆனந்த தாண் டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பம் யாளியின் உள்ளே அமைக்கப் பட்டுள்ளது. காலடியில் உள்ள முயலகன் உடைந்த நிலையி லுள்ளது. ஏழாவது சிற்பமானது சிவகாமியாக இருக்க வேண்டும். இரு சிற்பங்களும் சிதிலமாக உள்ளதால், ஓரளவுதான் அறிய முடி கிறது.

திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலில் திருவொற்றீ சுவரர் சந்நிதியின் கருவறையின் வெளிச்சுவரில் மேலே தெற்கு நோக்கி ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி இல்லை. வலப்பக்கம் பதஞ்சலியும், இடப்பக்கம் வியாக்கிரபாதரும் வீற்றிருக்கின்றனர். முயலகன் உண்டு.

பொதுவாக, சோழமண்டலக் கோயில்களில் இதர சிற்பங் களில் கோனேரிராஜபுரம் கோயிலில் சிவகாமி அமைக்கப்பெற வில்லை; கஞ்சனூர் கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. கோனேரி ராஜபுரம் கோயிலில் பிரபை காணப்படுகிறது; கஞ்சனூர் கோயிலில் பிரபை காணப்படவில்லை. இம்மண்டலக் கோயில் களில் சடை அமைக்கப்பட்டுள்ளது. கோனேரிராஜபுரம் கோயி லில் செம்பியன் மாதேவி வணங்கும் நிலையில் சிற்பம் உள்ளது. கஞ்சனூர் கோயிலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர், நான்முகன் சிற்பங்கள் வணங்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளன.

பாண்டி மண்டலக் கோயில்களில் சிவகாமி அமைக்கப் பெறு வதில்லை. ஆனால், திருநெல்வேலி கோயிலில் மட்டும் சிவகாமி அமைக்கப்பட்டுள்ளாள். பிள்ளையார்ப்பட்டி, சங்கரன்கோயில் ஆகிய இடங்களில் உள்ள சிற்பங்களில் பிரபை அமைக்கப்பட

வில்லை. திருப்பூவணம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் உள்ள சிற்பங்களில் பிரபை அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டலக் கோயில் சிற்பங்களில் சடை காணப்படுகிறது. ஆனால், பிள்ளையார்ப்பட்டிக் கோயிலில் மட்டும் சடை காணப்படவில்லை. திருநெல்வேலி கோயிலில் காரைக்காலம்மையார், முனிவர் ஒருவர், குடமுழா வாசிக்கும் அடியார் ஆகிய மூவரும் உடன் அமைக்கப்பட்டுள்ளனர்.

தொண்டை மண்டலக் கோயில் சிற்பங்களில் சிவகாமி அமைக்கப்படுவதில்லை. ஆனால், மாடம்பாக்கம் கோயிலில் மட்டும் சிவகாமி அமைக்கப்பட்டுள்ளாள். இம்மண்டலக் கோயில் சிற்பங்களில் பிரபை காணப்படுகிறது. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் சிற்பத்தில் சடையுள்ளது; மாடம்பாக்கம் கோயிலிலும், திருவொற்றியூர் கோயிலிலும் சடை காணப்படவில்லை. இம்மண்டலத்தில் திருவொற்றியூர் கோயிலில் மட்டும் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் காணப்படுகின்றன.

## கோபுரச் சிற்பங்கள்

கோயில்களின் நுழைவாயிலில் உள்ள இராஜ கோபுரத்திலும், சுவாமி, நடராசர் சந்நிதிகளின் மேலுள்ள விமானத்திலும் உள்ள நடராசர் சிற்பங்கள், 'கோபுரச் சிற்பங்கள்' என்ற இத்துணைத் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளன.

### சோழமண்டலக் கோயில்கள்

கும்பகோணம் சோமேசுவர சுவாமி கோயிலில் தெற்குப் பார்த்த கோபுரத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; இடது திருவடி சற்று உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது.

கும்பகோணம் ஆதிகும்பேசுவரர் கோயிலின் இராஜகோபுரத்தின் தெற்குப் பகுதியில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது; சுடருடன் கூடிய பிரபையுள்ளது; சடை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. பதஞ்சலியும்,வியாக்கிரபாதரும் உடனுள்ளனர். முயலகன் உண்டு.

திருவிடைமருதூர் மகாலிங்கேசுரர் கோயிலில் கோபுரச் சிற்பத்தில் நடராசர் காணப்படுகிறார்; பிரபை உண்டு; சடை

உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு. அச்சிற்பத்தில் வேழ முத்திரைக்கை உடைந்துள்ளது.

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலில் இராஜகோபுரத்தின் கிழக்குப் பக்கம் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு;சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகன் தூக்கிய திருவடியை நோக்குகிறான். அருகில் மாணிக்கவாசகர் சிற்பம் உள்ளது.

அக்கோயிலின் இராஜகோபுரத்தின் தெற்குப் பகுதியில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. அருகில் அடியார்கள் தொழுத நிலையில் உள்ளனர்.

தாராசுரம் ஐராவதேசுரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் சிதைந்த நிலையில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முகமும், கைகளும் சிதைந்த நிலையில் உள்ளன; கால்கள் காணப்படுகின்றன; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது.

ஆடுதுறை ஆபத்சகாயேசுரர் கோயிலில் நடராசர் சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; வேழ முத்திரைக்கை உடைந்துள்ளது. முயலகன் உண்டு.

திருச்சி தாயுமானவர் சுவாமி திருக்கோயிலின் இராஜகோபுரத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடியின் கீழ் படமெடுத்த பாம்புள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. வலப்பக்கம் பதஞ்சலியும் இடப்பக்கம் வியாக்கிரபாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர். முயலகன் உண்டு.

திருவானைக்கா ஜம்புகேசுவரர் கோயிலின் இராஜகோபுரத்தில் தென்புறம் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை இல்லை; சடை இல்லை; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; இடக்கை சிதிலமடைந்துள்ளது. முயலகன் உண்டு.

அக்கோயிலின் இராஜகோபுரத்தில் கிழக்குப் பக்கம்ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின்மேல் தூக்கிய திருவடியுள்ளது;வலப்பக்கம் நான்முகன்

மத்தளம் வாசிக்கிறார்; இடப்பக்கம் திருமால் தாளம் போடு கிறார்.

அக்கோபுரத்திலே மற்றொரு ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; தூக்கிய திருவடி சிதிலமடைந்துள்ளது. முயலகன் உண்டு.

திருவாசி மாற்றுரைவரதீசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதி யின் மேலுள்ள விமானத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை இல்லை; முயலகன் இல்லை. நடராசர் இடக்கையின் இரு விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; வலக்கால் பாம்பின்மேல் ஊன்றப்பட்டு ள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது.

கடம்பர் கோயில் கடம்பவனேஸ்வரர் கோயிலில் நடராசர் சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் உடைந்துள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. சடை இல்லை; முயலகன் உண்டு.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலின் மேற்குக் கோபுரத் தில் தெற்கு நோக்கி நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடியானது முயலகன் பிடித் துள்ள பாம்பின் தலைமேல் வைக்கப்பட்டுள்ளது; வலக்கால் சற்று நேரே ஊன்றப்பட்டுள்ளது.

அக்கோயிலின் கிழக்குக் கோபுரத்தில் உள்ள நடராசர் சிற்பத்தில் சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; பாம்பு சுற்றியுள்ள உடுக் கையை வலக்கையில் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலைமேலுள்ளது.

கீழ்வேளூர் அட்சயலிங்க சுவாமி கோயிலில் கிழக்கு இராஜ கோபுரத்தின் உட்புறம் வலப்பக்கத் தேவகோட்டத்தில் நடரா சர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; புரிசடைகள் பின்னால் தொங்குகின்றன; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையுள்ளது; அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி உண்டு.

அக்கோயிலின் கிழக்கு இராஜகோபுரத்தில் நடராசர் சிற்பம் உள்ளது. ஆனால், அச்சிற்பத்தின் இடக்கை, இடக்கால் உடைந்துள்ளன; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை இல்லை; வலக்கால் நேரே முயலகன் மேல் ஊன்றப்பட்டுள்ளது.

திருவாரூர் தியாகராஜர் கோயிலின் கிழக்கு இராஜ கோபுரத்தில் முன்புறம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி இல்லை; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி சற்று இறங்கிய நிலையில் உள்ளது. முயலகன் உண்டு.

அக்கோயிலின் கிழக்கு இராஜகோபுரத்தில் பின்புறம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி உண்டு; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; பாம்பு சுற்றியுள்ள உடுக்கையை வலக்கை விரல் நுனியில் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

மாயவரம் மாயூரநாத சுவாமி கோயிலில் கிழக்கு இராஜ கோபுரத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப் பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகன் தலையைத் தூக்கிப் படுத்துள்ளான்.

அக்கோயிலின் கிழக்கு இராஜகோபுரத்தின் பின்புறம் உள்ள நடராசர் சிற்பத்தில் பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

வைத்தீஸ்வரன் கோயில் வைத்தியநாத சுவாமி கோயிலில் இராஜகோபுரத்தின் பின்புறம் இரண்டு நடராசர் சிற்பங்கள் உள்ளன; பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடியின் கீழே பாம்புள்ளது; முயலகன் உண்டு. இம்மாதிரியே மற்றொரு சிற்பமும் உள்ளது.

சிதம்பரம் நடராசர் கோயிலின் மேற்குக் கோபுரத்தின் முன்பக்கம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் நேரே ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் உண்டு.

அக்கோயிலில் மேற்குக் கோபுரத்தின் உட்புறம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள் ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலப் பக்கம் மாணிக்கவாசகரும், இடப்பக்கம் பதஞ்சலியும் உள்ளனர். சடை இல்லை; முயலகன் உண்டு.

அக்கோயிலில் தெற்குக் கோபுரத்தின் உட்புறம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. சடை இல்லை; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு.

அக்கோயிலில் வடக்குக் கோபுரத்தின் உட்புறம் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயும், வலது உள்ளங்கையில் உடுக்கையும் உள்ளன; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலப்பக்கம் வியாக்கிர பாதரும், இடப்பக்கம் பதஞ்சலியும் உள்ளனர். சடை இல்லை; முயலகன் உண்டு.

**பாண்டி மண்டலக் கோயில்கள்**

மதுரை மீனாட்சியம்மன் கோயிலின் கிழக்கு இராஜ கோபுரத்திலும், கிழக்கு உள்கோபுரத்திலும், அம்மன் சந்நிதிக்குச் செல்லும் நுழைவாயிலில் உள்ள கோபுரத்திலும், ஆனந்த தாண்டவச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இச்சிற்பங் களிலும் தூக்கிய இடது திருவடியின்கீழ் பாம்பு படம் விரித்த நிலையில் அமைந்துள்ளது. அக்கோயிலின் தெற்குக் கோபுரத் திலும் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. ஆனால், அச்சிற் பத்தின் ஊன்றிய வலது காலின் கீழே முயலகன் இல்லை. சடை இல்லை; சிவகாமி இல்லை.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் கிழக்கு உள் கோபுரத் தின் வலதுகோடியில் ஆனந்த தாண்டவ நடராசர் மட்டும் இடம் பெற்றுள்ளார். இடது பக்கம் சிவகாமியின் சிலை அமைக்கப்பட வில்லை. விரித்த சடை இல்லை. இச்சிற்பத்தில் அபயக்கர மானது வேழமுத்திரையில் அமைந்துள்ள கரத்தின் மேல் வைத்ததுபோல் உள்ளது. தீயானது, இடது கரத்தின் உள்ளங் கையில் வைக்கப்பட்டுள்ளது. வலது உள்ளங்கையில் உடுக்கை யுள்ளது. ஆனால், அக்கோயிலிலே, அம்மன் சந்நிதியிலிருந்து சுவாமி சந்நிதிக்குச் செல்லும் நுழைவாயிலின் கோபுரத்தில் இடது கோடியில் உள்ள சிற்பத்தில் நடராசருடன் நந்திதேவர்

மத்தளம் வாசிப்பதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. சிவகாமியும் இடம்பெற்றுள்ளாள்.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமி கோயிலில் கிழக்கு உள்கோபுரத்தில் இரண்டு ஆனந்த தாண்டவச் சிற்பங்கள் உள்ளன. இரண்டிலும் சிவகாமி உண்டு; பிரபை உண்டு; சடை இல்லை; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது.முயலகன் தூக்கிய திருவடியை நோக்கிப் படுத்துள்ளான்.

திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலில் நடராசர் சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் நாற்புறமும் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் உள்ளன. அவ்விமானத்தில் வடக்குப் பக்கம் தவிர, மற்ற பக்கங்களில் உள்ள நடராசர் சிற்பங்கள் சிதிலமடைந்துள்ளன. வடக்குப் பக்கமுள்ள நடராசருக்குச் சடை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலைமேல் தூக்கிய திருவடியுள்ளது; வலப்பக்கம் பதஞ்சலி வணங்கிய நிலையில் உள்ளார். பிரபை உண்டு.

பிள்ளையார்ப்பட்டி கற்பக விநாயகர் கோயிலின் இராஜ கோபுரத்தில் உள்ள ஆனந்த தாண்டவச் சிற்பம் சபை போன்ற அமைப்பில் இடம்பெற்றுள்ளது; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் இடவலமாக மாறிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். பிரபை உண்டு; சடை உண்டு; பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்களும் உடனுள்ளன.

## கொங்குமண்டலக் கோயில்கள்

பேரூர் பட்டீசுவரர் திருக்கோயிலில் இராஜகோபுரத்தில் நடராசர் சிற்பம் முகம் உடைந்த நிலையில் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு. முயலகன் உண்டு.

திருச்செங்கோடு மலையடிவாரத்தில் உள்ள ஆறுமுகசுவாமி திருக்கோயிலின் முன்னுள்ள விமானத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி இல்லை; முயலகன் இல்லை; சடை இல்லை; அபயக்கரத்திலிருந்து சற்றுத் தள்ளி வேழ முத்திரைக்கைக் கீழ்நோக்கி வீசப்பட்டுள்ளது.

அவ்வூரில் மலையடிவாரத்தில் உள்ள கைலாசநாதர் கோயிலில் இராஜகோபுரத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முயலகனின் தலை

தூக்கிய நிலையில் உள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது.

அவ்வூரில் மேற்கண்ட கோயிலின் சுவாமி சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வேழ முத்திரைக்கை கீழிறங்கிய நிலையில் உள்ளது. முயலகன் உண்டு.

அவிநாசியிலுள்ள அவிநாசிலிங்கேஸ்வரர் கோயிலில் உள்ள இராஜகோபுரத்தில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது; சடை உண்டு; பிரபை இல்லை; சிவகாமி உண்டு; வலக்கையில் உள்ள உடுக்கையில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயை அழுத்திப் பிடித்துள்ளார். முயலகன் இரு கைகளால் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின்மேல் தூக்கிய திருவடியுள்ளது. முயலகன் கால்களை மடக்கி, நீட்டிப் படுத்துள்ளான்; தலை நிமிர்ந்த நிலையில் உள்ளது.

அக்கோயிலில் சுவாமி சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் நடராசர் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; காலடியில் இரு பாம்புகள் உள்ளன. ஒரு பாம்பை முயலகன் இருகைகளால் பிடித்துள்ளான். இன்னொரு பாம்பு முயலகனின் உடம்பில் சுற்றிக் கொண்டுள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி படம் எடுத்த பாம்பின் தலையின் மேலுள்ளது. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் சிற்பங்கள் உடனுள்ளன.

**நடு நாட்டுக் கோயில்கள்**

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டத்தின் தலை நகரான திருவண்ணாமலையில் உள்ள அருணாசலேசுரர் கோயிலில் நடராசர் சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் மூன்றடுக்குகளிலும் காணப்படு படுகின்றன. அவை வடக்கே அமைந்துள்ள உண்ணாமுலையம்மன் சந்நிதியை நோக்கிய வண்ணம் உள்ளன. மூன்றடுக்குகளில் உள்ள நடராசருக்கும் விரித்த சடை இல்லை. தூக்கிய திருவடியின் கீழ் பாம்பு ஒன்றில் மட்டும் உள்ளது. பிரபையானது, கீழுள்ளதில் மட்டும் உள்ளது; மற்றவற்றில் இல்லை. நடுவில் உள்ள நடராசரின் காலடியில் மட்டும் முயலகன் இருக்கிறது. மற்றவற்றில் இல்லை. சிவகாமி உண்டு.

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலின் கிழக்குக் கோபுரத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்

தில் விரித்த சடை இல்லை; சிவகாமி இல்லை; பிரபை உண்டு. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் சற்று எழுந்த நிலையில் படுத்துள்ளான். அவன் இரு கைகளிலும் பிடித்துள்ள படம் எடுத்த பாம்பின் தலைக்கு மேலே தூக்கிய திருவடி அமைந்துள்ளது. அக்கோயிலின் தெற்குக் கோபுரத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. அச் சிற்பமானது சிதிலமடைந்துள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. முயலகன் சற்று நிமிர்ந்த நிலையில் படுத்துள்ளான். அவன் படம் எடுத்துள்ள பாம்பை இருகைகளாலும் பிடித்துள்ளான். அப்பாம்பானது, அவனை நோக்கிப் படம் எடுத்துள்ளது.

அக்கோயிலின் உள்ளே கண்டராதித்தன் கோபுரத்தில் இடப் பக்கம் ஆனந்த தாண்டவச் சிற்பம் சிதிலமடைந்துள்ளது. தூக்கிய திருவடி உடைந்துள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி இல்லை. கைகள் உடைந்துள்ளன. முயலகனும் உடைந்த நிலையில் காணப்படுகிறான். அக்கோயிலில் மேற்குக் கோபுரத்தின் பின்பகுதியில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை இல்லை. முயலகன் கையிலுள்ள படம் எடுத்த பாம்பின் தலைக்கு மேலே தூக்கிய திருவடி வைக்கப்பட்டுள்ளது.

அக்கோயிலில் வடக்குக் கோபுரத்தின் பின்பகுதியிலும் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. சிவகாமி உண்டு; சடை உண்டு; பிரபை உண்டு. வலக்கை உடுக்கையையும், இடக்கை தீயையும் மூடிய நிலையில் பிடித்துள்ளன. தூக்கிய திருவடியின் கீழே முயலகன் பிடித்துள்ள படம் எடுத்த பாம்பின் தலை உள்ளது. முயலகன் தலை சற்று நிமிர்ந்த நிலையில் உள்ளது; அவன் வலக்காலையும், இடக்காலையும் மடித்து நீட்டிய நிலையில் படுத்துள்ளான்.

## தொண்டைமண்டலக் கோயில்கள்

சென்னையில் உள்ள மயிலை கபாலீசுவரர் கோயிலின் கிழக்குக் கோபுரத்தில் ஆனந்த தாண்டவ சிற்பங்கள் காணப்படுகின்றன. கோபுரத்தின் வலப்பக்கம் உள்ள சிற்பமானது சபையின் நடுவே அமைக்கப்பட்டுள்ளது. சிவகாமி உடன் அமைக்கப் பெறவில்லை; காலடியில் முயலகன் உண்டு. இடப்பக்கம் உள்ள சிற்பத்தில் சிவகாமி இடம்பெற்றுள்ளாள். இரு முனிவர்கள் இரண்டு பக்கமும் நின்று கொண்டுள்ளனர். அவர்கள் பெரும்பாலும் பதஞ்சலி, வியாக்கிரபாதராக இருக்க வேண்டும்.

காலடியில் உள்ள முயலகன் பிடித்துள்ள பாம்பானது அதன் அருகில் படம் விரித்த நிலையில் உள்ளது. அக்கோயிலின் கிழக்கு இராஜகோபுரத்தின் தெற்குப் பகுதியில் ஆனந்த தாண்டவ நடராசர் இடம்பெற்றுள்ளார். சிவகாமி அருகில் உள்ளாள். காலடியில் முயலகன் உண்டு. பிரபை உண்டு. விரித்த சடை இல்லை.

சென்னையிலுள்ள ஏகாம்பரேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் நடராசர் சிற்பம் உள்ளது. சடை இல்லை; சிவகாமி இல்லை. பிரபை உண்டு. முயலகன் சாய்ந்து படுத்துள்ளான்.

திருவான்மியூர் மருந்தீசுவரர் கோயிலின் கிழக்குக் கோபுரத்தில் தென்புறத்தில் ஆனந்ததாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. பிரபை உண்டு; விரித்த சடை உண்டு. சிவகாமி இல்லை. முயலகன் இடக்கையில் பிடித்துள்ள பாம்பு திரும்பி, முயலகனை நோக்கியுள்ளது. அக்கோயிலின் மேற்குக் கோபுரத்தின் உட்புறம் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. விரித்த சடை உண்டு; பிரபை உண்டு. சிவகாமி இல்லை. முயலகனின் பார்வை நிமிர்ந்த நிலையில் நேரே உள்ளது.

சென்னையை அடுத்த திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி திருக்கோயிலில் தியாகராஜர் உற்சவ சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் இருந்திருக்க வேண்டும். தற்போது இம்முயலகன் சிற்பம் சிதிலமடைந்துள்ளது.

அக்கோயிலில் நடராசர் சந்நிதியின் மேலுள்ள விமானத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தில் இடதுகால் முழுவதும் உடைந்துள்ளது. வலக்கால் மட்டும் ஊன்றிய நிலையில் உள்ளது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; பிரபையில் தீப்பிழம்புகள் இல்லை; சிவகாமி உண்டு. முயலகன் பிடித்துள்ள பாம்பு படமெடுத்த நிலையில் உள்ளது.

காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலுக்குச் செல்லும் வழியில் கிழக்குப் பக்கம் சுரகரேசுவரர் கோயில் உள்ளது; அக்கோபுரத்தில் விரித்த சடையுடன், ஆனந்த தாண்டவர் இடம்பெற்றுள்ளார். காலடியில் முயலகன் காணப்படுகிறான். அவன்

பிடித்துள்ள படம் விரித்த பாம்பின் தலையின்மேல் தூக்கிய இடது திருவடி வைக்கப்பட்டுள்ளது. பிரபை உண்டு; சிவகாமி உண்டு.

காஞ்சிபுரத்தில் உள்ள கச்சபேஸ்வரர் ஆலயக் கோபுரத்திலும் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் காணப்படுகிறது. சிவகாமி இடம்பெறவில்லை. பிரபை உண்டு. சடை இல்லை; முயலகன் கையில் உள்ள பாம்பு உடைந்த நிலையில் உள்ளது. அப்பாம்பின் தலையானது தூக்கிய இடது திருவடியின் கீழே இருந்திருக்க வேண்டும்.

பொதுவாக, சோழமண்டலக் கோயில்களில் எல்லாம் கோபுரச் சிற்பங்களில் பிரபை அமைக்கப்படுவதுண்டு; சிவகாமி அமைக்கப்படுவதுண்டு.சடையானது பாதிக் கோயில்களில் இடம் பெற்றுள்ளது; பாதிக்கோயில்களில் இடம்பெறவில்லை.இதற்குக் காரணம் விரித்த சடை உணர்த்தும் நடன நுட்பம் உணரப் பெறாமையே. திருவாவடுதுறை கோயிலில் மாணிக்கவாசகர் சிற்பம் உடன் அமைக்கப்பட்டுள்ளது.அக்கோயிலில் அடியார்கள் வணங்கும் நிலையிலும் சிற்பங்கள் உள்ளன. திருவானைக்கா கோயிலில் நான்முகன் மத்தளம் வாசிக்கும் நிலையிலும்,திருமால் தாளம்போடும் நிலையிலும் சிற்பங்கள் உள்ளன.கும்பகோணம், திருச்சி, சிதம்பரம் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடனுள்ளன. இம்மண்டலத்தில் திருவாசி, திருவாரூர் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களில் நடராசரின் விரல் நுனியில் தீப்பிழம்பு காணப்படுகிறது. இம்மண்டலத்தில் திருவாசி கோயிலில் மட்டும் முயலகன் கிடையாது; பாம்பு இடம்பெற்றுள்ளது.

பாண்டிமண்டலக் கோயில்களில் உள்ள எல்லாச் சிற்பங்களுக்கும் பிரபை உண்டு; சடையானது பெரும்பாலும் அமைக்கப்படுவதில்லை. திருவாடானை, பிள்ளையார்ப்பட்டி ஆகிய இடங்களில்தான் அமைக்கப்பட்டுள்ளன. சிவகாமியும் பெரும்பாலும் அமைக்கப்படுவதுண்டு. மதுரையில் மட்டும்தான் கோபுரங்களில் இடம்பெறவில்லை; ஒரு கோபுரத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இம்மண்டலச் சிற்பங்களில் எல்லாம் முயலகன் காணப்படுகிறான். ஆனால், மதுரையில் மட்டும் ஒரு கோபுரத்தில் காணப்படவில்லை.

இம்மண்டலத்தில் மதுரைக் கோயிலில் நந்தி மத்தளம் வாசிக்கும் சிற்பம் உடன் அமைக்கப்பட்டுள்ளது. மேலும், திருவாடானை, பிள்ளையார்ப்பட்டி ஆகிய இடங்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் காணப்

படுகின்றன. இச்சிற்பங்கள் புராணக் கருத்துப் பரவியபின் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

கொங்கு மண்டலத்தில் உள்ள சிற்பங்களில் பெரும்பாலும் பிரபை அமைக்கப்படுவதுண்டு; அவிநாசியில் மட்டும் அமைக்கப் படவில்லை. சிவகாமி, சடை, முயலகன் ஆகியன எல்லாச் சிற்பங் களிலும் இடம்பெறுவதுண்டு. ஆனால், திருச்செங்கோடு ஆறு முக சுவாமி கோயிலில் மட்டும் இடம்பெறவில்லை. இம்மண்ட லத்தில் அவிநாசியில் மட்டும் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் சிற்பங்கள் உடனுள்ளன.

நடுநாட்டுக் கோயில்களில் கோபுரச் சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்படுவதுண்டு; சிவகாமி அமைக்கப்பட்டிருக்கிறாள்; சடை இல்லாமலும் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒருசில சிற்பங்களில் முயலகன் காணப்படவில்லை. திருவண்ணாமலைக் கோயிலில் விமானத்தின் மூன்றடுக்குகளிலும் நடராசர் சிற்பங் கள் சிற்பியின் எண்ணத்திற்கேற்பப் பல்வேறு வேறுபாடுகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. இம்மண்டலத்தில் திருவண்ணாமலையில் மட்டும் கோபுரச் சிற்பங்களில் நடராசர் காலடியில் முயலகன் காணப்படவில்லை.

தொண்டைமண்டலக் கோயில்களில் கோபுரச் சிற்பங்களில் பிரபை அமைக்கப்பட்டுள்ளது. சடை பெரும்பாலான சிற்பங் களில் காணப்படவில்லை. ஒருசில சிற்பங்களில்தான் காணப்படு கிறது. இம்மண்டலத்தில் உள்ள பாதிக் கோயில்களில் சிவகாமி இடம்பெறவில்லை; பாதிக் கோயில்களில் இடம்பெற்றுள்ளது. கபாலீசுவரர் கோயிலில் மட்டும் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற் பங்கள் உடன் அமைக்கப்பட்டுள்ளன.

## சுதைச் சிற்பங்கள்

மண்டப முகப்பிலும், சந்நிதியின் முகப்பிலும், சந்நிதியின் பிரகாரத்திலும் உள்ள சுதைச் சிற்பங்கள் இங்கே விளக்கப் படுகின்றன.

### சோழமண்டலக் கோயில்கள்

கும்பகோணம் சோமேசுவர சுவாமி கோயிலில் நடராசர் சந்நிதியின் வெளிமுகப்பு மண்டபத்தில் ஆனந்த தாண்டவச் சுதைச் சிற்பம் காணப்படுகிறது. அச்சிற்பத்தில் பிரபை இல்லை; சடை இல்லை; சிவகாமி உண்டு. ஆனால், சிவகாமியின் இடக்கை

உடைந்த நிலையில் உள்ளது. அச்சிற்பத்தின் வலப்பக்கமும் இடப்பக்கமும் முறையே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் தத்தம் தலைகள் உடைந்த நிலையில் காட்சியளிக்கின்றன. முயலகனின் தலை நிமிர்ந்த நிலையில் உள்ளது. அவன் வலக் கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்காலை மடித்து ஊன்றி யும், இடக்காலை நீட்டியும் படுத்துள்ளான். நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. உடுக்கையை வலது உள்ளங்கையால் அழுத்திப் பிடித்துள்ளார்,

கும்பகோணத்தில் உள்ள ஆதிகும்பேசுவரர் கோயிலில் அலங் கார மண்டபத்தின் முகப்பில் தெற்கு நோக்கி ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் நடராசர் இடது ஆள் காட்டி விரலிலும், கட்டை விரலிலும் தீயைப் பிடித்துள்ளார். சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உடைந்த நிலையில் உள்ளாள். நடராசரின் தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட் டுள்ளது. முயலகன் தூக்கிய திருவடியை நோக்கியுள்ளான். அச்சிற்பத்தின் வலப்பக்கம் பதஞ்சலியும் இடப்பக்கம் வியாக்கிர பாதரும் வீற்றிருக்கின்றனர்.

கும்பகோணம் காசி விசுவநாதர் கோயிலில் நடராசர் சந்நி தியின் பின்புறம் முகப்பில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான். நடராசர் இடக்கையின் இரு விரல் களால் தீயை ஏந்தியுள்ளார். உடுக்கையைப் பாம்புச் சுற்றிக் கொண்டுள்ளது; பாம்பின் வாலை வலக்கையின் இரு விரல்களால் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது.

சுவாமிமலை சுவாமிநாத சுவாமி கோயிலில் நடராசர் சுதைச்சிற்பம் முருகப்பெருமானின் இடப்பக்கம் உள்ளது. நடரா சர், சிவகாமி இருவரையும் இணைத்துப் பிரபையுள்ளது; சடை உண்டு; முயலகன் உண்டு. அபயக்கரத்திற்கும் வேழமுத்திரைக் கும் இடைவெளி உள்ளது.

திருச்சியில் மலையடிவாரத்தில் உள்ள மாணிக்க விநாயகர் சந்நிதியின் சுற்றுப் பிரகாரத்தில் சபை போன்ற அமைப்பில் நடராசர் ஆடுவதுபோல் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை உண்டு; முயலகன் வலக்கையில் கத்தியையும், இடக்கையில் கேடயத்தையும் ஏந்தியுள்ளான். நடராசரின் வலப்பக்கம் பதஞ்சலியும் இடப்பக்கம் வியாக்கிர பாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

திருவானைக்கா ஜம்புகேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதிக்குச் செல்லும் வழியில் வலப்பக்கம் நடராசர் சந்நிதியுள்ளது. இச்சந்நிதியின்மேல் சுதையுருவநடராசர் சிற்பம் உள்ளது.பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. முயலகன் பிடித்துள்ள படமெடுத்த பாம்பின் தலையின்மேல் தூக்கிய திருவடியுள்ளது. பதஞ்சலியும், வியாக்கிரபாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

திருவாசி மாற்றறிவரதர் எனும் மாற்றுரைவரதீசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் மேலுள்ள முகப்பில் முயலகன் இல்லாத நடராசர் சிற்பம் உள்ளது; காலடியில் பாம்புள்ளது; இடக்கையின் இருவிரல்களில் தீயை ஏந்தியுள்ளார். அபயக்கரம் மார்பிற்கு நேரே வைக்கப்பட்டுள்ளது. சடை இல்லை; பிரபை உண்டு; சிவகாமி உண்டு.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் முன்னுள்ள மண்டபத்தின் முகப்பில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கியதிருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையின் மேல் உள்ளது. வலக்கால் சற்று வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. அச்சிற்பத்தின் வலப்பக்கம் வியாக்கிரபாதரும், இடப்பக்கம் பதஞ்சலியும் வணங்கிய நிலையில் உள்ளனர். அடியார் ஒருவரின் சிற்பமும் உடனுள்ளது. ஆனால், அவ்வுருவம் சிதைந்த நிலையில் உள்ளது.

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலில் முன் மண்டப முகப்பில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் வலக்கையில் பாம்பையும் இடக்கையில் கேடயத்தையும் பிடித்துள்ளான்; சிவகாமி பிரபையுடன் உள்ளாள். தூக்கிய திருவடியின் கீழே சற்றுத் தள்ளி பாம்புள்ளது.

சிதம்பரம் நடராசர் கோயிலில் ஆயிரக்கால் மண்டபத்தின் முன்னுள்ள மண்டபத்தின் முகப்பில் நடராசர் சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை இல்லை; சிவகாமி உண்டு;எட்டுக் கைகள் உள்ளன. வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலப்பக்கம் நந்திதேவர் மத்தளம் வாசிக்கிறார்.

அக்கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தின் முகப்பிலும் நடராசர் சிற்பம் உள்ளது; நான்கு கைகள் உள்ளன;இடது உள்ளங்

கையில் தீயுள்ளது. வலக்கால் நேரே ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு; நடராசரின் வலப்பக்கம் நந்தி மத்தளம் வாசிக்க, குதிரை முகத்துடன் ஒருவர் தம்புரா மீட்ட, இந்திரன் புல்லாங்குழல் வாசிக்க, இரு முனிவர்கள் வணங்க இறைவன் ஆடுவதுபோல் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதைப்போலவே இடப்பக்கம் பதஞ்சலி வணங்க, திருமால் மிருதங்கம் வாசிக்க, பிரம்மாதாளம் போட, காலடியில் தேவகணங்கள் தாளம் போட ஆடுவதுபோல் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

**பாண்டி மண்டலக் கோயில்கள்**

இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் அனுக்க மண்டபத்தில் இடப்பக்கம் ஏழாவது எட்டாவது தூண்களுக்கு இடையில் ஆனந்த தாண்டவச் சுதைச் சிற்பம் உள்ளது; முயலகன் உண்டு; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை. இடது உள்ளங்கையில் தீப்பிழம்பும், வலது உள்ளங்கையில் உடுக்கையும் உள்ளன. முயலகன் சற்று எழும்பிய நிலையில் படுத்துள்ளான். வலப்பக்கம் நந்திதேவர் மத்தளம் வாசிக்கிறார்.

குன்றக்குடி ஆறுமுகப் பெருமான் கோயிலின் முகப்பில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு; நடராசரின் உடம்பில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; பார்வை சாய்ந்த நிலையில் உள்ளது. மாணிக்கவாசகர் வலப்பக்கம் வணங்கும் நிலையில் உள்ளார்.

மானூர் அம்பலவாணர் கோயிலில் மண்டப முகப்பில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது. சடை உண்டு; பிரபை உண்டு. வலப்பக்கம் காரைக்காலம்மையார் சிற்பம் தாளம் போட்ட நிலையில் உள்ளது. சிவகாமி உண்டு; காலடியில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உள்ளன. முயலகன் உண்டு.

**நடுநாட்டுக் கோயில்**

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலின் முன் உள்ள முகப்பு மண்டபத்தில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பமானது ஒரு கோபுரத்தின் உள்ளிருப்பது போன்று அமைக்கப்பட்டுள்ளது. பிரபை உண்டு; சிவகாமி இல்லை; விரித்த சடை உண்டு. சடையில் வலப்பக்கம் கங்கையும், இடப்பக்கம் பிறைச் சந்திரனும் காணப்படுகின்றன. முயலகன்

பிடித்துள்ள படம் விரித்த பாம்பின் தலை தூக்கிய திருவடியின் கீழ் உள்ளது. அவனின் பார்வை நேராக உள்ளது.

அக்கோயிலிலே விபசித்து முனிவர் மண்டபத்தின் பக்க மண்டபத்தில் மேற்கு நோக்கியுள்ளமுகப்பில், ஆனந்ததாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு. நடராசரின் தலை இடப்பக்கம் சற்று சாய்ந்துள்ளது. சடையின் வலப்பக்கம் கங்கையும் இடப்பக்கம் பிறையும் உள்ளன. முயலகனின் பார்வை மேல் நோக்கியுள்ளது. நடராசர் வலது உள்ளங்கையால் அழுத்தி உடுக்கையைப் பிடித்துள்ளார். இடது உள்ளங்கையில் உள்ள தீயை, விரல்களால் மூடியுள்ளார்.

**தொண்டைமண்டலக் கோயில்கள்**

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலின் உள்ளே மண்டப முகப்பில் ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இச் சிற்பம் விநாயகருக்கு வலப்பக்கத்தில் உள்ளது; பிரபை இல்லை; விரித்த சடை இல்லை; சிவகாமி இல்லை. முயலகன் பிடித்துள்ள பாம்பு அவனின் முன் படம் எடுத்த நிலையில் உள்ளது. அப் படம் எடுத்த பாம்பின் தலையின்மேல் நடராசரின் தூக்கிய திருவடி அமைந்துள்ளது. இச்சிற்பமானது ஒரு கோபுரத்தின் உள்ளிருப்பது போன்று அமைக்கப்பட்டுள்ளது.

காஞ்சிபுரம் கச்சபேஸ்வரர் கோயிலில் அலுவலக மண்டப முகப்பில் ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது; விரித்த சடை இல்லை. முயலகன் கையில் பாம்பு இல்லை. பிரபை உண்டு; சிவகாமி உண்டு. அபயக்கரமானது வேழமுத்திரைக் கையின்மீது வைக்கப்பட்டுள்ளது. முயலகனின் தலை சற்று தூக்கிய நிலையில் காணப்படுகிறது.

திருவொற்றியூர் தியாகராஜசுவாமி கோயிலில் திருவொற்றீசுவரர் சந்நிதியின் முன் உள்ள மண்டபத்தின் முகப்பில் தெற்கு நோக்கி ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தில் தூக்கிய இடது திருவடி முயலகனின் தலைமேல் வைக்கப்பட்டுள்ளது. பதினைந்து தீப்பிழம்புகளுடன் பிரபை அமைந்துள்ளது. சடை இல்லை; சிவகாமி இல்லை. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. இச்சிற்பத்தின் வலப்பக்கம் பதஞ்சலியும், மாணிக்கவாசகரும் வீற்றிருக்கின்றனர்; இடப்பக்கம் வியாக்கிரபாதர் உள்ளார். முயலகனின் கைகள் சிதிலமடைந்துள்ளன.

திருத்தணியில் மலையடிவாரத்தில் குளத்தின் அருகே உள்ள சகஸ்ர ஈஸ்வரர் திருக்கோயிலில் முகப்புச் சிற்பமாக நடராசர்

திகழ்கிறார்; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்திக் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கி உள்ளது. வலப்பக்கம் உள்ள மாணிக்கவாசகர் சிற்பத்தின் இரு கால்களும் வலக்கையும் உடைந்துள்ளன.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் நுழைவாயிலில் முகப்புச் சிற்பமாக பஞ்சசபை நடராசர் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. வலப்பக்கம் முதலாவது சிற்பமாகத் திருக்குற்றாலம் சித்திரசபை நடராசர் சிற்பம் உள்ளது; நான்கு கைகள் உள்ளன; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை உண்டு; சடாமகுடத்தில் பிறையுண்டு. அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் தலையைத் தூக்கிய நிலையில் படுத்துள்ளான்; கையில் கத்தியைப் பிடித்துள்ளான். நடராசரின் வலப்பக்கம் வியாக்கிரபாதர் வணங்கிய நிலையில் உள்ளார்.

அடுத்து, மதுரை வெள்ளியம்பல நடராசர் சிற்பம் உள்ளது. நடராசர் கால் மாறியாடுகிறார். முயலகன் இடவலமாகப் படுத்துள்ளான். சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடாமகுடத்தில் பிறையுள்ளது. வலப்பக்கம் இராசசேகர பாண்டியன் வணங்கிய நிலையில் உள்ளார்.

திருவாலங்காடு ஊர்த்துவத் தாண்டவச் சிற்பம் நடுவிலுள்ளது. அச்சிற்பத்தின் வலப்பக்கம் காரைக்காலம்மையாரும், இடப்பக்கம் முனிவர் ஒருவரும் வணங்கிய நிலையில் உள்ளனர். இடக்கால் மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது. இடக்கை அதற்கு இணையாகத் தூக்கப்பட்டுள்ளது. நடராசர் எட்டுக் கைகளுடன் திகழ்கிறார். சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் உண்டு.

அடுத்து, சிதம்பரம் பொன்னம்பல நடராசர் சிற்பம் காணப்படுகிறது. நடராசர் நான்கு கைகளுடன் காட்சியளிக்கிறார்; சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; முயலகன் கையில் கத்தியைப் பிடித்துள்ளான்; தூக்கிய திருவடியை நோக்கித் தலையைத் தூக்கியுள்ளான்.

திருநெல்வேலி தாமிரசபை நடராசர் சிற்பம் இறுதியில் உள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. முயலகன் கையில் கத்தியைப் பிடித்துள்ளான்; தலையைத்

தூக்கி, தூக்கிய திருவடியை நோக்குகிறான். இடப்பக்கம் பதஞ்சலி முனிவர் வணங்கிய நிலையில் உள்ளார்.

பொதுவாக, சோழமண்டலக் கோயில்களில் உள்ள சிற்பங்களுக்குச் சடை அமைக்கப்படுவதுண்டு. ஆனால், சோமேசுவரர் கோயிலிலும், மாற்றுரைவரதீசுவரர் கோயிலிலும் நடராசர் கோயிலிலும் உள்ள சிற்பங்களில் சடை காணப்படவில்லை. இம்மண்டலச் சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்படுவதுண்டு; சோமேசுவரர் கோயிலில் மட்டும் பிரபை காணப்படவில்லை. சிவகாமியும் பெரும்பாலும் எல்லாக் கோயில்களிலும் அமைக்கப்பட்டிருக்கிறாள். ஆனால், காசிவிசுவநாதர் கோயிலிலும், ஐம்புகேஸ்வரர் கோயிலிலும் சிவகாமி காணப் பெறவில்லை. இம்மண்டலத்தில் திருவாசி கோயிலில் முயலகன் காணப் பெறவில்லை; பாம்புதான் காணப்படுகிறது. திருச்சி கோயிலில் உள்ள முயலகன் கையில் கத்தியும் கேடயமும் காணப்படுகின்றன. திருவெண்காடு கோயிலில் உள்ள முயலகன் கையில் பாம்பையும், கேடயத்தையும் வைத்துள்ளான்.

இம்மண்டலத்தில் ஆதிகும்பேசுவரர், காசி விசுவநாதர், மாற்றுரைவரதீசுவரர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது. சோமேசுவரர், ஆதிகும்பேசுவரர், மாணிக்க விநாயகர், ஐம்புகேஸ்வரர், பஞ்சநதீஸ்வரர் ஆகிய கோயில்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் காணப்படுகின்றன. இம்மண்டலத்தில் சிதம்பரம் கோயிலில் புராணக் கருத்துப்படி நடராசர் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. அக்கோயிலில் உள்ள நடராசரின் வலக்கால் நேரே ஊன்றப்பட்டுள்ளது.

பாண்டி மண்டலக் கோயில்களில் நடராசருக்குச் சடை அமைக்கப்படுவதுண்டு. எல்லாக் கோயில்களிலும் பிரபை அமைக்கப்படுவதுண்டு. சிவகாமியும் எல்லாக்கோயில்களிலும் காணப்படுகிறாள்; இராமேஸ்வரம் கோயிலில் மட்டும் காணப்படவில்லை. இராமேஸ்வரம் கோயிலில் நந்திதேவர் மத்தளம் வாசிக்கும் சிற்பம் உடன் உள்ளது. குன்றக்குடி கோயிலில் மாணிக்கவாசகர் உடனுள்ளார். மானூர் கோயிலில் காரைக்காலம்மையார், பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடனுள்ளன.

நடுநாட்டுக் கோயிலில் உள்ள சிற்பங்களுக்குச் சடையும், பிரபையும் அமைக்கப்படுவதுண்டு. சிவகாமி ஒரு சிற்பத்தில் இடம்பெற்றுள்ளாள். மற்றொன்றில் இடம்பெறவில்லை.

தொண்டைமண்டலக் கோயில்களில் சுதைச் சிற்பங்களுக்குச் சடையும், பிரபையும் அமைக்கப்படுவதுண்டு. ஆனால், காஞ்சி புரம், திருவொற்றியூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் நடராசருக்குச் சடை அமைக்கப் பெறவில்லை. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள நடராசருக்குப் பிரபையும் அமைக்கப்பெறவில்லை. இம்மண்டலக் கோயில்களில் நடராசரு டன் சிவகாமியும் அமைக்கப் பெறுவதுண்டு. ஆனால், காஞ்சி புரம் ஏகாம்பரநாதர் கோயிலிலும், திருவொற்றியூர் தியாக ராஜர் கோயிலிலும் சிவகாமி இடம் பெறவில்லை.

இம்மண்டலத்தில் திருவொற்றியூர் கோயிலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர், மாணிக்கவாசகர் சிற்பங்கள் காணப்படு கின்றன. திருத்தணியில் மாணிக்கவாசகர் சிற்பம் உடனுள்ளது. திருவாலங்காட்டில் பஞ்ச சபைகளில் உள்ள சிற்பங்கள் உள்ளன. அவற்றுடன் பதஞ்சலி, வியாக்கிரபாதர், காரைக் காலம்மையார், முனிவர் ஒருவர், இராசசேகர பாண்டியன் ஆகிய சிற்பங்கள் உடனுள்ளன.

இம்மண்டலத்தில் உள்ள முயலகன் கையில் கத்தி காணப் படுகிறது.

## மரச் சிற்பங்கள்

கோயிற் கதவுகளிலும், தேரிலும் உள்ள சிற்பங்கள் இங்கே விளக்கப்படுகின்றன.

### சோழமண்டலக் கோயில்

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலின் தேரில் நடராசர் சிற்பம் காணப்படுகிறது. சடை உண்டு; பிரபை இல்லை; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான். பதஞ்சலி இடப்பக்கமும், வியாக்கிரபாதர் வலப்பக்கமும் உள்ளனர். நடராசரின் மேற்புறம் இருபக்கங்களிலும் தேவகணங்கள் உள்ளன.

### பாண்டிமண்டலக் கோயில்கள்

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் தாமிரசபையின் மேற்கூரையின் உட்புறம் வடக்குப் பக்கம் நடுவில் நடராசர் மரச்சிற்பம் உள்ளது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி

இல்லை; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலை மேலுள்ளது.

மானூர் அம்பலவாணர் கோயிலிலிருந்த தேர் பழுதடைந்து விட்டது. இதிலிருந்த மரச்சிற்பங்கள் கோயில் தூண்களுக் கிடையே பொருத்தப்பட்டுள்ளன. அச்சிற்பங்களுள் ஆனந்த தாண்டவச் சிற்பமும் ஒன்று. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமியின் தலை உடைந்துள்ளது; வலக்கையில் பாம்பு சுற்றி யுள்ள உடுக்கையைப் பிடித்துள்ளார்; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; வலக்கால் நேரே ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; காலடியில் பாம்பு இல்லை. முயலகன் நிமிர்ந்த நிலையில் உள்ளான்.

**நடுநாட்டுக் கோயில்**

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலில் வடக்குப்பக்கக் கோபுரத்தின் முன்னுள்ள தேரில், தெற்கு நோக்கி ஆனந்த தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. பிரபை இல்லை; சடை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. அபயக்கரத்தின் பாதியை வேழமுத்திரைக்கை மறைத்துள்ளது. முயலகனின் பார்வை நேராகவுள்ளது. அவனின் வலக்கையில் பாம்புள்ளது; இடக்கை கீழே ஊன்றியுள்ளது. இச்சிற்பத்தில் நடராசரின் பார்வை கீழ்நோக்கிய நிலையில் காணப்படுகிறது.

**தொண்டை மண்டலக் கோயில்**

திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலில், தியாகராஜ சுவாமி உற்சவர் சந்நிதியில் மரக்கதவின்மேல் இரண்டாவது சிற்பமாக ஆனந்த தாண்டவச் சிற்பம் உள்ளது. அச்சிற்பத்தில் தீப்பிழம்புகளற்ற பிரபை காணப்படுகிறது; சடை உண்டு; சிவகாமி இல்லை; இடது உள்ளங்கையில் தீ காணப்படுகிறது. முயலகன் கையில் பாம்பு இல்லை. அவன் நிமிர்ந்த நிலையில் படுத்துள்ளான்.

பொதுவாக, சோழமண்டலக் கோயில் மரச் சிற்பத்தில் சடை காணப்படுகிறது. பிரபை, சிவகாமி அமைக்கப் பெறு வதில்லை. பதஞ்சலி, வியாக்கிரபாதர், தேவகணங்கள் உடன் அமைக்கப் பெற்றுள்ளனர்.

பாண்டி மண்டலக் கோயில்களின் சிற்பத்தில் சடை, பிரபை அமைக்கப்படுவதுண்டு. திருநெல்வேலி கோயிலில் சிவகாமி

அமைக்கப் பெறவில்லை. மானூர் கோயிலில் சிவகாமி காணப் படுகிறாள். மானூர் கோயிலில் நடராசரின் இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது.

நடுநாட்டுக் கோயில் சிற்பத்தில் சடை மட்டும் அமைக்கப்படு வதுண்டு. பிரபை அமைக்கப்படுவதில்லை. சிவகாமி அமைக்கப் பட்டுள்ளாள். தொண்டை மண்டலக் கோயில் சிற்பத்தில் சடை யும், பிரபையும் அமைக்கப்படுவதுண்டு. சிவகாமி அமைக்கப்படு வதில்லை.

## ஓவியங்கள்

கோயில்களின் விதானத்திலுள்ள ஓவியங்களும், படமாகக் காட்சியளிக்கின்ற ஓவியங்களும் இத்துணைத்தலைப்பில் விளக்கப் பட்டுள்ளன.

### சோழ மண்டலக் கோயில்

கோனேரிராஜபுரம் என அமைக்கப்படும் திருநல்லம் உமாம கேசுவரர் கோயிலின் முன் மண்டபத்தில் மேல் விதானத்தில் ஆனந்த தாண்டவ ஓவியம் காணப்படுகிறது. அவ்வோவியம் ஒரு சபையினுள் ஆடுவது போலச் சித்திரிக்கப்பட்டுள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இடப்பக்கம் வீற்றிருக்கிறாள். நடராசர் இடக்கையின் இரு விரல்களில் தீயை ஏந்தியுள்ளார். வலக்கையின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார். அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. இடையில் புலித்தோலாடைச் சுற்றியிருப்பது போல் வரையப் பட்டுள்ளது. காலடியில் உள்ள முயலகன் தலையைச் சற்றுத் தூக்கிய நிலையில் படுத்துள்ளான்; அவன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான். இறை வனின் வலப்பக்கம் பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் வணங்கும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது.

சீர்காழி தோணிபுரீசுவரர் கோயிலில் ஊர்த்துவத் தாண்ட வம் ஓவியப்படமாகக் காணப்படுகிறது. அவ்வோவியத்தில் பதினாறு கைகள் உள்ளன. வலக்கால் தூக்கப்பட்டுள்ளது; இடக்கை தலைக்கு மேலே தூக்கப்பட்டுள்ளது. காலடியில் முயலகன் உள்ளான். இடையில் புலித்தோலாடை உள்ளதுபோல் வரையப்பட்டுள்ளது.

திருவிடைமருதூர் மகாலிங்கேசுரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் முன்னுள்ள மண்டபத்தின் விதானத்தில் ஓவியத்தில்

ஆனந்த தாண்டவ நடராசர் காணப்படுகிறார். சடை இல்லை; பிரபை உண்டு; சிவகாமி உண்டு. நடராசர் தீயை இடக்கையின் இரு விரல்களில் ஏந்தியுள்ளார். முயலகன் கையில் கத்தியைப் பிடித்துள்ளான். ஓர் அடியார் தொழும் நிலையில் நடராசரின் வலப்பக்கம் நிற்கிறார்.

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலின் நுழைவாயி லில் ஓவியத்தில் நடராசர் காணப்படுகிறார். சடைகள் மும்மூன் றாக இரு பக்கமும் பரவியுள்ளன. சடையில் கங்கை, பிறை காணப்படுகின்றன. பிரபை உண்டு; சிவகாமி உண்டு; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி மடித்து நீட்டப் பட்டுள்ளது. முயலகன் வலக்கையில் கத்தியையும் இடக்கையில் கேடயத்தையும் பிடித்துள்ளான்.

பட்டீச்சுரம் தேனுபுரீசுவரர் கோயிலின் நுழைவாயிலின் உள்ளே மேல் விதானத்தில் ஆனந்த தாண்டவ நடராசர் ஓவியம் காணப்படுகிறது. தீச்சுடர்களுடன் பிரபையுள்ளது. சடை உண்டு; இடக்கையின் இரு விரல்களால் தீயை ஏந்தியுள்ளார். அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள். முயலகன் உண்டு.

தாராசுரம் ஐராவதேசுரர் கோயிலில் நடராசர் மண்டபத் தின் உள்ளே ஓவியத்தில் நடராசரும் சிவகாமியும் பிரபையுடன் திகழ்கின்றனர். இவ்வோவியம் சிதைந்த நிலையில் உள்ளது.

திருச்சி தாயுமானவர் கோயிலில் சுவாமி சந்நிதிக்குச் செல்லும் வழியில் உள்ள சித்திரமண்டபத்தில் இடப்பக்கம் ஆனந்த தாண்டவ ஓவியம் உள்ளது. அத்தாண்டவர் சபையில் ஆடுவதுபோல் வரையப்பட்டிருக்கிறது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி உண்டு. முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். வலப்பக்கம் பிருங்கி முனிவர் வணங்கிய நிலை யில் காட்சியளிக்கிறார்.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் வெளிப்பிரகாரத்தில் உள்ள மண்டபத்தின் சுவரில் நடராசர் ஓவியம் காணப்படு கிறது; பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி இல்லை; வலக்கை விரல் நுனியில் உடுக்கையும், இடக்கை விரல் நுனியில் தீயும் உள்ளன. தூக்கிய திருவடி முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலை மேலேயுள்ளது. வலப்பக்கம் வியாக்கிரபாதரும், இடப் பக்கம் பதஞ்சலியும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

திருவாரூர் அரநெறியப்பர் சந்நிதியின் முன்னுள்ள மண்ட பத்தில் வலப்பக்கம் நடராசர் ஓவியம் உள்ளது. பிரபை உண்டு; சடை உண்டு; சிவகாமி ஓவியம் சிதைந்த நிலையில் உள்ளது. முயலகன் உண்டு.

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலின் முன் மண்டப விதானத்தில் வலப்பக்கமும் இடப்பக்கமும் ஒன்பது வகைத் தாண்டவங்கள் ஓவியமாக வரையப்பட்டுள்ளன. அவற்றில் ஆனந்த தாண்டவ ஓவியத்தில் பிரபை இல்லை; முயலகன் இல்லை; சடை உண்டு; நான்கு கைகள் உள்ளன, இடது உள்ளங்கையில் தீயையும், வலது உள்ளங்கையில் உடுக்கையையும் அழுத்திப் பிடித்துள்ளார். சிவகாமி இல்லை. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. நடராசரின் வலக்காலில் தண்டையும், இடக்காலில் சதங்கையும் காணப் படுகின்றன.

சிதம்பரம் நடராசர் கோயிலில் ஷண்முகர் சந்நிதியில் இடப் பக்கம் விதானத்தில் சுந்தரர் வழிநடையில் சிதம்பர தரிசனம் செய்தல் ஓவியமாக உள்ளது; பிரபை உண்டு; சிவகாமி உண்டு; சடை இல்லை; இடக்கை விரல் நுனியில் தீயும், வலக்கை விரல் நுனியில் உடுக்கையும் உள்ளன. வலக்கால் நேராக ஊன்றப் பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். வலப்பக்கம் சபையின் வெளியே சுந்தரர் வணங்கும் நிலையில் உள்ளார்.

### பாண்டி மண்டலக் கோயில்கள்

திருக்குற்றாலத்தில் சித்திரசபையே இடம்பெற்றுள்ளது. அச்சபையில் ஆனந்த தாண்டவ ஓவியம் இடம்பெற்றுள்ளது. அச்சபையைப் பற்றிய செய்திகள் மூன்றாம் இயலில் விளக்கப் பட்டுள்ளன.

இராமேஸ்வரம் இராம்நாத சுவாமி கோயிலில் சுவாமி சந்நிதியின் முன்னுள்ள அணுக்க மண்டபத்தின் விதானத்தில் பஞ்ச சபையின் ஓவியங்கள் காணப்படுகின்றன. திரிபுர தாண்டவ நடராசர் ஆறு கைகளுடன் உள்ளார். காளிகா தாண்டவத்தில் நடராசர் சூலத்தை இடுப்பிற்குக் கீழே பிடித்தாடுகிறார். இவ்வோவியம் சிதைந்துள்ளது. இத்தாண்டவத்திலும் நடரா சருக்கு ஆறு கைகள் உள்ளன. கால் மாறியாடும் ஓவியத்திலும், ஆனந்த தாண்டவ ஓவியத்திலும் நடராசருக்கு நான்கு கைகள் உள்ளன. ஊர்த்துவத் தாண்டவ நடராசருக்குப் பதினாறு கைகள் காணப்படுகின்றன.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமி கோயிலில் மூலத்தான நடராசர் சந்நிதியின் நுழைவாயிலின் விதானத்தில் ஆனந்த தாண்டவ ஓவியம் காணப்படுகிறது. சடை உண்டு; பிரபை உண்டு; சிவகாமி உண்டு. முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையின் மேல் தூக்கிய திருவடியுள்ளது. இருபக்கமும் பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

மானூர் அம்பலவாணர் கோயிலில் நடராசர் திருமேனியின் பின்புறம் ஓவியம் உள்ளது. அவ்வோவியம் மறைந்த நிலையில் உள்ளது.

## கொங்கு மண்டலக் கோயில்

பேரூர் பட்டீசுவரர் கோயிலில் சபைக்கு வெளியே வலப் பக்கம் ஆனந்த தாண்டவ ஓவியப்படம் உள்ளது. அவ்வோவியத்தில் நடராசர் நான்கு கைகளுடன் திகழ்கிறார். முயலகனின் வலக்கையில் கத்தியும், இடக்கையில் கேடயமும் உள்ளன. அடுத்துள்ள உமாதாண்டவத்தில் நடராசர் சதுர தாண்டவராகக் காட்சியளிக்கிறார்; ஆறு கைகளுடன் திகழ்கிறார்; முயலகன் வலக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். தொடர்ந்துள்ள ஓவியப் படத்தில் ஊர்த்துவத் தாண்டவத்தில் நடராசர் காலால் காதில் குழை அணிவது போலுள்ளது; எட்டுக் கைகளுடன் திகழ்கிறார். அடுத்துள்ள ஓவியப்படத்தில் பட்டிமுனி, கோமுனி, பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய நால்வரும் வணங்கும் நிலையில் மற்றொரு ஆனந்த தாண்டவம் உள்ளது. திரிபுர சங்கார தாண்டவத்தில் இறைவன் நான்கு கைகளுடன் விளங்குகிறார். முயலகன் காலடியில் நீளவாக்கில் படுத்துள்ளான். இறைவனின் இடக்கால் முயலகனின் தலையின் மேல் ஊன்றப்பட்டுள்ளது.

## நடுநாட்டுக் கோயில்

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலில் கிழக்கு கோபுரத்தின் முன் மண்டபத்தின் விதானத்தில் ஆனந்ததாண்டவ ஓவியம் காணப்படுகிறது. அவ்வோவியத்தில் விரித்த சடை இல்லை; பிரபை உண்டு. இடது உள்ளங்கையில் தீ காணப்படுகிறது. வலப் பக்கம் பதஞ்சலியும், வியாக்கிரபாதரும் வணங்குதல் போன்று சித்திரிக்கப்பட்டுள்ளது. முயலகன் கையில் உள்ள பாம்பு அவனைச் சுற்றிக் கொண்டுள்ளது. சிவகாமி உண்டு.

## தொண்டைமண்டலக் கோயில்

திருவொற்றியூர் தியாகராஜர் சுவாமி திருக்கோயிலில் தியாகராஜர் உற்சவர் சந்நிதியின் முன் உள்ள மண்டபத்தில்

ஐவகைத் தாண்டவங்கள் ஓவியப் படமாகக் காட்சியளிக்கின்றன. அப்படங்களில் பத்துக் கைகளுடன் கால் மாறியாடிய ஆடல் கோலம் ‘சந்தியா தாண்டவம்’ என்று குறிக்கப்பட்டுள்ளது. நான்கு கைகளுடன் ஆடும் திரிபுர தாண்டவத்தில் நடராசரின் இடக்கால் முயலகன் தலைமேல் ஊன்றப்பட்டுள்ளது. வலக்கால் தரையில் ஊன்றப்பட்டுள்ளது. எட்டுக் கைகளுடன் கூடிய காளிகா தாண்டவத்தில் நடராசரின் இடக்கால் முயலகன் முதுகின்மேல் ஊன்றியும், வலக்கால் சிறிது தூக்கியும் வரையப் பட்டுள்ளது. ஊர்த்துவத் தாண்டவ நடராசர் நான்கு கை களுடன் அமைக்கப்பட்டுள்ளார். வலக்கால் மேல் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது.இடக்கை அதற்குப் பொருத்தமாகத் தூக்கப் பட்டுள்ளது. இந்தத் தாண்டவங்களில் திரிபுர தாண்டவம் தவிர மற்ற தாண்டவங்களில் இரண்டு விரல்களில் தீ ஏந்தியுள்ள நிலையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. திரிபுர தாண்டவத்தில் தீ அமைக்கப் பெறவில்லை.

பொதுவாக சோழமண்டலக் கோயில்களில் ஓவிய நடராச ருக்குச் சடை, பிரபை அமைக்கப்படுவதுண்டு, திருவிடை மருதூர் கோயிலில் மட்டும் சடை காணப்படவில்லை. திருவெண்காடு கோயிலில் மட்டும் பிரபை காணப்பட வில்லை. கோனேரிராஜபுரம், பட்டீசுவரம், தஞ்சாவூர் ஆகிய இடங்களில் உள்ள நடராசரின் விரல் நுனியில் தீயுள்ளது. சிவகாமி எல்லாக் கோயில்களிலும் காணப்படுகிறாள்; தஞ்சாவூர் கோயிலிலும், திருவெண்காடு கோயிலிலும் இடம்பெறவில்லை. திருவாரூர் கோயிலில் உள்ள ஓவியத்தில் சிவகாமியின் உருவம் சிதைந்த நிலையில் உள்ளது.

இம்மண்டலத்தில் திருவிடைமருதூர் கோயிலில் உள்ள முயலகன் கையில் கத்தியுள்ளது. திருவாவடுதுறை கோயிலில் உள்ள முயலகன் கையில் கத்தி, கேடயம் ஆகியனவுள்ளன. கோனேரிராஜபுரம், தஞ்சாவூர் ஆகிய இடங்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஓவியங்கள் உடனுள்ளன. திருவிடைமருதூர் கோயிலில் அடியார் ஒருவர் தொழுத நிலையில் உள்ளார். திருச்சி கோயிலில் பிருங்கி முனிவர் வணங்கிய நிலையில் உள்ளார். சிதம்பரம் கோயிலில் சுந்தரர் வணங்கிய நிலையில் உள்ளார்.

தாராசுரம் கோயிலில் உள்ள நடராசர் ஓவியம் சிதைந்த நிலையில் உள்ளது. சீர்காழி கோயிலில் ஊர்த்துவத் தாண்டவ நடராசர் ஓவியப்படமாக உள்ளது. திருவெண்காடு கோயிலில் ஒன்பது வகைத் தாண்டவங்கள் ஓவியமாக வரையப்பட்டுள்ளன.

பாண்டி மண்டலக் கோயிலில் நடராசருக்குச் சடை, பிரபை அமைக்கப்பட்டுள்ளன. சிவகாமியும் உடனுள்ளாள். பதஞ்சலி, வியாக்கிரபாதர் வணங்கிய நிலையில் உள்ளனர். இம்மண்டலத்தில் உள்ள இராமேஸ்வரம் கோயிலில் பஞ்சசபை நடராசர் ஓவியங்கள் காணப்படுகின்றன. மானூர் கோயிலில் உள்ள நடராசர் ஓவியம் மறைந்த நிலையில் உள்ளது.

கொங்கு மண்டலக் கோயிலில் ஐவகைத் தாண்டவங்கள் ஓவியப்படமாகக் காட்சியளிக்கின்றன.

நடுநாட்டுக் கோயிலில் நடராசருக்கு சடை அமைக்கப்படவில்லை; பிரபை, சிவகாமி உண்டு. பதஞ்சலி, வியாக்கிரபாதர் வணங்கிய நிலையில் உள்ளனர்.

தொண்டை மண்டலக் கோயிலில் ஐவகைத் தாண்டவங்கள் ஓவியப் படமாகக் காட்சியளிக்கின்றன.

## திருமேனிகள்

முற்காலச் சோழர் காலத்தில் கிடைத்த திருமேனிகளில் முதன்மையானது ஒக்கூர் திருமேனிதான். இத்திருமேனி இன்று சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. இத்திருமேனி நான்கு கைகளுடன் ஆனந்த தாண்டவக் கோலத்தில் திகழ்கிறது. வலக் கைகளில் ஒன்று அபயக்கரமாகவும், மற்றொன்று உடுக்கை ஏந்தியதாகவும், இடக்கைகளில் ஒன்று தீ ஏந்தியதாகவும் மற்றொன்று வேழமுத்திரைக்கையாகவும் உள்ளன. இடக்கையில் உள்ள தீயானது,ஓர்அகலில் உள்ளது; உள்ளங்கையில் காணப்படவில்லை. இரு விரல்களால் பிடித்தது போலுள்ளது. விரித்த சடையானது நான்கு நான்காக இருபக்கமும் பரவியுள்ளது. தீப்பிழம்புகளைக் கொண்ட பிரபையானது, பத்மபீடத்தில் பொருந்தியுள்ளது.

தண்டந்தோட்டம் நடனபுரீசுவரர் கோயிலில் இருந்த திருமேனியும் முற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்தது. இத்திருமேனி இன்று சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. இத்திருமேனியில் ஊன்றிய காலைவிட சற்று உயர்ந்த நிலையில் இடக்கால் வலப்பக்கம் நோக்கித் தூக்கப்பட்டுள்ளது. வேழமுத்திரைக் கையும் சற்று வளைந்து காணப்படுகிறது. அபயக்கரமும் சற்று சாய்ந்த நிலையில் உள்ளது. இத்திருமேனியில் ஆடல் வல்லானின் பாதம் முயலகனின் முதுகுப்பகுதி முழுவதையும் அழுத்திய வண்ணம் உள்ளது.

முற்காலச் சோழர் கால நடராசர் திருமேனி தெற்கு கென்சிங்டனில் உள்ள விக்டோரியா ஆல்பர்ட் அருங்காட்சியகத்தில் உள்ளது. அத்திருமேனியில் சடைகள் ஐந்து ஐந்தாகப் பிரிந்துள்ளன. அச்சடைகளில் ஒன்றில் கங்காதேவி வணங்கிய நிலையில் நிற்கிறாள். வேழமுத்திரைக்கையின் மேல் அபயக்கரம் அமைந்தது போலுள்ளது. அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. மற்றொரு வலக்கையில் உடுக்கையும், இடக்கையில் தீயுமுள்ளன. மூன்று நாக்குகளுடன் இருபத்தொரு தீப் பிழம்புகளுடன் பிரபை அமைந்துள்ளது. அப்பிரபையானது, தாமரை இதழ்களில் பொருந்திய நிலையில் அமைந்துள்ளது.[131]

சென்னை அருங்காட்சியகத்தில் உள்ள திருவாலங்காட்டு நடராசரும் முற்காலச் சோழர்களின் ஓர் அரிய படைப்பு. இத்திருமேனியைக் கண்டு, வியக்காதவர்கள் உலகில் யாருமே இல்லை. இத்திருமேனியில் பிரபை உடைந்த நிலையில் உள்ளது. சடைகள் பரந்து விரிந்து காணப்படவில்லை. சடாமகுடராக நடராசர் காட்சியளிக்கிறார். இடக்கையில் உள்ள தீ இரு விரல்களால் ஏந்தப்பட்டுள்ளது. அபயக்கரம் நன்கு உயர்ந்த நிலையில் உள்ளது. வேழமுத்திரைக்கையும் சற்று உயர்ந்து காணப்படுகிறது. முயலகனின் முதுகின்மேல் வலக்கால் நன்கு ஊன்றப்பட்டுள்ளது. அதனால் முயலகனின் முகத்தில் துன்பச்சாயல் தென்படுகிறது. இத்திருமேனியின் கீழே தாமரை மலர்ப்பீடம் உள்ளது.

கிடைத்திருக்கும் ஆனந்த தாண்டவ நடராசர் திருமேனிகளுள் முழு நிறைவானது முதன்மையானது விருத்தாசலத்தில் உள்ள விருத்தகிரீசுவரர் கோயில் நடராசர் திருமேனிதான். இதன் காலம் கி.பி. 981 என்று கமில் வி. சுலெபில் கருதுகிறார். இத்திருமேனியில் சடையிலுள்ள கங்கையானது அஞ்சலி முத்திரைக்குப் பதிலாகக் கையை உயர்த்திய நிலையில் காணப்படுகிறது. இத்திருமேனி தஞ்சைத் திருமேனிக்கு முற்பட்டது. அதாவது கி. பி. 970-990க்கு இடைப்பட்டது என்று பாரட் கருதுவதாக கமில். வி. சுலெபில் கூறுகிறார்.[132]

விருத்தாசலம், தஞ்சாவூர் ஆகிய இடங்களில் உள்ள நடராசர் திருமேனிகள் முற்காலச் சோழர் காலத்தவை என்று கமில். வி. சுலெபில் குறிப்பிடுகிறார்.[133] விருத்தாசலம், தஞ்சாவூர், கோனேரிராஜபுரம், திருநாரையூர், திருப்புகலூர் ஆகிய இடங்களில் உள்ள நடராசர் திருமேனிகள் முற்காலச் சோழர் காலத்தைச் சேர்ந்தவற்றில் முதன்மையானவை என்று பாரட் குறிப்பிடுவதாக கமில் வி. சுலெபில் கூறுகிறார்.[134]

## சோழ மண்டலக் கோயில்கள்

கும்பகோணத்தில் உள்ள ஆதிகும்பேசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியில் பிரபையானது நீண்ட வட்ட வடிவில் அமைந்துள்ளது. அத் திருமேனியில் பிரபை தனித்துப் பொருத்தப்பட்டுள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்கு களுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடை யானது கட்டப்பட்டுள்ளது. நடராசர் இரு விரல்களால் உடுக்கை யையும், அகலில் உள்ள தீயையும் பிடித்துள்ளார். முயலகன் இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான். அவனின் பார்வை அப்பாம்பை நோக்கியுள்ளது. அவனின் வலக்கை தலைக்கு மேலே நேரே நீட்டிய நிலையில் உள்ளது. அவன் இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான்; சிவகாமி பிரபை யுடன் உள்ளாள்.

கீழக்கொற்கை பிரம்மபுரீசுவரர் கோயிலில் இருந்த ஆனந்த தாண்டவ நடராசர் திருமேனி பாதுகாப்பிற்காக ஆதிகும்பேசு வரர் கோயிலில் நால்வர் சந்நிதியில் வைக்கப்பட்டுள்ளது. அத் திருமேனியில் பிரபை வட்ட வடிவில் உள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படு கின்றன. பிரபையானது, நிலையாக, தாமரைப்பீடத்தினுள்ளே பொருத்தப்பட்டிருக்கிறது. நடராசரின் சடை விரிந்த நிலையில் உள்ளது; சடையின் வலப்பக்கம் கங்கையும், இடப்பக்கம் பிறை யும் உள்ளன. இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படம் எடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான். அப்பாம்பு முயலகனை நோக்கி யுள்ளது அவன் இடக்காலை வளைத்து ஊன்றியும், வலக்காலை நீட்டியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

கும்பகோணம் நாகேஸ்வரன் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவ நடராசர் திருமேனியில் உள்ள பிரபையில் ஐந்து நாக் களுடன் பதினேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடைகள் ஏழு, ஏழாக இரு பக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் உள்ளன. அவர் சடா மகுடம் தரித்தவராய்த் திகழ்கிறார்; இடக்கை விரல் நுனிகளில் தீயை ஏந்தியுள்ளார். தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட் டுள்ளது. நடராசரின் கால்களுக்கிடையே அரைஞாண் கயிறு சங்கிலியாகத் தொங்குகிறது. முயலகன் இடக்கையில் பாம்பைப்

பிடித்துள்ளான்; வலப்பக்கம் நோக்கிப் படுத்துள்ளான்; தலை சாய்ந்த நிலையில் உள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள். அவள் தாளம் போடும் நிலையில் கையை வைத்துள்ளாள். இத் திருமேனியுடன் புல்லாங்குழல் வாசிக்கும் திருமால் திருமேனி யுள்ளது. பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனிகளும் உடனுள் ளன. இத்திருமேனிகள் ஒரு தேரில் அமைந்தவை போலுள்ளன. அத்தேரினுள் ஐந்து படிகளை உடைய விமானத்தில் நடராசர் திகழ்கிறார் படிகளின் இருபக்கமும் யானைகள் உள்ளன. கல்லாலான அத்தேரினை யானைகள் இழுப்பது போன்று சித்திரிக்கப்பட்டுள்ளது.

கும்பகோணம் காசி விசுவநாதர் கோயிலில் உள்ள திருமேனி யின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்து மூன்று தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. விரித்த சடையின் வலப்பக்கம் கங்கையுள்ளது. சடாமகுடத்தில் பிறையுள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; பார்வை நேராகவுள்ளது; தூக்கிய திருவடி நீட்டித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் தூக்கிய திருவடியை நோக்கியுள்ளான்; இடக்கையில் படமெடுத்த பாம் பைப் பிடித்துள்ளான்; வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றியுள் ளாள். மாணிக்கவாசகர், சம்பந்தர் திருமேனிகள் உடனுள்ளன.

திருநாகேஸ்வரம் நாகநாதசுவாமி கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்துமூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபை யானது வட்ட வடிவமாகவும், இறுதியில் சற்று நேராகவும் உள்ளது. விரித்த சடை ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. சடையின் வலப்பக்கம் கங்கையும், இடப்பக்கம் பிறையும் உள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக் கையின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார்; அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடையில் புலித்தோலா டைச் சுற்றப்பட்டிருக்கிறது; பார்வை நேராக உள்ளது. முயல கன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடி யைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள். திருமுறை கள் உடன் வைக்கப்பட்டுள்ளன.

கும்பகோணம் சோமேசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் இருபத்துமூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்ட வடிவில் உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. நடராசர் இடக்கையின் இரு விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; வலக்கையின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார். முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான். அவனை நோக்கி பாம்பு படுத்துள்ளது; வலக்கையை மடக்கிப் படுத்துள்ளான்; வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

திருபுவனம் கம்பஹரேசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் பதினேழு தீப்பிழம்புகள் உள்ளன. பிரபையானது வட்ட வடிவில் உள்ளது. விரித்த சடை மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப் பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் உள்ளன. நடராசர் சடாமகுடம் தரித்தவராய்த் திகழ்கிறார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள். நடராசருக்கும் சிவகாமிக்கும் இடையே திருமுறைகள் உள்ளன.

திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியில் பிரபையின் மேல் பெரிய அளவில் பிரபை ஒன்று செய்து வைக்கப்பட்டுள்ளது. அந் நடராசர் சடாமகுடம் தரித்தவராய் விளங்குகிறார். சடாமகுடத்தில் பாம்பு, கங்கை, பிறை ஆகியன காணப்படுகின்றன. அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. நடராசர் வலக்கையின் இரு விரல்களால் உடுக்கையையும், இடக்கையின் இரு விரல்களால் தீயையும் பிடித்துள்ளார். முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து விரல்களால் ஊன்றியும் படுத்துள்ளான். முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. அவனின் இடக்கையில் படமெடுத்த பாம்புள்ளது; வலக்கை தலைக்குக் கீழே நீட்டப்பட்டுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

திருநீலக்குடி மனோக்ஞாத சுவாமி கோயிலின் ஆனந்த தாண்டவத் திருமேனி திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரர் கோயிலில் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டுள்ளது. அத்திரு மேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவ மாக உள்ளது. சடைகள் ஐந்தைந்தாக இருபக்கமும் பரவி யுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும்; இடப்பக்கச் சடை யில் பிறையும் உள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கையின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித் துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடையில் புலித்தோலாடை சுற்றப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இரு கால்களை யும் நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; வலக்கையால் பாம்பைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபை யின்றியுள்ளாள்.

திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரர் கோயிலில் நடராசர் திருமேனி சிறிய அளவில் ஒன்றுள்ளது. அத்திருமேனியின் பிரபை யில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப்பிழம்புகள் காணப் படுகின்றன. வட்ட வடிவமான பிரபை இறுதியில் நீண்ட நிலை யில் உள்ளது. சடை மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. சடையில் கங்கையும், பிறையும் உள்ளன. சடாமகுடத்திலும் கங்கை, பிறை, பாம்பு காணப்படுகின்றன. இடையில் புலித் தோலாடைச் சுற்றப்பட்டுள்ளது. நடராசர் இடக்கையின் இரு விரல்களால் அகலில் உள்ள தீயை ஏந்தியுள்ளார்; வலக்கையின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார். முயலகன் இரு கால்களையும் மடித்து நீட்டிக் குப்புறப் படுத்துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி யுள்ளாள்.

திருவிடைமருதூர் கோயிலில் மற்றொரு ஆனந்த தாண் டவத் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தாறு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபை தாமரைப் பீடத்திலே பொருத்தப்பட்டுள்ளது. சடா மகுடத்தில் கங்கையும் பிறையும் உள்ளன. சடைகள் ஐந்தைந் தாக இருபக்கமும் பரவியுள்ளன. விரித்த சடையில் கங்கையும் பிறையும் காணப்படவில்லை. நடராசர் இடக்கையின் இரு

விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; வலக்கையின் இரு விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி சற்று நேரே உள்ளது; இடையில் புலித்தோலாடை உள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. அவன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். அவனின் இடக்கையில் பாம்புஇல்லை; வலக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள். இத்திருமேனிகள் மூன்றும் மகாலிங்கேசுவரர் சந்நிதியின் வலப்பக்கம் உள்ளன.

பாணாபுரம் பாணுபுரீசுவரர் கோயிலின் ஆனந்த தாண்டவத் திருமேனி திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரர் சந்நிதியின் இடப்பக்கம் உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் பத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. விரித்த சடையானது ஏழு ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது; அச்சடையில் கங்கை, பிறை உள்ளன. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. நடராசரின் தூக்கிய திருவடிச் சற்று உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் உள்ள பாம்பு முயலகனை நோக்கியுள்ளது; வலக்கையால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

ஆடுதுறை ஆபத்சகாயேசுரர் கோயிலில் நடராசர் திருமேனி சபை போன்ற அமைப்பின் நடுவே உள்ளது. அச்சபைக்கு ஐந்து படிகள் உள்ளன. அதன் இரு பக்கமும் யானை உள்ளது. சந்நிதியின் வெளியே திருமுறைக்கோயில் இடம்பெற்றுள்ளது. அத்திருமேனியின் பிரபையின் மேல் பெரிய அளவில் பிரபை ஒன்று பொருத்தப்பட்டுள்ளது. அந்நடராசரின் சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது; அச்சடையில் கங்கை, பிறை உள்ளன. உள்ளங்கையால் உடுக்கையை அழுத்திப் பிடித்துள்ளார்; இடது உள்ளங்கையில் தீயை வைத்துள்ளார். அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகனின் வலப்பக்கம் படமெடுத்த பாம்புள்ளது. அவன் காலை மடித்துநீட்டிப் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியின் பிரபையானது வட்ட வடிவில் உள்ளது அப்பிரபையில் மூன்று நாக்குகளுடனும் இருபத்து

மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது மும் மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. நடராசர் சடாமகுடராய்க் காட்சியளிக்கிறார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் விரல்களால் தீப்பிழம்பை ஏந்தி யுள்ளார்; தூக்கிய திருவடி மடித்து நீட்டப்பட்டுள்ளது. நடராச ரின் பார்வை, இடப்பக்கம் உள்ள சிவகாமியை நோக்குவது போலுள்ளது; இடையில் புலித்தோலாடை சுற்றப்பட்டுள்ளது. முயலகனின் வலக்கை தூக்கிய திருவடியைச் சுட்டுகிறது; தூக்கிய திருவடியை நோக்கியவாறு படுத்துள்ளான்; இடக்கையில் பாம் பைப் பிடித்துள்ளான்; இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத் துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

கோனேரிராஜபுரம் உமாமகேஸ்வரர் கோயிலில் உள்ள திருமேனி மிகப் பெரியது; எட்டடி உயரம் கொண்டது. அத் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்துமூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடைகள் எட்டு எட்டாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் காணப்படுகின்றன. சடாமகுடத் தில் பிறையுள்ளது.நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக் காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கி யுள்ளது; வலக்கைச் சுட்டுவிரல் தூக்கிய திருவடியைச் சுட்டு கிறது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.சந்நிதியின் வெளியே வலப்பக்கம் பதஞ் சலியும், இடப்பக்கம் வியாக்கிரபாதரும் சுதைச் சிற்பங்களாகக் காட்சியளிக்கின்றனர்.

அக்கோயிலில் திருவாதிரையன்று புறப்பாட்டிற்குரிய நடரா சர் சிறியது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடைகள் ஏழு ஏழாக இருபக்கமும் பரவியுள்ளன. சடாமகுடத்தில் கங்கையும் பிறையும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் பட மெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் இரு விரல்களால் அகலில் உள்ள தீயைப் பிடித்துள்ளார். முயலகன் இருகால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். அப்பாம்பு அவனை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

அக்கோயிலில் தேர்க்காலைப் பார்த்தல் எனும் மரபுவழி வழிபாட்டிற்குத் தனியாக ஒருசிறிய நடராசர்திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் பதினேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங் கையில் தீயுள்ளது; முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத் துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள் ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையை மடக்கி, குத்துவது போன்ற நிலையில் வைத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

வைகல் ஐம்புகாரணியேசுவரர் கோயிலில் ஆனந்த தாண்டவத் திருமேனி பாதுகாப்பிற்காக கோனேரிராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனி யின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் இருபத்து மூன்று தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது மும்மூன்றாக இரு பக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப் பக்கச் சடையில் பாம்பும் இடம் பெற்றுள்ளன. சடாமகுடத் திலும் பாம்பும் கங்கையும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. இடையில் புலித் தோலாடைச் சுற்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத் துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை யால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபை யின்றி உள்ளாள்.

கஞ்சனூர் அக்நீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திரு மேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. விரித்த சடையானது மும்மூன் றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கை யும், இடப்பக்கச் சடையில் பாம்பும் உள்ளன. நடராசர் இடது உள்ளங்கையில் தீயை ஏந்தியுள்ளார்;அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் இருகால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித் துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கி யுள்ளது; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருச்சக்திமுற்றம் சிவக்கொழுந்தீசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்கு

களுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது,ஏழு ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும் இடப்பக்கச் சடையில் பாம்பும் உள்ளன. சடாமகுடத்தில் பிறையுள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கரத்தின் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன்வலக் காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். அவனின் இடக்கையில் படமெடுத்த பாம்புள்ளது; வலக்கையை மடித்து ஊன்றிப் படுத்துள்ளான்; பார்வை, தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

முழையூர் பரசுநாதர் கோயில் திருமேனி பாதுகாப்பிற்காகத் திருச்சக்தி முற்றம் சிவக்கொழுந்தீசுவரர் கோயிலில் உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்தொருதீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடைகள் ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையுள்ளது. சடாமகுடத்தில் பிறையுள்ளது. நடராசரின் இடதுஉள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கை தூக்கிய திருவடிக்கு மேலே நீட்டப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

திருச்சக்தி முற்றம் சிவக்கொழுந்தீசுவரர் கோயிலில் சிறிய நடராசர் திருமேனி உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் நான்கு நாக்குகளுடன் இருபத்துமூன்று தீப்பிழம்புகள் உள்ளன. விரித்த சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. சடையில் கங்கை மட்டும் உள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வேழ முத்திரைக்கையும் அதற்கிணையாக உள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப்

பிடித்துள்ளான்; வலக்கையின் ஆள்காட்டி விரல் தூக்கிய திரு வடியைச் சுட்டுகிறது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

பட்டீஸ்வரம் தேனுபுரீசுவரர் கோயிலில் உள்ள பெரிய நடராசர்திருமேனியின் பிரபையில்ஐந்துநாக்குகளுடன் முப்பத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாக உள்ளது. விரித்தசடை மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச்சடையில் கங்கையும்,இடப்பக்கச்சடையில் பாம்பும் உள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் இரு விரல்களால் அகலில் உள்ள தீயைப் பிடித்துள்ளார். முயலகன் இருகால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்கை தூக்கிய திருவடியைச் சுட்டுகின்றது. நடராசரின் பார்வை சிவகாமியை நோக்குவது போலுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

அக்கோயிலிலே சிறிய நடராசர் திருமேனி உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்தாறு தீப்பிழம்புகள் உள்ளன; இடப்பக்கத்தில் உள்ள ஒரு தீப்பிழம்பு உடைந்துள்ளது. பிரபையானது இரு அடுக்குகளுடன் வட்டவடிவமாகவுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும் இடப்பக்கம் ஊமத்தம்பூவும் உள்ளன. சடாமகுடத்தில் கங்கையும், பாம்பும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையை மடித்து ஊன்றியுள்ளான். முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. நடராசரின் பார்வை சற்று உயர்ந்த நிலையில் உள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

நல்லூர் கலியாணசுந்தரேசுவரர் கோயிலில் ஆனந்த தாண்டவத் திருமேனியும் உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்திரண்டு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. அப்பிரபையின் நடுவே உள்ள தீப்பிழம்பு உடைந்துள்ளது. சடைகள் ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் பிறையும் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் பாம்பு உள்ளது. நடராசர் இரு விரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார்; இடக்

கையில் அகலில் உள்ள தீயை இரு விரல்களில் ஏந்தியுள்ளார்; வேழ முத்திரைக்கை உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. நடராசர் பீடத்தின் நடுவே ஓரடியார் வணங்கிய நிலையில் நின்று கொண்டுள்ளார்; சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

திருவலஞ்சுழி சடைமுடிநாதர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. அப்பிரபையில் சில தீப்பிழம்புகள் உடைந்துள்ளன. விரித்த சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. இடப்பக்கச் சடையில் கங்கையும் வலப்பக்கச் சடையில் பாம்பும் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் பாம்புள்ளது. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்கையால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; இடக்கையைத் தரையில் ஊன்றியுள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

இன்னம்பூர் எழுத்தறிநாதர் திருக்கோயிலின் நடராசர் திருமேனி சுவாமிமலை சுவாமிநாதஸ்வாமி திருக்கோயிலில் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனியில் பிரபை இல்லை. சடைகள் ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் பிறையும் காணப்படுகின்றன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; வலக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; அவனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

தியாகசமுத்திரம் மகாலிங்கசுவாமி கோயில் நடராசர் திருமேனி சுவாமிமலை சுவாமிநாதஸ்வாமி திருக்கோயிலில் பாதுகாப்பிற்காக உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் பதினேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன;

இடப்பக்கத்தில் உள்ள தீப்பிழம்புகளில் ஒன்று உடைந்துள்ளது. சடைகள் ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் காணப் படுகின்றன, நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; முயலகன் இருகால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்; தூக்கிய திருவடியை நோக்குகிறான்; இடக்கையில் பாம்பைப் பிடித் துள்ளான். நடராசரின் பார்வை சிவகாமியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

கீழைப்பழையாறை சோமநாதசுவாமி கோயிலின் நடராசர் திருமேனியும் சுவாமிமலை சுவாமிநாதஸ்வாமி கோயிலில் பாது காப்பிற்காக வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் பத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படு கின்றன; மற்ற தீப்பிழம்புகள் உடைந்துள்ளன. பிரபையானது வட்டவடிவமாய் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. சடையில் பூக்கள் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் கங்கையுள்ளது. நடராசரின் இடது உள்ளங் கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி கீழிறங்கிய நிலையில் உள்ளது. முயலகன் தூக்கிய திருவடியை நோக்கிப் படுத்துள்ளான்; வலக் காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருப்புறம்பயம் சாட்சிநாதர் சுவாமி கோயிலின் நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் உள்ளது. நடராசர் சடாமகுடம் தரித்தவராய்த் திகழ்கிறார். சடைகள் ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளன. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் காணப் படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; வலக்கையின் இருவிரல்களால் உடுக்கையைப் பிடித்துள்ளார். முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; வலக்கையால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையால் தூக்கிய

திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன்உள்ளாள்.

தாராசுரம் ஐராவதேசுரர் கோயில் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் உள்ளது. சடையானது இரண்டிரண்டாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச்சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் பிறையும் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் வெள்ளெருக்கு, ஊமத்தம்பூக்கள் உள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; வலது உள்ளங்கையில் உடுக்கையும், இடது உள்ளங்கையில் தீயும் உள்ளன; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் தூக்கிய திருவடியை நோக்கிப் படுத்துள்ளான்; ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருச்சி தாயுமானவர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் வலப்பக்கம் பத்தும், இடப்பக்கம் எட்டும் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; மற்றவை உடைந்துள்ளன. பிரபையின் நடுவிலும் தீப்பிழம்பு காணப்படவில்லை. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் உள்ளன. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் தலையைத் தூக்கிப் படுத்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை விரல்களால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள். இருவருக்கும் இடையில் திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன.

திருவானைக்கா ஐம்புகேஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் பாம்பு, ஊமத்தம்பூ ஆகியன இடம்பெற்றுள்ளன. சடையானது பின்புறம் விரிக்கப்பட்டுள்ளது. நடராசரின் அபயக்கரத்தில் சுற்றிக் கொண்டுள்ள பாம்பு உடைந்துள்ளது; இடக்கை விரல்களால்

தீயை ஏந்தியுள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது. முயலகன் இருகால்களையும் மடக்கி நீட்டிப் படுத் துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபை யின்றி உள்ளாள். இந்நடராசர் எந்த விழாவிற்கும் புறப்படுவ தில்லை. இந்நடராசர் சந்நிதி சுவாமி சந்நிதியின் நுழைவாயிலின் வலப்பக்கம் உள்ளது.

அக்கோயிலில் அம்பாள் சந்நிதிக்குச் செல்லும் வழியில் வலப்பக்கம் நடராசர் சந்நிதியுள்ளது. அச்சந்நிதியிலுள்ள பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதி யில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் காணப்படுகின்றன. சடையானது பின்புறம் விரிக்கப்பட்டுள்ளது. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடக்கையின் இருவிரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கி யும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக் கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபை யின்றியுள்ளாள்.

திருவெறும்பூர் எறும்பீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்து நான்கு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; ஒரு தீப்பிழம்பு உடைந்துள்ளது. பிரபையானது வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப் பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் காணப்படுகின்றன. நடராசர் இடக்கை விரல்களால் தீயை ஏந்தி யுள்ளார்; வலது உள்ளங்கையில் உடுக்கையை அழுத்திப்பிடித்துள் ளார்; வலக்கால் சிறிது வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக்காலை மடித்து நீட்டியும், வலக்காலை மடித்துத் தூக்கியும் படுத்துள் ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையை மடித்து தரையில் ஊன்றியுள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனி யுள்ளது; பின்புறம் திருமுறைகள் உள்ளன.

கடம்பர்கோயில் கடம்பவனேஸ்வரார் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும் இறுதியில் நீண்டும்உள்ளது. சடாமகுடத்தில் கங்கையும் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலது உள்ளங்கையில் உடுக்கையை அழுத்திப் பிடித்துள்ளார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. நடராசரின் தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; இரு கால்களிலும் தண்டை அணியப்பட்டுள்ளது; இடையில் புலித்தோலாடைச் சுற்றப்பட்டுள்ளது. முயலகன் மிகவும் சிறிதாக உள்ளான்; வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இரு கைகளாலும் பாம்பைப் பிடித்துள்ளான். பாம்பானது தூக்கிய திருவடியை நோக்கிப் படுத்துள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியின் இடப்பக்கம் திண்ணையில் சிறிய நடராசர் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் பத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

அக்கோயிலில் வெளிப்பிரகாரத்தில் உள்ள நடராசர் சந்நிதியில் ஒரு திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது ஒன்பது ஒன்பதாக இரு பக்கமும் பரவியுள்ளது. சடாமகுடத்தில் பிறையும்,பாம்பும் இடம்பெற்றுள்ளன.நடராசர் சாய்ந்த பார்வையுடன் உள்ளார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; உடம்பில் பாம்பு சுற்றிக்கொண்டுள்

ளது; வலக்கையால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; ஒரு புறம் சாய்ந்து படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனியுள்ளது.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பூக்களும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள் ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள் காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

கீழ்வேளூர் அட்சயலிங்க சுவாமி கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்து நான்கு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருபக்க மும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், பாம்பும் இடப்பக்கச் சடையில் பிறையும், பூக்களும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயல கன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித் துள்ளான்; வலக்கை விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகி றான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

திருவாரூர் அரநெறியப்பர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில், இரண்டு அடுக்குகளுடன் அமைந்துள்ளது. பிரபையின் வலப்பக் கத்தில் ஒரு தீப்பிழம்பு உடைந்துள்ளது. சடையானது ஐந்தைந் தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கை இடம்பெற்றுள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது.

முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள்.

மாயவரம் மாயூரநாதசுவாமி கோயிலில் இரண்டு நடராசர் திருமேனிகள் உள்ளன. அவற்றுள் மூலவராகக் கருதப்படும் நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஐந்தைந்தாக இரு பக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும் இடப் பக்கச்சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; வலக்கையின் இரு விரல்களில் உடுக்கையைப் பிடித் துள்ளார்; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபை யின்றி உள்ளாள்.

அக்கோயிலில் உள்ள மற்றொரு சிறிய நடராசர் திருமேனி தான் புறப்பாட்டிற்குரியது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் வலப்பக்கம் பதினெட்டும், இடப்பக்கம் பத்தொன் பதும் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது மும்மூன் றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கை யும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம் பெற்றுள்ளன. சடா மகுடத்தில் பாம்பு, சந்திரன், சூரியன் ஆகியன காணப்படு கின்றன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையைத் தரையில் ஊன்றி யுள்ளான்; ஒரு புறம் சாய்ந்து படுத்துள்ளான். சிவகாமி பிரபை யின்றியுள்ளாள்.

ஐயாறப்பர் கோயிலின் நடராசர் திருமேனியும் பாதுகாப்பிற் காக மாயவரம் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனி யின் பிரபையில் நாற்பத்து நான்கு தீப்பிழம்புகள் காணப்படு கின்றன. அப்பிரபையில் வலப்பக்கம் இரண்டும், இடப்பக்கம் ஒன்றும் தீப்பிழம்பு உடைந்துள்ளது. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. அத்திருமேனியில் இடப்பக்கச் சடை உடைந்துள்ளது. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் இரு கால் களையும் மடக்கி நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம் பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை கீழ் நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலில் நடராசர் திருமேனி சபையில் உள்ளது. பிரபையின் மேல் வெள்ளிப் பிரபைப் பொருத்தப்பட்டுள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்கு களைக் கொண்ட தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; நடுவிலுள்ள தீப்பிழம்பு உடைந்துள்ளது. சடைகளில் கங்கை, பிறை காணப் படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான். சிவகாமி வெள்ளிப் பிரபை யுடன் உள்ளாள்; உடன் இரு தோழியர் உள்ளனர்.

சீர்காழி தோணிபுரீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திரு மேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது இரண்டிரண்டாக இரு பக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும் இடப் பக்கச் சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. சடாமகுடத்தில் சூரியன், பாம்பு ஆகியன காணப்படுகின்றன. நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது; வலது உள்ளங்கையில் உடுக்கையை அழுத்திப் பிடித்துள்ளார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட் டுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்;

பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. நடராசரின் வலப் பக்கம் ஒரு தேவகணம் குடமுழா வாசிக்கிறது; இடப்பக்கம் ஒரு தேவகணம் தாளம் போடுகிறது. சிவகாமி பிரபையுடன் உள் ளாள்; தோழியர் இருவர் உடனுள்ளனர்.

திருமுல்லைவாசல் முல்லைவனநாதர் கோயிலின் நடராசர் திருமேனி சீர்காழி கோயிலில் பாதுகாப்பிற்காக வைக்கப்பட் டுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இரு பக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப் பக்கச் சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டு கிறான். பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள் ளாள்.

சிதம்பரம் நடராசர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனி யின் பிரபையின் மேல் பொன்னாலான பிரபை பொருத்தப்பட் டுள்ளது. உள் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடைகள் ஐந்தைந்தாக இரு பக்கமும் பரவியுள்ளன; கங்கை, பிறை காணப்படு கின்றன. நடராசர் வலக்கையில் உடுக்கையை அடிப்பது போல் பிடித்துள்ளார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இரண்டு கால் களையும் நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித் துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள்; உடன் இரு தோழியர் உள்ளனர்.

திருவேட்களம் பாசுபதேசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியில் விரித்த சடை இல்லை; கிரீடம்தான் உள்ளது. பிரபையின் நடுவே ஒரு கோடு வரைந்தது போலுள்ளது. அப் பிரபையில் மூன்று நாக்குகளுடன் தீப்பிழம்புகள் காணப்படு கின்றன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலக

னின் தலை தூக்கிய நிலையில் உள்ளது; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருக்கழிப்பாலை பால்வண்ணநாதர் கோயிலில் ஆனந்த தாண்டவத் திருமேனி திண்ணையில் வைக்கப்பட்டுள்ளது. அத் திருமேனியின் பிரபையில் ஏழு நாக்குகளுடன் இருபத்தொரு தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. சடை இல்லை; கிரீடம்தான் உள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

சிவபுரி உச்சிநாதேசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது இரண்டு வரிசைகளில் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இரு பக்கமும் பரவியுள்ளது. சடையில் கங்கை, பாம்பு காணப்படுகின்றன. நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; வலக்கையில் உடுக்கையைப் பிடித்துள்ளார். அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; அபயக்கரமானது வேழ முத்திரைக்கையின் மேல் வைக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள்.

**பாண்டி மண்டலக் கோயில்கள்**

இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் இராஜ சபையில் ஒரு நடராசர் திருமேனியுள்ளது. அந்நடராசர் சபாபதி என்றழைக்கப்படுகிறார். அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவமாகவுள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கை

யும் இடப்பக்கச் சடையில் பிறையுமுள்ளன. சடாமகுடத்தில் கங்கையும், பாம்புமுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. வலக்கையில் உடுக்கையைக் குறுக்காகப் பிடித்துள்ளார். வேழமுத்திரைக்கை கீழிறங்கி, உள்நோக்கிய வாறு உள்ளது. நடராசரின் தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது, வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயல கன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள். பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் வெளியே வணங்கிய நிலையில் உள்ளன. காரைக்காலம்மையார் சிற்பமும் வலப்பக்கம் உள்ளது.

அக்கோயிலில் நடனசபையில் ஒரு நடராசர் திருமேனி உள்ளது. அந்நடராசர் அம்பலவாணர் என்றழைக்கப்படுகிறார். அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவ மாகவுள்ளது. நடராசருக்குச் சடை இல்லை; கிரீடம் தரித்த வராய்த் திகழ்கிறார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; வேழ முத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் நெடுக்காகப் படுத்துள்ளான். இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். வலக் காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

அக்கோயிலின் தேவசபையில் ஒரு நடராசர் திருமேனி யுள்ளது. அந்நடராசர் சிதம்பரேசுவரர் என்றழைக்கப்படுகிறார். அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; அவற்றுள் ஒன்று உடைந்துள்ளது. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது ஆறு என்ற அளவில் இருபக்க மும் பரவியுள்ளது; வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம் பெற்றுள்ளன. சடாமகுடத்தில் சந்திரன், பாம்பு ஆகியன காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்காலை மடித்து ஊன்றியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலில் உள்ள நடராசர் திருமேனியில் வட்டவடிவமான பிரபையுள்ளது. சடையானது பின்புறம் தொங்கிய நிலையில் உள்ளது; வலப் பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கை விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; வேழ முத்திரைக்கை உயர்த்திக் தூக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி யும் உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத் துள்ளான்; பார்வை, தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்கையால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள். வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனி யுள்ளது.

அத்திருமேனியின் வலப்பக்கம் சிறிய நடராசர் திருமேனி யுள்ளது. இத்திருமேனியின் பிரபையில் நாற்பத்துமூன்று தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவாக வும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் காணப்படுகின்றன. சடாமகுடத் தில் பாம்பு, சந்திரன், சூரியன் ஆகியன இடம் பெற்றுள்ளன. நடராசரின் அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண் டுள்ளது; இடக்கை விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; வலக்கை விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; அத்திருவடியில் முட்டிக்குக் கீழே பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக் காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

அக்கோயிலிலிருந்து மாரியூர் செல்லும் சிறிய நடராசர் திருமேனி உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் பதினைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவ மாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது; சடை இல்லை. நடராச ரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலது உள்ளங்கையில் உடுக்கையை அழுத்திப் பிடித்துள்ளார்; அபயக்கரத்தில் பட மெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித்

தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்கையை ஊன்றிப் படுத்துள்ளான்; இடக்கையில் உள்ள பாம்பு உடைந்துள்ளது; பார்வை தூக்கிய திருவடியை நோக்கி உள்ளது; இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் இரத்தின சபையில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் வலக்கையில் உடுக்கை இல்லை; உடுக்கையைப் பிடித்திருப்பதுபோல் விரலமைப்பு உள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள்.

அக்கோயிலில் கனகசபையில் மூன்று நடராசர் திருமேனிகள் உள்ளன. நடுவேயுள்ள திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவுள்ளது. சடையானது, நந்நான்காக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் பிறையும், இடப்பக்கச் சடையில் கங்கையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

அச்சபையில் வலப்பக்கம் உள்ள திருமேனி கால்மாறியாடிய நிலையில் உள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்துமூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது; வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்

பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவைப் பிடித்துள்ளாள்.

அச்சபையின் இடப்பக்கம் உள்ள நடராசர் திருமேனியில் பிரபை கிடையாது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் பிறையும், இடப்பக்கச் சடையில் கங்கையும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் இருகைகளால் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் நாற்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் யாளி போன்ற அமைப்பிலும் காணப்படுகிறது. விரித்த சடை மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. சடாமகுடத்தில் சூரியன் உள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; கால்களில் தண்டை உள்ளது. அவரின் உடலமைப்பு நன்கு ஆடுவது போல் அமைந்துள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்க வாசகர் திருமேனியுள்ளது. இந்நடராசர் சந்நிதியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் அமைந்துள்ளன.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தொரு

தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது நந்நான்காக இருபக்கமும் பரவியுள்ளது; வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் நேராக ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக் கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

திருப்பூவணம் எனும் திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலில் நடராசர் கற்சிற்பத்தின் முன் உற்சவத் திருமேனி வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்கு களுடன் இருபத்தொன்பது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. விரித்த சடை இல்லை; சடாமகுடத்தில் சந்திரன் உள்ளது. நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக்காலை மடித்து ஊன்றியும், வலக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபை யின்றி உள்ளாள்.

திருச்சுழியிலுள்ள திருமேனிநாதர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனி மிகவும் சிறியது. அத்திருமேனியின் பிரபை யில் ஐந்து நாக்குகளுடன் வலப்பக்கம் பதினொரு தீப்பிழம்பு களும், இடப்பக்கம் ஆறு தீப்பிழம்புகளும் காணப்படுகின்றன; மற்றவை உடைந்துள்ளன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்க மும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப் பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. நடராசரின் வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்கையைத்தலைக்கு வைத்துப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; இரு கால்களையும் மடக்கி நீட்டிப் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

திருவாப்பனூர் திருவாப்புடையார் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வலக்கை விரல் நுனியில் உடுக்கையுள்ளது. இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கையைத் தலைக்குக் கீழே வைத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

தென்காசி காசிவிசுவநாதர் கோயிலில் இரண்டு நடராசர் திருமேனிகள் உள்ளன. அத்திருமேனியில் ஒன்று மூலவராகக் கருதப்படுகிறது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் வலப்பக்கம் பத்தும், இடப்பக்கம் ஒன்பதும் நடுவில் ஒன்றுமாக இருபது தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; ஒரு தீப்பிழம்பு உடைந்துள்ளது. பிரபையானது வட்ட வடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடாமகுடத்தில் வலப்பக்கம் பாம்பும் இடப்பக்கம் பிறையும் இடம்பெற்றுள்ளன. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் விரல் நுனியில் தீயுள்ளது; வலக்கையில் உடுக்கையை அடிப்பது போல் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்; வலக்கை விரல்களை மடக்கி, தலைக்குக் கீழே வைத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்; இத்திருமேனியின் வலப்பக்கம் காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகள் இடம்பெற்றுள்ளன.

அக்கோயிலில் அத்திருமேனியின் இடப்பக்கம் திண்ணையின் மேல் ஒரு நடராசர் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடாமகுடத்தில் பிறையுள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில்

கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப் பட்டுள்ளது. முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள் ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

குற்றாலம் குற்றாலநாதர் கோயிலில் மூன்று நடராசர் திரு மேனிகள் உள்ளன. அத்திருமேனிகளில் மூலவராகக் கருதப்படும் திருமேனி அருவியில் கிடைத்த ஒன்றாகும். அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதி யில் நீண்டும் உள்ளது. சடாமகுடத்தில் பிறையுள்ளது. சடை யானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் இடது கை விரல் நுனியில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டு கிறான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

அக்கோயிலில் மேற்கண்ட திருமேனியின் வலப்பக்கம் சித்திர சபை நடராசர் திருமேனியுள்ளது. அச்சபையில் பாதுகாப்பு இன் மையால், அந்நடராசர் திருமேனி, இக்கோயிலில் உள்ளது. அத் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடாமகுடத்தில் பிறையும், பாம்பும் இடம்பெற்றுள்ளன. சடையானது பின்புறம் தொங்கிய நிலையில் உள்ளது. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள் ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண் டுள்ளது; வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக் காலை மடித்து நீட்டியும், வலக்காலை மடித்துத் தூக்கியும் படுத்துள்ளான்; பார்வை கீழ் நோக்கியுள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

அக்கோயிலில் சித்திரசபை நடராசர் திருமேனியின் வலப் பக்கம் ஒரு நடராசர் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவிலுள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம் பெற்றுள்ளன. சடாமகுடத்திலும் பிறையுள்ளது. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகள் உள்ளன.

சங்கரன்கோயில் சங்கரலிங்கப் பெருமான் சந்நிதியின் இடப் பக்கம் நடராசர் திருமேனி உள்ளது. அத்திருமேனியின் பிரபை யில் ஐந்து நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப் படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவி யுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும் இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; முயலகன் இரு கால்களையும் நீட்டிப் படுத்துள்ளான்; இடக் கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திரு வடியை நோக்கியுள்ளது; வலக்கை விரலால் தூக்கிய திருவடி யைச் சுட்டுகிறான்; சிவகாமி பிரபையின்றி உள்ளாள். காரைக் காலம்மையார், பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனிகள் நடராசரின் முன்னுள்ளன; வலப்பக்கம் மாணிக்கவாசகர் திரு மேனியுள்ளது.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் சுவாமி சந்நிதியின் இடப்பக்கம் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் அமைந்துள்ளது, சடை இல்லை; நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி

உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப் பட்டுள்ளது; முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக் காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம் பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திரு வடியை சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கி யுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள்.

அக்கோயிலில் சௌந்தர்ய சபையில் உள்ள நடராசர் திரு மேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப் பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாக வும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடை இல்லை. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; பார்வை சாய்ந்த நிலையில் உள்ளது. முயல கன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

அக்கோயிலில் சுவாமி சந்நிதியின் வெளிப்பிரகாரத்தில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத் தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது பின் புறம் விரிந்த நிலையில் உள்ளது. நடராசருக்கு அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங் கையில் தீயுள்ளது. வலக்கை விரல் நுனியில் உடுக்கையை ஏந்தி யுள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து ஊன்றியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள் ளான்; சாய்ந்த பார்வையுடன் உள்ளான்; வலக்கையை ஊன்றி யுள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்; கையில் ஊமத்தம் பூவை வைத்துள்ளாள். நடராசரின் வலப்பக்கம் காரைக்காலம் மையார் திருமேனியுள்ளது. நடராசருக்கும் சிவகாமிக்கும் இடையே திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன.

மானூர் அம்பலவாணர் கோயிலின் நடராசர் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதி யில் நீண்டும் உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச்

சடையில் பிறையும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையுடன் உள்ளாள்; கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனியுள்ளது.

விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவுள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் பிறையும், இடப்பக்கச் சடையில் கங்கையும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது சுட்டு விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள். நடராசரின் வலப் பக்கம் தாளம் போடும் நிலையில் காரைக்காலம்மையார் திருமேனியும், மாணிக்கவாசகர் திருமேனியும் இடம்பெற்றுள்ளன.

பாபநாசம் பாபவிநாசர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியில் பிரபை கிடையாது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. அவற்றில் கங்கை, பிறை இடம் பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றிஉள்ளாள். நடராசரின் வலப்பக்கம் அமர்ந்த நிலையில்

தாளம் போடும் காரைக்காலம்மையாரின் திருமேனியும், மாணிக்கவாசகர் திருமேனியும் இடம்பெற்றுள்ளன.

கட்டாரிமங்கலம் அழகிய கூத்தர் கோயிலில் இருந்த நடராசர் திருமேனி களவாடப்பட்டுவிட்டது. பிரபை மட்டும் தான் திரும்பக் கிடைத்தது. எனவே, அப்பிரபைக்கேற்ப ஒரு நடராசரைச் செய்து வைத்துள்ளனர். அப்பிரபையில் மூன்று நாக்குகளுடன் முப்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடை கிடையாது; கிரீடம்தான் உள்ளது. நடராசரின் அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. வலக்கை விரல் நுனியில் உடுக்கையைப் பிடித்துள்ளார்; முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடக்கியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; வலக்கையில் ஊத்தம்பூவை வைத்துள் ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனி யுள்ளது.

ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் கோயிலில் நடராசர் திரு மேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்கு களுடன் நாற்பத்துமூன்று தீப்பிழம்புகள் காணப்படு கின்றன. அப்பிரபையானது வட்டவடிவிலும் இறு தியில் நீண்டும் உள்ளது. விரித்த சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. அவற்றில் கங்கை, பிறை இடம்பெற் றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வேழ முத்திரைக்கையின் மேல் அபயக்கரம் வைக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. முயலகன் வலக் காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்; வலக்கையில் ஊமத்தம்பூவை வைத்துள்ளாள்.

**கொங்குமண்டலக் கோயில்கள்**

மேலைச்சிதம்பரம் என வழங்கும் பேரூர் பட்டீசுவரப் பெரு மான் கோயிலில் உள்ள திருமேனியின் பிரபையில் ஏழு நாக்கு களுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையின் மேல் வெள்ளியாலான பிரபை பொருத்தப்பட் டுள்ளது. சடையானது ஒன்பது ஒன்பதாக இருபக்கமும் பரவி யுள்ளது. சடாமகுடத்தின் நடுவில் கங்கையும், இடப்பக்கம் பிறை யும் உள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில்

தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கையும், தூக்கிய திருவடியும் உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளன. நடராசரின் கால்களில் தண்டையும் சதங்கையும் காணப்படுகின்றன; ஊன்றிய திருவடியின் பின்புறம் படமெடுத்த பாம்புள்ளது. முயலகன் தூக்கிய திருவடியை நோக்கிப் படுத்துள்ளான்; வலக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; இடக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள். கோமுனியும், பட்டிமுனியும் இருபுறமும் உள்ளனர். நடராசரின் வலப்பக்கம் திருமுறைகள் உள்ளன.

திருச்செங்கோடு அர்த்தநாரீசுவரர் கோயிலில் உள்ள திருமேனியில் நீண்ட வட்டவடிவமான பிரபையுள்ளது. அப்பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் உள்ளன. சடாமகுடத்தில் பாம்பு, கங்கை, பிறை ஆகியன காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; ஊன்றிய திருவடியில் தண்டையுள்ளது; இடையில் புலித்தோலாடைச் சுற்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் படமெடுத்த பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருச்செங்கோடு மலையடிவாரத்தில் உள்ள கைலாசநாதர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும், பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகனின் தலை தூக்கிய நிலையில் உள்ளது. அவன் வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; வலக்கையின் ஆள்காட்டி விரலால் தூக்கிய

திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள். காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகள் உடனுள்ளன.

கொடுமுடி மகுடேசுவரர் கோயிலில் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. விரித்த சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் ஊமத்தம்பூவும் உள்ளன. சடாமகுடத்தில் பாம்பு, கங்கை, பிறை ஆகியன இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; இரு கால்களிலும் தண்டையுள்ளது. முயலகன் இரு கால்களையும் மடித்து ஊன்றிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள். நடராசரின் பிரபையில் ஒருபுறம் பதஞ்சலியும், மறுபுறம் வியாக்கிரபாதரும் இடம்பெற்றுள்ளனர்.

அவிநாசியிலுள்ள அவிநாசிலிங்கேசுவரர் கோயிலின் நடராசர் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் ஐம்பத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வளைந்தும், இறுதியில் நீண்டும் உள்ளது. பிரபையின் இறுதியில் கிளியுள்ளது. சடாமகுடத்தில் கங்கையுள்ளது. விரித்த சடையில் கங்கையும், பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. நடராசர் நிமிர்ந்த தோற்றத்துடன் விளங்குகிறார். முயலகன் இரு கால்களையும் மடித்து நீட்டிப் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; ஒருபுறம் சாய்ந்து படுத்துள்ளான்; வலக்கையைத் தலைக்குக்கீழே வைத்துள்ளான். சிவகாமி பிரபையுடன் உள்ளாள்.

திருமுருகன்பூண்டி திருமுருகனாத சுவாமி கோயிலின் நடராசர் திருமேனி அவிநாசி கோயிலில் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் பதினைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வளைந்தும் இறுதியில் நீண்டும் உள்ளது. பிரபையின் இருபுறமும் முறையே பதஞ்சலி, வியாக்கிரபாதர் நின்ற நிலையில் உள்ளனர். அவர்களுடைய கையுடன் பிரபையிலுள்ள தீப்பிழம்பு இணைந்துள்ளது. சடையானது

வளைந்து தொங்குகிறது. மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச்சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும், பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசர் சடாமகுடராய்த் திகழ்கிறார்; இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கையில் உடுக்கையை அழுத்திப் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; காலில் சதங்கையுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; தலை தூக்கிய நிலையில் உள்ளது; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பாம்பானது தூக்கிய திருவடியை நோக்குகிறது. தாமரைப்பீடத்தில் நடராசர் திருமேனி பொருத்தப்பட்டுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

## நடுநாட்டுக் கோயில்கள்

நெய்வேலி நகரம் சிவபுரம் பகுதியில் 1987-ஆம் ஆண்டு நடராசர் கோயில் கட்டப்பட்டது. இக்கோயிலில் உள்ள நடராசர் திருமேனிதான் உலகிலேயே மிக உயரமானது. இத்திருமேனி பத்தரை அடி உயரமும், 2,500 கிலோ எடையும் கொண்டது. இந்நடராசரை, ‘அழகிய திருச்சிற்றம்பலமுடையார்’ என்றும், அம்மையை, ‘ஓசைகொடுத்த நாயகி’ என்றும் அழைக்கின்றனர். இத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் ஐம்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஒன்பது, ஒன்பதாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசர் இடக்கையின் இரு விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; வலக்கையில் உடுக்கையை அடிப்பது போல் பிடித்துள்ளார். அபயக்கரத்தில் பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. தாமரைப் பீடத்தில் இந்நடராசர் திருமேனி அமைக்கப்பட்டுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலின் நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்டமாக அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும்

பரவியுள்ளது. சடையில் கங்கை, பிறை இடம் பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படம் எடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் இரு விரல்களால் தீயை ஏந்தியுள்ளார்; முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

ஸ்ரீமுஷ்ணம் என அழைக்கப்படும் திருமுட்டம் நித்தீஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் நாற்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன; இரண்டு தீப்பிழம்புகள் உடைந்துள்ளன. நடராசர் சடாமகுடராகத் திகழ்கிறார்; இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; முயலகனின் பார்வை சாய்ந்த நிலையில் உள்ளது; இரு கால்களையும் மடித்து நீட்டிப்படுத்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

அக்கோயிலில் இத்திருமேனியுடன் சிறிய நடராசர் திருமேனியுள்ளது. அத்திருமேனியின் பிரபையில் மூன்று நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. சடாமகுடராய்த் திகழ்கிறார். நடராசர் இடக்கையின் இரு விரல்களில் தீயை ஏந்தியுள்ளார்; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி இல்லை.

### தொண்டை மண்டலக் கோயில்கள்

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தாறு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவிலும், இறுதியில் நீண்டும் உள்ளது. பிரபையானது இரண்டு அடுக்காக அமைந்துள்ளது. நடராசர் சடாமகுடராய்த் திகழ்கிறார். இடது உள்ளங்கையில் தீயுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை கீழ்நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். வலப்பக்கம் விநாயகர் திருமேனியுள்ளது.

காஞ்சிபுரம் கச்சபேசுவரர் கோயிலின் நடராசர் திருமேனியில் ஐந்து நாக்குகளுடன் முப்பத்தொரு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்டவடிவில் அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் உள்பிரபையின்மேல் வெளியே ஒரு பிரபையுள்ளது.

மணிமங்கலம் தர்மேஸ்வரர் ஆலயத்தில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் நாற்பத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கையின் மேல் அபயக்கரம் வைக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப் பட்டுள்ளது; வலக்கால் வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். இத்திருமேனியின் கீழிருந்த பீடம் கள்வர்களால் களவாடப்பட்டுவிட்டது; இப்பொழுது பீடமின்றி இத்திருமேனியுள்ளது.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தாறு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவில் உள்ளது. இரு அடுக்குகளாகப் பிரபை அமைந்துள்ளது. சடையானது ஏழு, ஏழாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; வேழமுத்திரைக்கையின்மேல் அபயக்கரம்

வைக்கப்பட்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான் பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

சென்னை ஏகாம்பரேசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தைந்து தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கக் சடையில் கங்கையும் இடப்பக்கச் சடையில் பிறையும் இடம் பெற்றுள்ளன. நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும் இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசர் திருமேனியின் வலப்பக்கம் பதஞ்சலியும், இடப்பக்கம் வியாக்கிரபாதரும் வீற்றிருக்கின்றனர்.

திருவான்மியூர் மருந்தீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. விரித்த சடையானது கீழிறங்கியுள்ளது; மும்மூன்றாக இருபக்கமும் பரவியுள்ளது; வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. மகுடம் தரித்தவராய் உள்ளார்; இடக்கை விரல் நுனியில் தீயுள்ளது. அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. இடையில் புலித்தோலாடைச் சுற்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான். சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனியுள்ளது.

திருவொற்றியூர் தியாகராஜசுவாமி கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் வலப் பக்கம் பத்தும், இடப்பக்கம் ஒன்பதும் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவமாகவும், இறுதியில் நீண்டும்

**தேவக்கோட்டச் சிற்பம்**

*திருச்சக்தி முற்றம்—சிவக்கொழுந்தீசுவரர் கோயில்*



**பிரகாரச் சிற்பங்கள்**

*கஞ்சனூர்—அக்நீசுவரர் கோயில்*



சங்கரன் கோயில்—சங்கரலிங்கப் பெருமான் கோயில்



பாபநாசம்—பாபவிநாசர் கோயில்



**தூண் சிற்பம்**

இராமேஸ்வரம்—இராமநாதசுவாமி கோயில்



**கோபுரச் சிற்பம்**

மதுரை—மீனாட்சியம்மன் கோயில்



**ஓவியம்**

குற்றாலம்—சித்திர சபை நடராசர்



**திருமேனிகள்**

சிவபுரி—உச்சி நாதேசுவரர் கோயில்



திருநெல்வேலி—நெல்லையப்பர் கோயில்



தென்காசி— காசிவிசுவநாதர் கோயில்



கட்டாரி மங்கலம்—அழகிய கூத்தர் கோயில்



காஞ்சிபுரம்—ஏகாம்பரநாதர் கோயில்



காஞ்சிபுரம்—கச்சபேசுவரர் கோயில்



மணிமங்கலம்—தர்மேஸ்வரர் கோயில்



சிந்தாதிரிப்பேட்டை—ஆதிபுரீசுவரர் கோயில்



திருவாலங்காடு—வடாரண்யேசுவரர் கோயில்



உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. இடது உள்ளங்கையில் தீயுள்ளது; அபயக் கரத்தில் பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது; இரு கால்களிலும் தண்டை, சதங்கை காணப்படுகிறது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலது ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்கவாசகர் திருமேனியும், திருமுறைகளும் உள்ளன.

சென்னை கந்தகோட்டம் முத்துக்குமாரசுவாமி கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்டவடிவிலும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் காணப்படுகின்றன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண் டுள்ளது; இடது உள்ளங்கையில் தீயுள்ளது. முயலகன் வலக் காலை மடித்து நீட்டியும், இடது காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை ஆள்காட்டி விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டு கிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் பதஞ்சலி, காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகளும், இடப் பக்கம் வியாக்கிரபாதர் திருமேனியும் உள்ளன; வலப்பக்கம் திருமுறைகளும் வைக்கப்பட்டுள்ளன.

சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீசுவரர் கோயிலின் நடராசர் திருமேனியின் பிரபையில் ஐந்து நாக்குகளுடன் இருபத்தேழு தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஆறு, ஆறாக இரு பக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப் பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது; இடக்கையின் இரு விரல்களில் அகலில் உள்ள தீயை ஏந்தியுள் ளார். வலக்கையில் உடுக்கையை இரு விரல்களில் பிடித்துள்ளார்; தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது; வலக்கால்

வளைத்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; அப்பாம்பானது அவனை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனியின் பிரபையில் ஏழு நாக்குகளுடன் இருபத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது நீண்ட வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடையானது ஐந்தைந்தாக இருபக்கமும் பரவியுள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும் இடம்பெற்றுள்ளன. நடராசரின் அபயக் கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்து நீட்டியும், இடக்காலை மடித்து ஊன்றியும் படுத்துள்ளான்; இடக்கையில் பாம்பைப் பிடித்துள்ளான்; வலக்கை விரலால் தூக்கிய திருவடியைச் சுட்டுகிறான்; பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது; பாம்பும் தூக்கிய திருவடியை நோக்குகிறது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள். நடராசரின் வலப்பக்கம் மாணிக்க வாசகர் திருமேனியும், பதஞ்சலி திருமேனியும், திருமுறைகளும், இடப்பக்கம் வியாக்கிரபாதர் திருமேனியும் இடம் பெற்றுள்ளன.

பொதுவாக, சோழமண்டலக் கோயில் திருமேனிகள் எல்லாவற்றிற்கும் பிரபை உண்டு. இன்னம்பூர் கோயில் நடராசர் திருமேனியில் மட்டும் பிரபை இல்லை. ஆதிகும்பேசுவரர் கோயிலில் உள்ள திருமேனியில் சடை கட்டப்பட்டுள்ளது. பிரம்மபுரீசுவரர், நாகநாதசுவாமி, கம்பஹரேசுவரர், மனோக்ஞாத சுவாமி, மகாலிங்கேசுவரர், பாணுபுரீசுவரர், ஆபத்சகாயேசுவரர், கோமுக்தீசுவரர், உமாமகேசுவரர், மகாலிங்கசுவாமி, ஜம்புகேசுவரர், எறும்பீசுவரர், பிரகதீசுவரர், சுவேதாரண்யேசுவரர், நடராசர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசர் திருமேனிகளின் சடைகளில் கங்கை, பிறை காணப்படுகின்றன. நாகேஸ்வரன், உமாமகேசுவரர், ஜம்புகாரணியேசுவரர், அக்நீசுவரர், சிவக்கொழுந்தீசுவரர், தேனுபுரீசுவரர், சடைமுடிநாதர், சாட்சிநாதர், தாயுமானவர், அட்சயலிங்கசுவாமி, மாயூரநாத சுவாமி, தோணிபுரீசுவரர், முல்லைவனநாதர், உச்சிநாதேசுவரர் ஆகிய கோயில்களில் உள்ள திருமேனிகளின் சடையில் கங்கையும், பாம்பும் இடம்பெற்றுள்ளன. காசிவிசுவநாதர், சிவக்கொழுந்தீசுவரர், பரசுநாதர், அரநெறியப்பர் ஆகிய கோயில்களில்

திருமேனியின் சடையில் கங்கை மட்டும் உள்ளது. ஐயாறப்பர் கோயில் திருமேனியின் சடை உடைந்துள்ளது.

சோமநாதசுவாமி கோயில் திருமேனியின் சடையில் பூக்கள் மட்டும் உள்ளன. பாசுபதேசுவரர், பால்வண்ண நாதர் கோயில்களின் திருமேனியில் சடை இடம் பெறவில்லை. மகாலிங்கேசுவரர், உமாமகேசுவரர், கடம்பவனேஸ்வரர் ஆகிய கோயில்களின் திருமேனிகளின் சடாமகுடத்தில் கங்கை, பிறை யுள்ளன. மகாலிங்கேசுவரர் கோயிலில் உள்ள திருமேனியின் சடாமகுடத்தில் பாம்பு, கங்கை, பிறை ஆகியன இடம்பெற் றுள்ளன. கலியாண சுந்தரேசுவரர், எழுத்தறிநாதர், ஐராவ தேசுவரர் ஆகிய கோயில்களின் திருமேனியின் சடையில் கங்கை, பாம்பு, பிறை காணப்படுகின்றன. தேனுபுரீசுவரர் கோயில் திருமேனியின் சடையில் கங்கை, ஊமத்தம்பூவும், ஜம்புகேஸ்வரர் கோயிலின் திருமேனியின் சடாமகுடத்தில் பாம்பும், ஊமத்தம் பூவும், பஞ்சநதீஸ்வரர் கோயில் திருமேனியின் சடையில் கங்கை யும், பூக்களும் காணப்படுகின்றன.

ஆதிகும்பேசுவரர், நாகேஸ்வரன், சோமேசுவரர், மகாலிங் கேசுவரர், கோமுக்தீசுவரர், உமாமகேசுவரர், தேனுபுரீசுவரர், கலியாணசுந்தரேசுவரர், ஜம்புகேஸ்வரர், எறும்பீசுவரர், மாயூர நாத சுவாமி, தோணிபுரீசுவரர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது. பிரம்மபுரீசுவரர், காசிவிசுவநாதர், நாகநாதசுவாமி, கம்பஹரேசுவரர், மனோக் ஞாத சுவாமி, பாணுபுரீசுவரர், ஆபத்சகாயேசுவரர், உமா மகேசுவரர், ஜம்புகாரணியேசுவரர், அக்நீசுவரர், சிவக்கொழுந் தீசுவரர், பரசுநாதர், தேனுபுரீசுவரர், சடைமுடிநாதர், எழுத் தறிநாதர், மகாலிங்க சுவாமி, சோமநாத சுவாமி, ஐராவதேசு வரர், தாயுமானவர், கடம்பவனேஸ்வரர், பிரகதீசுவரர், பஞ்ச நதீஸ்வரர், அட்சயலிங்க சுவாமி, அரநெறியப்பர், மாயூரநாத சுவாமி, சுவேதாரண்யேசுவரர், முல்லைவனநாதர், நடராசர், பாசுபதேசுரர், பால்வண்ணநாதர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. சாட்சிநாதர், உச்சிநாதேசுவரர் கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது.

இம்மண்டலத்தில் ஆதிகும்பேசுவரர், நாகேஸ்வரன், நாக நாதசுவாமி, கம்பஹரேசுவரர், பாணுபுரீசுவரர், ஆபத்சகாயேசு வரர், கோமுக்தீசுவரர், அக்நீசுவரர், சிவக்கொழுந்தீசுவரர்,

சடைமுடிநாதர், சோமநாதசுவாமி, சாட்சிநாதர், ஐராவதேசுவரர், தாயுமானவர், சுவேதாரண்யேசுவரர், தோணிபுரீசுவரர், நடராசர், பாசுபதேசுவரர், உச்சிநாதேசுவரர் ஆகிய கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையுடன் உள்ளாள். நாகேஸ்வரன் கோயில் சிவகாமியின் கை தாளம் போடும் நிலையில் உள்ளது. அரநெறியப்பர், உச்சிநாதேசுவரர் ஆகிய கோயில்களில், சிவகாமி கையில் ஊமத்தம்பூ உள்ளது. சுவேதாரண்யேசுவரர், தோணீபுரீசுவரர், நடராசர் ஆகிய கோயில்களில் சிவகாமியுடன் தோழியர் இருவர் உடனுள்ளனர்.

பிரம்மபுரீசுவரர், காசிவிசுவநாதர், சோமேசுவரர், மகாலிங்கேசுவரர், மனோக்ஞாதசுவாமி, உமாமகேசுவரர், ஐம்புகாரணியேசுவரர், சிவக்கொழுந்தீசுவரர், பரசுநாதர், தேனுபுரீசுவரர், கலியாணசுந்தரேசுவரர், எழுத்தறிநாதர், மகாலிங்கசுவாமி, ஐம்புகேசுவரர், எறும்பீசுவரர், கடம்பவனேஸ்வரர், பிரகதீசுவரர், பஞ்சநதீஸ்வரர், அட்சயலிங்கசுவாமி, அரநெறியப்பர், மாயூரநாதசுவாமி, முல்லைவனநாதர், பால்வண்ணநாதர் ஆகிய கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

இம்மண்டலத்தில் நாகேஸ்வரன் கோயிலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனிகளும், திருமால் புல்லாங்குழல் வாசிக்கும் திருமேனியும் உடனுள்ளன. காசிவிசுவநாதர் கோயிலில் மாணிக்கவாசகர், சம்பந்தர் திருமேனிகள் உடனுள்ளன. நாகநாதசுவாமி, கம்பஹரேசுவரர், தாயுமானவர் ஆகிய கோயில்களில் திருமுறைகள் உடன் வைக்கப்பட்டுள்ளன. ஆபத்சகாயேசுவரர் கோயிலில் சந்நிதிக்கு வெளியே திருமுறைக் கோயில் உள்ளது. உமாமகேசுவரர் கோயிலில் சந்நிதிக்கு வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சுதைச் சிற்பங்கள் உள்ளன. எறும்பீசுவரர் கோயிலில் மாணிக்கவாசகர் திருமேனி, திருமுறைகள் நடராசருடன் வைக்கப்பட்டுள்ளன. பிரகதீசுவரர் கோயிலில் மாணிக்கவாசகர் திருமேனியுள்ளது.

பாண்டி மண்டலத்தில் உள்ள நடராசர் திருமேனிகளுக்கு எல்லாம் பிரபை உண்டு. ஆனால், மீனாட்சியம்மன், பாபவிநாசர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசருக்குப் பிரபை கிடையாது. இராமநாதசுவாமி, மங்களநாதசுவாமி, மீனாட்சியம்மன், ஆதிரத்னேசுவரர், திருத்தளிநாதர், திருமேனிநாதர், திருவாப்புடையார், குற்றாலநாதர், சங்கரலிங்கப்பெருமான், அம்பலவாணர், சிவந்தியப்பர், பாபவிநாசர், கைலாசநாதர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் சடையில் கங்கை, பிறை

காணப்படுகின்றன. இராமநாதசுவாமி, மங்களநாதசுவாமி, புஷ்பவனேஸ்வரர், நெல்லையப்பர், அழகிய கூத்தர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசருக்குச் சடை கிடையாது.

இராமநாதசுவாமி, மங்களநாதசுவாமி காசிவிசுவநாதர், குற்றாலநாதர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் சடையில் கங்கை, பாம்பு இடம்பெற்றுள்ளன. நெல்லையப்பர் கோயிலில் சடை பின்புறம் தொங்கவிடப்பட்டுள்ளது. குற்றாலநாதர் கோயிலில் சடாமகுடத்தில் பிறை, பாம்பு காணப்படுகின்றன.

இம்மண்டலத்தில் உள்ள இராமநாதசுவாமி, மங்களநாத சுவாமி, மீனாட்சியம்மன், ஆதிரத்னேசுவரர், திருமேனிநாதர், திருவாப்புடையார், குற்றாலநாதர், சங்கரலிங்கப் பெருமான், நெல்லையப்பர், சிவந்தியப்பர், பாபவிநாசர், கைலாசநாதர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. இராமநாதசுவாமி, மீனாட்சியம்மன், திருத்தளி நாதர், அம்பலவாணர், அழகிய கூத்தர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது.

மங்களநாதசுவாமி, மீனாட்சியம்மன், புஷ்பவனேஸ்வரர், காசிவிசுவநாதர், குற்றாலநாதர், நெல்லையப்பர் ஆகிய கோயில் களில் நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது.

இம்மண்டலத்தில் உள்ள இராமநாதசுவாமி, குற்றாலநாதர், நெல்லையப்பர், அம்பலவாணர் ஆகிய கோயில்களில் சிவகாமி பிரபையுடன் உள்ளாள். மீனாட்சியம்மன், நெல்லையப்பர், அம்பலவாணர், சிவந்தியப்பர், அழகியகூத்தர், கைலாசநாதர் ஆகிய கோயில்களில் உள்ள சிவகாமி கையில் ஊமத்தம்பூ காணப்படுகிறது. மங்களநாதசுவாமி, மீனாட்சியம்மன், ஆதிரத் னேஸ்வரர், திருத்தளிநாதர், புஷ்பவனேஸ்வரர், திருமேனி நாதர், திருவாப்புடையார், காசிவிசுவநாதர், குற்றாலநாதர், சங்கரலிங்கப்பெருமான், சிவந்தியப்பர், பாபவிநாசர், அழகிய கூத்தர், கைலாசநாதர் ஆகிய கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையின்றியுள்ளாள்,

இம்மண்டலத்தில் உள்ள இராமநாதசுவாமி, ஆதிரத்னேஸ் வரர், புஷ்பவனேஸ்வரர் ஆகிய கோயில்களில் நடராசர் சந்நி தியின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உள்ளன. மங்களநாதசுவாமி, ஆதிரத்னேஸ்வரர், அம்பலவாணர், அழகிய கூத்தர் ஆகிய கோயில்களில் மாணிக்கவாசகர் திருமேனி உடனுள் ளது. காசிவிசுவநாதர், குற்றாலநாதர், சிவந்தியப்பர், பாபவி

நாசர் ஆகிய கோயில்களில் காரைக்காலம்மையார், மாணிக்க வாசகர் திருமேனிகள் உடனுள்ளன. சங்கரன்கோயிலில் காரைக் காலம்மையார், பதஞ்சலி, வியாக்கிரபாதர், மாணிக்கவாசகர் திருமேனிகள் உடன் வைக்கப்பட்டுள்ளன. நெல்லையப்பர் கோயிலில் காரைக்காலம்மையார் திருமேனியும், திருமுறைகளும் உடன் உள்ளன. இம்மண்டலத்தில் தென்காசி, குற்றாலம் ஆகிய கோயில்களில் உள்ள நடராசர் திருமேனி வெளியே புறப் படாததால், மூலவர் என்றழைக்கப்படுகிறார்.

இம்மண்டலத்தில் சிவந்தியப்பர் கோயிலில் உள்ள திரு மேனியில் வலப்பக்கச் சடையில் பிறையும், இடப்பக்கச் சடை யில் கங்கையும் காணப்படுகின்றன. மற்ற திருமேனிகளிலோ இவை இடம் மாறி அமைக்கப்பட்டிருக்கும்.

கொங்குமண்டலக் கோயில்களில் உள்ள நடராசர் திரு மேனிகளுக்குப் பிரபை காணப்படுகிறது. பட்டீசுவரப் பெருமான், அர்த்தநாரீசுவரர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் சடையில் கங்கை, பிறை இடம்பெற்றுள்ளன. கைலாசநாதர், திருமுருகனாதசுவாமி கோயில்களில் உள்ள திருமேனிகளின் சடைகளில் சங்கை, பிறை, பாம்பு ஆகியன இடம் பெற்றுள்ளன. அவிநாசிலிங்கேஸ்வரர் கோயில் திருமேனியின் சடையில் கங்கையும், பாம்பும் காணப்படு கின்றன. மகுடேசுவரர் கோயிலில் உள்ள திருமேனியின் சடையில் கங்கை, ஊமத்தம்பூஆகியன இடம்பெற்றுள்ளன.

இம்மண்டலத்தில் உள்ள கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் தீ காணப்படுகிறது. பட்டீசுவரப் பெரு மான் கோயிலில் மட்டும் நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது.

இம்மண்டலத்தில் உள்ள பட்டீசுவரப்பெருமான், அர்த்த நாரீசுவரர், மகுடேசுவரர், அவிநாசிலிங்கேஸ்வரர் ஆகிய கோயில் களில் உள்ள சிவகாமி பிரபையுடன் உள்ளாள். கைலாசநாதர், திருமுருகனாதசுவாமி ஆகிய கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

பட்டீசுவரப்பெருமான் கோயிலில் நடராசருடன் திருமுறை கள் வைக்கப்பட்டுள்ளன. கைலாசநாதர் கோயிலில் காரைக் காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகள் உடனுள்ளன. மகுடேசுவரர், திருமுருகனாதசுவாமி ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் பிரபையில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் உருவங்கள் உள்ளன.

நடுநாட்டுக் கோயில்களில் உள்ள நடராசருக்குப் பிரபை அமைக்கப்படுவதுண்டு. நெய்வேலி நடராசர் கோயிலில் நடராசரின் சடையில் கங்கை, பாம்பு காணப்படுகின்றன. விருத்தகிரீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் சடையில் கங்கை, பிறை இடம் பெற்றுள்ளன. நித்தீஸ்வரர் கோயிலில் உள்ள நடராசருக்குச் சடைகள் காணப்படவில்லை.

நடராசர், விருத்தகிரீசுவரர், நித்தீஸ்வரர் ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது. நித்தீஸ்வரர் கோயிலில் உள்ள மற்றொரு திருமேனியில், நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. நடுநாட்டுக் கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

தொண்டைமண்டலக் கோயில்களில் உள்ள நடராசர் திருமேனிகளுக்குப் பிரபை அமைக்கப்படுவதுண்டு. ஏகாம்பரநாதர் கோயில் திருமேனியில் சடாமகுடம் காணப்படுகிறது. கச்சபேஸ்வரர், வடாரண்யேசுவரர், ஏகாம்பரேசுவரர், மருந்தீஸ்வரர், தியாகராஜசுவாமி, ஆதிபுரீசுவரர், கபாலீஸ்வரர், முத்துக்குமாரசுவாமி ஆகிய கோயில்களில் உள்ள நடராசர் திருமேனியின் சடையில் கங்கை, பிறை இடம் பெற்றுள்ளன. தர்மேஸ்வரர் கோயிலில் உள்ள திருமேனியின் சடையில் கங்கை, பாம்பு காணப்படுகின்றன.

ஏகாம்பரநாதர், கச்சபேஸ்வரர், தர்மேஸ்வரர், ஏகாம்பரேசுவரர், தியாகராஜசுவாமி, முத்துக்குமாரசுவாமி ஆகிய கோயில்களில் உள்ள நடராசரின் இடது உள்ளங்கையில் தீயுள்ளது. வடாரண்யேசுவரர் கோயிலிலும், கபாலீஸ்வரர் கோயிலிலும் உள்ள திருமேனிகளில் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. மருந்தீஸ்வரர் கோயிலிலும், ஆதிபுரீசுவரர் கோயிலிலும் உள்ள நடராசரின் இடது விரல் நுனியில் தீயுள்ளது. இம்மண்டலக் கோயில்களில் சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

இம்மண்டலத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் நடராசருடன் விநாயகர் திருமேனி உள்ளது. ஏகாம்பரேசுவரர் கோயிலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனிகள் உடனுள்ளன. தியாகராஜசுவாமி கோயிலில் நடராசருடன் மாணிக்கவாசகர் திருமேனியும், திருமுறைகளும் உடன் வைக்கப்பட்டுள்ளன. மருந்தீஸ்வரர் கோயிலில் நடராசருடன் மாணிக்கவாசகர் திருமேனி இடம் பெற்றுள்ளது. கபாலீஸ்வரர் கோயிலிலும், முத்துக்குமாரசுவாமி கோயிலிலும் நடராசருடன் மாணிக்கவாசகர் திருமேனியும், பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனிகளும்,

திருமுறைகளும் வைக்கப்பட்டுள்ளன. மேலும், முத்துக்குமார சுவாமி கோயிலில் மேற்கண்ட திருமேனிகளுடன் காரைக்காலம் மையார் திருமேனியும் காணப்படுகிறது.

சோழ, பாண்டி, நடு, தொண்டைமண்டலக் கோயில்களில் உள்ள திருமேனியின் சடையில் கங்கையும், பாம்பும் காணப்படு கின்றன. இத்திருமேனிகள்தாம் முதன்மையான திருமேனி களாகும். இத்திருமேனிகளுக்குப் பின்தோன்றிய திருமேனி களின் சடையில் கங்கையும் பிறையும் இடம்பெற்றுள்ளன.

## முடிவுரை

தாண்டவம் என்பதற்குத் தாண்டித் தாண்டிஆடுவது என்று பொருள். அத்தாண்டவம் என்ற சொல் சங்க இலக்கியங் களில் இடம் பெறவில்லை. முதன் முதலில் திருமூலர்தான், 'தாண்டவம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். தாண்டவம் என்பது பிற்காலத்தில் பெருவழக்குப் பெற்ற ஒன்று. அதற்குமுன் கூத்து என்ற சொல்லே வழக்கில் இருந்தது.

இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவங்கள் விளக்கப்பட் டுள்ளன. பிரதோஷ காலத்தில் இறைவன் ஆடிய ஆடலே சந்தியா தாண்டவமாகும். மதுரை வெள்ளியம்பலத்தில் ஆடல் வல்லான் கால்மாறியாடுவது உமாதாண்டவமாகும். சைவ-வைணவ இணைப்பிற்காக, இலக்குமி வேண்ட சிவன் ஆடினான் என்ற கருத்துத் தோன்றியிருக்க வேண்டும். இதனடிப்படையில், கௌரி தாண்டவம் இலக்குமி தாண்டவம் என்றழைக்கப்படு கிறது. காளிகா தாண்டவம் வேறு; காளி தாண்டவம் வேறு. மேலும், காளி தாண்டவமே ஊர்த்துவத் தாண்டவமாகும். அழித்தல் தொழிலைச் செய்யும் தாண்டவமே சங்கார தாண் டவம். இது சம்கார தாண்டவம் என்றும் வழங்கப்படுகிறது.

பேரின்பமயமான நிலையில் இறைவன் ஆடுவதே ஆனந்த தாண்டவம். பல்லவர் காலத்திற்கு முன்பே ஆனந்த தாண்டவச் சிற்பங்கள் தோன்றிவிட்டன. ஆனால், செம்பியன்மாதேவியார் காலத்தில்தான் இச்சிற்பங்கள் முழுமையான ஆனந்த தாண் டவத் தன்மையைப் பெற்றன. சோழர்களின் குலத் தெய்வமாக நடராசர் விளங்கியதால், அவ்வழிபாடு நாடு முழுவதும் பரப்பப் பட்டது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் கிடைத்திருக்கும் திரு மேனிகள்தாம் முழுமையான அமைப்புடன் திகழ்கின்றன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பே ஆனந்ததாண்டவத் திருமேனி

கள் இருந்திருக்க வேண்டும் என்பது இலக்கியத்தின்வழி அறிய முடிகிறது.

சிற்ப நூல்கள் ஆனந்த தாண்டவச் சிற்பங்க்ளை அமைக்கும் முறையை எடுத்தியம்புகின்றன. சிற்ப நூல்களிலே ஒருசில வேறு பாடுகள் காணப்படுகின்றன. அவற்றில் இறைவனின் ஒவ்வோர் உறுப்பினையும் எந்தெந்த அளவில் அமைக்க வேண்டும் என்ற முறையும் இடம்பெற்றுள்ளது. இலக்கியம் கண்டதற்கு இலக் கணம் இயம்பல் போல, சிற்பங்களைக் கண்டு, சிற்ப இலக்கண நூல்கள் தோன்றின. நடராசர் மட்டுமல்லாமல் கூத்தாடும் விநாயகரும், ஆனந்த தாண்டவ விஷ்ணுவும் கோயில்களில் காணப்படுகின்றனர். இச்சிற்பங்கள் ஆனந்த தாண்டவ நடராச ரைக் கண்ட சிற்பியின் கலை வண்ணத்தால் கற்பனையில் உருவாக்கப்பட்டனவாகும்.

சீயமங்கலத்தில் உள்ள தூண் சிற்பந்தான் கிடைத்திருக்கும் ஆனந்த தாண்டவச் சிற்பங்களுள் முதன்மையானது. செம்பியன் மாதேவி காலத்தில்தான் முதன்முதலில் ஆனந்த தாண்டவ நடராசர் தேவகோட்டத்தில் இடம்பெற்றார். அடுத்து, உத்தம சோழர் காலத்தில்தான் எல்லாக் கோயில்களிலும் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் தேவகோட்டத்தில் இடம் பெற்றன. தேவகோட்ட நடராசர் சிற்பங்கள் சோழமண்டலத்தில் தான் காணப்படுகின்றன. மற்ற மண்டலங்களில் இடம்பெற வில்லை. தேவகோட்ட நடராசர் சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்படுவதில்லை; சிவகாமி அமைக்கப் பெறுவதில்லை. தேவ கோட்டங்களில் காரைக்காலம்மையார் சிற்பம் பெரிய புராணக் கருத்துப்படி, நடராசர் காலடியில் அமைக்கப்பட் டுள்ளது. காளிக்கும் இறைவனுக்கும் நடைபெற்ற ஆடற் போட்டிக்குப்பின் காளியும் அமைக்கப்பெறும் முறை தோன்றி யிருக்கிறது.

சோழ, பாண்டி மண்டலங்களில் மட்டும்தான் பிரகாரச் சிற்பங்களில் நடராசர் இடம்பெற்றுள்ளார். மற்ற மண்டலங் களில் இடம்பெறவில்லை. சோழ, பாண்டி மண்டலச் சிற்பங் களுக்குச் சடை, பிரபை அமைக்கப்படுவதுண்டு; சிவகாமி இடம் பெறுவதுண்டு. இம்மண்டலங்களில் சிற்பியின் கைவண்ணத்திற் கேற்ப நடராசரின் இடது உள்ளங்கையிலும், விரல் நுனியிலும் தீ அமைக்கப்பட்டுள்ளது. ஊழிக்கூத்தாடும் நடராசருடன் வைத்து வழிபடப்பட்ட காரைக்காலம்மையார் வழிபாடே, பிற் காலத்தில் ஆனந்த தாண்டவ நடராசருடன் வைத்து வழிபடும் வழிபாடாகியிருக்கிறது. பதிமூன்றாம் நூற்றாண்டில் கோயிற்

புராணம் தோன்றியபின் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் தான் நடராசருடன் வைக்கப்பட்டன. அதன்பின் காரைக் காலம்மையார் சிற்பம் இடம்பெறவில்லை.

பாண்டி மண்டலத்தில் காணப்படும் நடராசர் சிற்பங்கள் 'சந்தன நடராசர்' என்று அழைக்கப்படுகின்றன. பாபநாசம் கோயிலில் உள்ள நடராசர், 'புனுகு சபாபதி' என்றழைக்கப்படு கிறார். உத்தரகோச மங்கையில் 'மரகதக்கல் நடராசர் சிற்பம்' உள்ளது. திருப்புத்தூர்க் கோயிலில் கௌரி தாண்டவக் கற்சிற்பம் உள்ளது. திருச்சுழி, திருவாப்பனூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களின் பிரகாரத்தில் சுதைச் சிற்பமாக நடராசர் விளங்கு கிறார். தில்லைக் கோயிலில் மாணிக்கவாசகர் பெற்றிருந்த சிறப் பின் காரணமாக, ஆனந்த தாண்டவ நடராசருடன் மாணிக்க வாசகரை அமைக்கும் முறை தோன்றியிருக்கிறது. திருமுறைகள் தில்லை நடராசரின் அருளால் கிடைத்தவை. எனவே, அவருடன் திருமுறைகளை வைக்கும் முறை தோன்றியது. புராணக் கருத்துப்படியும் நடராசர் சிற்பம் பிரகாரத்தில் அமைக்கப்பட் டுள்ளது. ஆனந்த தாண்டவச் சிற்பங்களைப் புஜங்கத்திராசம் என்று சுட்டுவது பொருந்தாது.

எல்லா மண்டலங்களிலும் உள்ள கோயில்களின் தூண் சிற்பங்களில் சிவகாமி அமைக்கப் பெறுவதில்லை. சில கோயில் களில் சிவகாமியும் அமைக்கப்பட்டிருக்கிறாள். தூண் பெரியதாக உள்ளதாலும், சிற்பியின் எண்ணத்தாலும் சிவகாமி தூணில் இடம்பெற்றுள்ளாள். சோழ, தொண்டை மண்டலக் கோயில் களில் உள்ள தூண் சிற்பங்களுக்குப் பிரபை அமைக்கப்படுவ தில்லை; பாண்டி, கொங்கு மண்டலங்களில் அமைக்கப்பட் டுள்ளது. தொண்டை மண்டலத்திலுள்ள தேனுபுரீசுவரர் கோயி லின் தூணில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடன் அமைக்கப்பட்டுள்ளன. பாண்டி மண்டலத்திலுள்ள மீனாட்சி கோயிலில் புராணக் கருத்துப்படி நடராசர் சிற்பம் தூணில் அமைக்கப்பட்டுள்ளது. சோழ மண்டலத்திலுள்ள உச்சிப்பிள்ளை யார் கோயிலில் மட்டும் முயலகன் கையில் கத்தியுள்ளது.

எல்லா மண்டலங்களிலுள்ள இதர சிற்பங்களுக்கும் பெரும் பாலும் சடை, பிரபை அமைக்கப்பட்டுள்ளது. எல்லா மண்டலங் களிலும் உள்ள கோயில்களில் இதர சிற்பங்களில் பெரும்பாலும் சிவகாமி அமைக்கப் பெறுவதில்லை, சோழ, தொண்டை மண்டலங்களின் கோயில்களில் இதர சிற்பங்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் உடன் அமைக்கப்பட்டுள்ளன. சோழ

மண்டலத்திலுள்ள அக்நீசுவரர் கோயிலில் நான்முகன் சிற்பமும் உடன் இடம்பெற்றுள்ளது. அம்மண்டலத்தில் உள்ள உமா மகேசுவரர் கோயிலில் செம்பியன்மாதேவி வணங்கும் நிலையில் ஒரு சிற்பம் உள்ளது. பாண்டி மண்டலத்தில் நெல்லையப்பர் கோயிலில் இதர சிற்பங்களில் காரைக்காலம்மையார், முனிவர் ஒருவர், குடமுழா வாசிக்கும் அடியார் ஆகிய மூவரும் இடம் பெற்றுள்ளனர்.

எல்லா மண்டலக் கோயில்களின் கோபுரங்களிலும் பெரும் பாலும் நடராசருக்குப் பிரபை அமைக்கப்படுவதுண்டு; சிவகாமி அமைக்கப்படுவதுண்டு. விரித்த சடை உணர்த்தும் நடன நுட்பம் உணரப் பெறாமையால், சோழ, பாண்டி, நடுநாடு, தொண்டை மண்டலக் கோயில் கோபுரங்களில் பெரும்பாலான நடரா சருக்குச் சடை காணப்பெறவில்லை. கொங்கு மண்டலத்தி லுள்ள பெரும்பாலான கோயில் கோபுரங்களில் நடராசருக்குச் சடை காணப்படுகிறது. சோழ மண்டலத்திலுள்ள ஐம்பு கேசுவரர் கோயிலில் நான்முகன் மத்தளம் வாசிக்கும் நிலையி லும், திருமால் தாளம் போடும் நிலையிலும் சிற்பங்கள் உள்ளன. இம்மண்டலத்திலுள்ள கோமுக்தீசுவரர் கோயிலில் மாணிக்க வாசகர் சிற்பம் உடன் அமைக்கப்பட்டுள்ளது; அடியார்கள் வணங்கும் நிலையிலும் சிற்பங்கள் உள்ளன.

சோழ, பாண்டி, தொண்டை மண்டலக் கோயில்களின் கோபுரங்களில் புராணக் கருத்துகளின்படி அமைக்கப்பட்ட சிற்பங்கள் காணப்படுகின்றன. சோழ மண்டலத்திலுள்ள மாற்றுரைவரதீசுவரர் கோயிலில் மட்டும் நடராசரின் காலடி யில் முயலகன் இடம்பெறவில்லை; பாம்பு இடம்பெற்றுள்ளது. கொங்கு மண்டலத்தில் அவிநாசிலிங்கேசுவரர் கோயிலின் கோபுரத்தில் நால்வர் சிற்பங்கள் நடராசருடன் வைக்கப் பட்டுள்ளன.

எல்லா மண்டலக் கோயில் சுதைச் சிற்பங்களில் பெரும் பாலும் சடையும், பிரபையும், சிவகாமியும் அமைக்கப் பட்டுள்ளன. சோழ மண்டலத்தில் உள்ள மாற்றுரைவரதீசுவரர் கோயிலின் சுதைச் சிற்பத்தில் நடராசரின் காலடியில் முயலகன் இடம்பெறவில்லை; பாம்புதான் இடம்பெற்றுள்ளது. இம் மண்டலத்திலுள்ள மாணிக்கவிநாயகர் கோயிலின் சுதைச் சிற் பத்தில் முயலகன் கையில் கத்தியும், கேடயமும் காணப் படுகின்றன. சுவேதாரண்யேசுவரர் கோயிலில் உள்ள முயலகன் கையில் பாம்பும், கேடயமும் உள்ளன. சோழ, பாண்டி,

தொண்டை மண்டலக் கோயில்களில் நடராசர் சுதைச் சிற்பங்கள் புராணக்கருத்துப்படி அமைக்கப்பட்டுள்ளன. பாண்டி மண்டலத்திலுள்ள ஆறுமுகப் பெருமான் கோயிலில் மாணிக்க வாசகர் உடனுள்ளார். தொண்டை மண்டலத்திலுள்ள வடாரண்யேசுவரர் கோயிலில் முகப்புச் சிற்பமாகப் பஞ்சசபைகளில் உள்ள சிற்பங்கள் காணப்படுகின்றன.

எல்லா மண்டலக் கோயில்களின் மரச்சிற்பங்களில் சடை அமைக்கப்படுவதுண்டு. சோழ, நடுநாட்டுக் கோயில்களின் மரச் சிற்பங்களில் பிரபை, சிவகாமி அமைக்கப்பெறவில்லை. பாண்டி, தொண்டை மண்டலக் கோயில்களில் பிரபை அமைக்கப் பட்டுள்ளது. பாண்டி மண்டலத்திலுள்ள மானூர் கோயிலின் மரச்சிற்பத்தில் சிவகாமி காணப்படுகிறாள். தொண்டை மண்டலத்திலுள்ள தியாகராஜசுவாமி கோயிலில் சிவகாமி காணப்பெறவில்லை. சோழ மண்டலத்திலுள்ள சுவேதாரண்யே சுவரர் கோயிலில் மட்டும் மரச்சிற்ப நடராசர் புராணக்கருத் துப்படி அமைக்கப்பட்டுள்ளார்.

எல்லா மண்டலக் கோயில்களிலும் ஓவிய நடராசருக்குப் பெரும்பாலும் சடை, பிரபை அமைக்கப்பட்டுள்ளது; சிவகாமி யும் உடன் அமைக்கப்பட்டுள்ளாள். சோழ மண்டலத்திலுள்ள கோமுக்தீசுவரர் கோயிலின் ஓவியத்தில் முயலகன் கையில் கத்தி, கேடயம் காணப்படுகின்றன. இம்மண்டலத்திலுள்ள தாயுமானவர் கோயிலில் பிருங்கி முனிவர் வணங்கிய நிலையில் உள்ளார். இம்மண்டலத்திலுள்ள நடராசர் கோயிலில் சுந்தரர் வணங்கிய நிலையில் உள்ளார். சோழ, பாண்டி, நடுநாட்டுக் கோயில்களில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஓவியங்களும் நடராச ருடன் வரையப்பட்டுள்ளன. சோழ மண்டலத்திலுள்ள சுவேதாரண்யேசுவரர் கோயிலில் ஒன்பது வகைத் தாண்டவங்கள் ஓவியமாக வரையப்பட்டுள்ளன. பாண்டி மண்டலத்திலுள்ள இராமநாதசுவாமி கோயிலில் பஞ்சசபை நடராசர் ஓவியங்கள் காணப்படுகின்றன. கொங்கு மண்டலத்திலுள்ள பட்டீசுவரர் கோயிலிலும், தொண்டை மண்டலத்திலுள்ள தியாகராஜ சுவாமி கோயிலிலும் ஐவகைத் தாண்டவங்கள் ஓவியப்படமாகக் காட்சி யளிக்கின்றன.

முற்காலச் சோழர் காலத்தில் கிடைத்த திருமேனிகளில் முதன்மையானது ஒக்கூர் திருமேனி. கிடைத்திருக்கும் ஆனந்த தாண்டவ நடராசர் திருமேனிகளுள் முழு நிறைவானது— முதன்மையானது விருத்தகிரீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனி. எல்லா மண்டலக் கோயில்களிலும் உள்ள பெரும் பாலான திருமேனிகளுக்குப் பிரபை, சடை அமைக்கப் பட்டுள்ளன.

சோழ, பாண்டி, நடு, தொண்டை மண்டலக் கோயில்களில் உள்ள திருமேனியின் சடையில் கங்கையும், பாம்பும் காணப் படுகின்றன. இத்திருமேனிகள்தாம் முதன்மையான திருமேனி களாகும். இத்திருமேனிகளுக்குப் பின் தோன்றிய திருமேனிகளில் சடையில் கங்கையும், பிறையும் இடம்பெற்றுள்ளன. எல்லா மண்டலங்களிலும் உள்ள பெரும்பாலான நடராசர் திருமேனி களில் நடராசரின் இடது உள்ளங்கையில் அகலில் தீயுள்ளது. சோழ மண்டலத்திலுள்ள நாகேஸ்வரன் கோயிலில் சிவகாமியின் கை தாளம் போடும் நிலையில் உள்ளது. சோழ, பாண்டி மண்ட லத்தில் உள்ள கோயில்களில் சிவகாமியின் கையில் ஊமத்தம்பூ உள்ளது. சோழ மண்டலக் கோயில்களில் உள்ள சிவகாமியுடன் தோழியர் இருவர் உடன் அமைக்கப்பட்டுள்ளனர்.

சோழ, பாண்டி, தொண்டை மண்டலக் கோயில்களில் நடராசர் திருமேனியுடன் பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருமேனி கள் உடன் வைக்கப்பட்டுள்ளன. சோழ மண்டலத்திலுள்ள காசி விசுவநாதர் கோயிலில் மாணிக்கவாசகர், சம்பந்தர் திருமேனிகள் நடராசருடன் வைக்கப்பட்டுள்ளன. சோழ மண்டலத்திலுள்ள கோயில்களிலும், கொங்கு மண்டலத்தி லுள்ள பட்டீசுவரர் கோயிலிலும், நடராசருடன் திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன. கொங்கு மண்டலத்திலுள்ள கைலாச நாதர் கோயிலில் காரைக்காலம்மையார், மாணிக்கவாசகர் திருமேனிகள் நடராசருடன் உள்ளன.

பாண்டி மண்டலத்திலுள்ள கோயில்களில் நடராசர் சந்நிதி யின் வெளியே பதஞ்சலி, வியாக்கிரபாதர் சிற்பங்கள் வைக்கப் பட்டுள்ளன. இம்மண்டலக் கோயில்களில் மாணிக்கவாசகர் திருமேனியும், காரைக்காலம்மையார் திருமேனியும் நடராசரு டன் வைக்கப்பட்டுள்ளன. இம்மண்டலத்திலுள்ள நெல்லையப்பர் கோயிலில் நடராசருடன் திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன. இம்மண்டலக் கோயில்களில் வெளியே புறப்படாத திருமேனிகள் மூலவர் திருமேனி என்றழைக்கப்படுகின்றன. இம்மண்டலத்தி லுள்ள சிவந்தியப்பர் கோயிலில் நடராசரின் சடையில் கங்கை யும், பிறையும் இடம் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன.

நடுநாடு, தொண்டை மண்டலக் கோயில்களில் உள்ள சிவகாமி பிரபையின்றியுள்ளாள். தொண்டை மண்டலத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலில் நடராசருடன் விநாயகர் திருமேனி வைக்கப்பட்டுள்ளது. இம்மண்டலக் கோயில்களில் நடராசருடன் திருமுறைகள் வைக்கப்பட்டுள்ளன. இம்மண்டலக் கோயில்களில் மாணிக்கவாசகர், பதஞ்சலி, வியாக்கிரபாதர், காரைக் காலம்மையார் திருமேனிகளும் நடராசருடன் வைக்கப் பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. சிலப்பதிகாரம், 8:64.
2. கலைக்களஞ்சியம், ப. 554.
3. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி, ப. 1828.
4. செந்தமிழ் அகராதி, ப. 350.
5. பிங்கல நிகண்டு, சூ. 3624.
6. டாக்டர் இரா. கலைக்கோவன், இரா. வளர்மதி, 'கரண குழப்பங்கள்' **செந்தமிழ்ச்செல்வி**, செப்டம்பர், 1987, ப. 33.
7. Muno Mohan Ghosh (Tr.) The Natya Sastra, Bharatha Muni, P. 67.
8. கார்த்திகா கணேசர், காலந்தோறும் நாட்டியக்கலை, ப. 68.
9. தொல்காப்பியம், புள்ளி மயங்கியல், சூ. 101.
10. நன்னூல், மெய்யீற்றுப்புணரியல், சூ. 24.
11. DED 2578.
12. Kamil V. Zvelebil, Ananda-Tandava of Siva-Sada nrttamurti, p. 2.
13. திருமூலர், திருமந்திரம், பா 868.
14. சேக்கிழார், பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், பா. 108.
15. உமாபதிசிவம், கோயிற்புராணம், பதஞ்சலிச் சருக்கம், பா. 91.
16. குமரகுருபரர், சிதம்பரச் செய்யுட்கோவை, பா. 76.
17. பெரும்பற்றப்புலியூர் நம்பி, திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடல், பா. 5.
18. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், கான் மாறியாடின படலம், பா. 10.
19. கச்சியப்ப முனிவர், பேரூர்ப்புராணம், தென்கயிலாயப் படலம், பா. 45.
20. திரிகூடராசப்பக்கவிராயர், திருக்குற்றாத்தல புராணம், திருநடனச் சருக்கம், பா. 18.

21. இராமலிங்க அடிகள், திருவருட்பா, பா. 4342.
22. கார்த்திகா கணேசர், மு. கு. நூ., ப. 66.
23. கலைக்களஞ்சியம், ப. 554.
24. Tandva Laksana p. 16.
25. அபிநயதர்ப்பணம் மூலமும் உரையும், ப. 23.
26. கலைக்களஞ்சியம், ப. 554.
27. மேற்படி.
28. கூத்த நூல், தொகை நூல், சூ. 34-38.
29. கலைக்களஞ்சியம், ப. 558.
30. பரதசேனாபதீயம் மூலமும் உரையும், பக். 2-3.
31. செ. வைத்தியலிங்கன், அழகுக்கலைகள், ப. 141.
32. கூத்த நூல், தொகை நூல், சூ. 41.
33. மேற்படி. சூ. 42.
34. மேற்படி, ச. து. சு. யோகியார் உரை, ப. 170.
35. மேற்படி, ப. 171.
36. சிற்பரத்தினம், இருபத்திரண்டாவது அத்தியாயம், பக். 8-16.
37. மு. தர்மலிங்கம், ர. பக்தவத்சலம், பிரதோஷமும் சிவ வழிபாடும், பக். 14-15.
38. சே.த. ராமலிங்கம் பிள்ளை, 'நடமாடும் நம்பன்', **அமிர்தவசனி**, செப்டம்பர்—அக்டோபர், 1954, பக். 249-250.
39. Indian Express, 'The Nine Taandavas', 1.12.1988, 2.12.1988.
40. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், பக். 245-251.
41. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், ப. 10.
42. பரஞ்சோதி முனிவர், மு. கு. நூ., கான்மாறியாடின படலம், பா. 3, 4.
43. மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழு வகைத் தாண்டவம், பக். 42-43.

44. தண்டபாணி தேசிகர், ஆடல்வல்லான், ப. 126.

45. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா.9.

46. Kamil V. Zvelebil, Op. Cit., pp. 4-5.

47. ஹரிநாதன் பேட்டியில் கூறியது; நாள்: 14.02.1989.

48. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா. 14.

49. மேற்படி, பா. 12.

50. தண்டபாணி தேசிகர், மு.கு.நூ., ப. 125.

51. சோ. நடராசன் (த.மொ.பெ.), சிவானந்த நடனம், பக். 75-76.

52. மு. தர்மலிங்கம், ர. பக்தவத்சலம், மு.கு.நூ., ப. 13.

53. அ. அறிவொளி, பஞ்சபூதத் தலங்கள், ப. 39.

54. மேற்படி.

55. வை.தட்சிணாமூர்த்தி, 'ஆகமங்கள் நவிலும் எழுவகைத் தாண்டவங்கள்' சிதமபரம் ஸ்ரீசபாநாயகர் கோயில், ஸ்ரீசிவகாமி அம்பாள் திருக்கோயில் திருக்கும்பாபிஷேக மலர், ப. 125.

56. மேற்படி.

57. சகளாதிகாரம், ப. 84.

58. ஸ்ரீதத்துவநிதி, முதாவது பாகம், ப. 246.

59. தண்டபாணி தேசிகர். மு. கு. நூ., ப. 135.

60. மயிலை சீனி. வேங்கடசாமி, மு.கு.நூ., ப. 52.

61. தண்டபாணி தேசிகர், மு.கு.நூ., ப. 135.

62. மயிலை சீனி. வேங்கடசாமி, மு.கு.நூ., ப. 52.

63. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா. 12.

64. R. Nagasamy, The Kailasanatha temple, p.25.

65. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப. 125.

66. வே. ராகவன், நாட்டியக்கலை, ப. 49.

67. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 247.

68. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப. 125.
69. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 247.
70. வை. தட்சிணாமூர்த்தி, மு. கு. க., ப. 125.
71. டாக்டர் இரா. கலைக்கோவன், இரா. வளர்மதி, மு.கு.க., ப. 36.
72. மேற்படி.
73. சே. த. ராமலிங்கம் பிள்ளை, மு.கு.க., ப. 491.
74. மேற்படி.
75. வே. ராகவன், மு.கு.நூ., ப. 47.
76. தண்டபாணி தேசிகர், மு.கு.நூ., ப. 133.
77. மேற்படி.
78. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 248.
79. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப. 126.
80. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 248.
81. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப. 126.
82. மயிலை சீனி. வேங்கடசாமி, மு.கு.நூ., ப. 53.
83. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா. 12.
84. மயிலை சீனி. வேங்கடசாமி, மு.கு.நூ., ப. 45.
85. சே.த. ராமலிங்கம் பிள்ளை, மு.கு.க., ப. 540.
86. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், ப.14.
87. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 249.
88. மயிலை சீனி. வேங்கடசாமி, மு.கு.நூ., ப. 45.
89. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப.127.
90. தண்டபாணி தேசிகர், மு.கு.நூ., ப. 136.
91. திருமூலர், மு.கு.நூ., பா. 329.
92. திருப்புத்தூர்ப்புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா.13.
93. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப.250.
94. வை. தட்சிணாமூர்த்தி, மு.கு.க., ப. 127.
95. தண்டபாணி தேசிகர், மு.கு.நூ., ப. 136.
96. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 251.
97. உமாபதி சிவம், மு.கு.நூ., நடராசச் சருக்கம், பா.10.

98. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி, ப. 262.

99. மதுரைத் தமிழ்ப்பேரகராதி, பக். 234-35.

100. கழகத் தமிழ் அகராதி, ப. 78.

101. செந்தமிழ் அகராதி, ப. 45.

102. ச. மெய்யப்பன், தில்லைத் திருக்கோவில், ப. 51.

103. Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, p. 280.

104. Ananda K. Coomaraswamy, History of Indian and Indonesian Art, p. 127.

105. திருமூலர், மு.கு.நூ., பா. 2679.

106. திருநாவுக்கரசர் தேவாரம், 4:81:4.

107. பி.ஸ்ரீ., தில்லைத் திருநடனம், ப. 24.

108. திருமூலர், மு. கு. நூ., பா. 2679.

109. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 4:81:4.

110. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 247.

111. மேற்படி, ப. 249.

112. சேக்கிழார், மு.கு.நூ., தடுத்தாட்கொண்ட புராணம், பா. 106.

113. திருமூலர், மு.கு.நூ., பா. 2753.

114. மனவாசகங்கடந்தார், உண்மை விளக்கம், பா. 36.

115. குமரகுருபரர், சிதம்பர மும்மணிக்கோவை, பா. 1:1-12

116. க. நவரத்தினம், தென்னிந்திய சிற்ப வடிவங்கள், ப. 129.

117. டாக்டர் சபாரத்தினம், 'சிற்சபைநாதரும் சிவாகமங்களும்', சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர் கோயில் கும்பாபிஷேக மலர், 1987, ப. 118.

118. மேற்படி.

119. ஸ்ரீதத்துவநிதி, முதலாவது பாகம், ப. 245.

120. சகளாதிகாரம், பக். 85-89

121. சிற்பரத்தினம், இருபத்திரண்டாவது அத்தியாயம், பக். 8-11.

122. Dr. R. Kalaikkovan, 'Rare Sculptures of Ananda Tandava', Indian Express, 2-7-1988.

r John Marshall, Mohenjodaro and the Indus ivilization, Vol. I., p. 46.

amil V. Zvelebil, Op. Cit., p. 20.

id., p. 24.

id.

ஸ். ஆர். பாலசுப்பிரமணியம், சோழர் கலைப்பாணி, க். 118.

amil V. Zvelebil, Op. Cit., p. 24.

க்கிழார், மு.கு.நா., காரைக்காலம்மையார் ராணம், பா. 60.

க்டர் க. த. திருநாவுக்கரசு, தென்கிழக்கு ஆசிய டுகளில் தமிழ்ப் பண்பாடு, பக். 200-201.

Sivaramamurti, Nataraja in Art, Thought and erature, pp. 228, 236.

mil V. Zvelebil. Op. Cit., pp. 27-28.

d., p. 28.

d.

இயல் 3

# ஐவகை மன்றங்கள்

இந்திய மரபில் சிறப்புமிகு பொருள்களைத் தொகுத்துக் கூறுவதில், 'ஐந்து' எனும் தொகை சிறந்த இடம் வகிக்கிறது; இறைவனின் ஐந்தொழில்களைப் 'பஞ்ச கிருத்தியம்' எனச் சுட்டுவர்; சிறப்புமிகு காப்பியங்களைப் 'பஞ்ச காவியம்' எனக் குறிப்பர்;இதைப் போன்றே சாணம், பால், தயிர், நெய், ஆவின் கோமியம் ஆகிய இவற்றை ஒன்றாகத் தொகுத்து 'பஞ்ச கவ்வியம்' எனப் புனிதமாகப் போற்றுவது மரபு.

இம்முறையில் சிவபெருமானுடைய ஆடல் கோலத்தை ஐவகை மன்றங்களில் நடைபெற்றதாகத் தொகுத்துச் சுட்டுவது வழக்கமாக இருந்து வருகிறது. திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, குற்றாலம் ஆகிய திருத்தலங்களையே, 'ஐவகை மன்றங்கள்' என்றும் 'பஞ்சசபை' என்றும் குறிப்பிட்டு வருகின்றனர். இன்று 'பஞ்சசபை' என்ற சொல்லாட்சியே வழக்கில் உள்ளது. எனவே, அச்சொல்லின் பொருள் முதலில் விளக்கப்படுகிறது.

### பஞ்சசபை: சொல்லும் பொருளும்

பஞ்சசபை என்பது தமிழ்ச்சொல் அன்று. பஞ்ச என்பதற்கு ஐந்து என்று பொருள். சபா என்பதே சபை என்று தமிழில் வழங்கப்படுகிறது. இன்று பலர் கூடும் இடத்தையே சபை என்ற சொல் குறிக்கிறது. இருப்பினும், அம்பலம், மன்றம் முதலிய தமிழ்ச் சொற்களும் இதே பொருள் கொண்டவையாகத் திகழ் கின்றன. எனவே, எச்சொல் முதலில் வழக்கிற்கு வந்தது என்பது ஆராயப்படுகிறது.

## அம்பலமா? மன்றமா? சபையா?

சங்க இலக்கியங்களில் அம்பலம், சபை என்ற சொற்கள் இடம் பெறவில்லை. மன்றம் என்ற சொல்தான் இடம் பெற்றுள்ளது. பொதியில் என்ற சொல்லும் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இதற்குப் பொதியமலை, எல்லோருக்கும் பொதுவான இடம் என்ற இரண்டு பொருள்களும் இடத்திற் கேற்ப வழங்கப்படுகின்றன. இனி, இலக்கியங்களில் இச்சொற் கள் பயன்பட்டுள்ள முறை விளக்கப்படுகிறது.

### அம்பலம்

'அம்பலம்' என்ற சொல்லிற்கு, பலர் கூடும் வெளியிடம், ஊர்ச்சபை, கழகம், கூத்துக் காண்போர் இருக்கை, தில்லையம் பலம், கிராம உத்தியோக வகை, அம்பலக்காரன் என்ற பொருள் களைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி பகரு கிறது.[1] மதுரைத் தமிழ்ப் பேரகராதி சபை, சித்திரகூடம், சிதம்பரத்தின் சபை வெளி, சங்கம், சாதிக் கூட்டம், பலரும் கூத்துக் காணுமிடம் ஆகிய பொருள்களை மொழிகிறது.[2] சபை, வெளி, சபை கூடுமிடம், பொதுவிடம், தில்லை ஆகிய பொருள்களைக் கழகத் தமிழ் அகராதி கூறுகிறது.[3] பலர் கூடும் வெளி, ஊர்ச்சபை, கூத்துக் காண்போர் இருக்கை ஆகிய பொருள்களைச் செந்தமிழ் அகராதி செப்புகிறது.[4]

'தொன்மூதாலத்து அரும்பணைப் பொதியில்' என்ற அக நானூற்று அடியில் உள்ள பொதியில் என்பது மன்றம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.[5] 'போர் மடி நல்லிறைப் பொதியி லானே' என்ற அடியிலுள்ள பொதியில் என்பதற்கு அம்பலம் என்ற பொருள் கூறப்பட்டுள்ளது.[6] ஆனால், குறுந்தொகையில் வரும், 'தொன்மூதாலத்துப் பொதியில் தோன்றிய' என்ற அடிக்கு, 'மிகப் பழைய ஆலமரத்தடியின்கண் உள்ள பொது இடம்' என்ற பொருளைக் கொள்கிறார் உ. வே. சாமி நாதையர்.[7]

திருமுருகாற்றுப்படையில் உள்ள 'மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்' என்ற சொற்களுக்கு முறையே, ஊர்க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடி, அம்பலம், ஆதீண்டு குற்றியை உடைய இடம் என்ற பொருள்களைக் கூறுகிறார் நச்சினார்க்கினியர்.[8] சிலப்பதிகாரத்தில் பொதியிலில் இறைவன் உறைகின்ற இடம் வெள்ளியம்பலம் என்று சுட்டப்படுகிறது. இதனை, 'கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்

வெள்ளி அம்பலத்து' என்ற அடிகளால் அறியலாம்.[9] 'அம்பலமும் அரங்கமும் சாலையும்' என்ற சீவகசிந்தாமணி அடியில் அம்பலம் என்பது 'பலரும் கூத்துக் காணும் இடம்' என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.[10]

மேற்கண்ட பொருள்களில் இருந்து, பலர் கூடும் வெளியிடமே அம்பலம் என்ற பெயரில் வழங்கப் பெற்றிருக்க வேண்டும். மேலும், 'அரைசொல் கொண்டு அம்பலம் ஏறலாமா?' என்ற பழமொழியும் இங்கே கருதத்தக்கது.

**மன்றம்**

'மன்றம்' என்ற சொல்லிற்குப் பின்வரும் பொருள்களைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி செப்புகிறது. அவை,

> ''சபை, நியாயசபை, ஊருக்கு நடுவேயுள்ள
> மரத்தடிப் பொதுவிடம், செண்டுவெளி, வெளியிடம்,
> போர்க்களப் பரப்பின் நடுவிடம், சிதம்பரம், வீடு,
> பசுத்தொழு, நெடுந்தெரு''[11]

என்பன. மேற்கண்ட பொருள்களோடு மெய்ம்மை, வாசனை ஆகிய பொருள்களைச் சேர்த்து, செந்தமிழ் அகராதி செப்புகிறது.[12] நிச்சயம், பலர்கூடும்வெளி, வெளி, வாசனை, மெய்ம்மை ஆகிய பொருள்களை இணைத்துக் கழகத் தமிழ் அகராதி கூறுகிறது.[13] மதுரைத் தமிழ்ப்பேரகராதி, பொது விடம், பொதுவில் ஆகிய பொருள்களைச் சேர்த்துக் கூறு கிறது.[14] இனி, இச்சொல் இலக்கியங்களில் பெறும் இடம் ஆராயப்படுகிறது.

'மன்றம் போ நாடன் தோழி' என்ற குறுந்தொகை அடியில் உள்ள மன்றம் என்பதற்குக் குறவர் ஊர்களிலுள்ள பொது இடம் என்று பொருள் கூறுகிறார் உ.வே சாமிநாதையர்.[15] 'மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்கு' என்ற பதிற்றுப்பத்து அடியில் உள்ள மன்றம் என்பதற்கு 'ஊர் மன்றம்' என்ற பொருளைக் கொள்ளுகிறார் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.[16] 'மன்று தொறு நின்ற குரவை' என்ற மதுரைக் காஞ்சி அடியில் உள்ள மன்று என்பது 'மன்றுகள் தோறும்' என்ற பொருளைப் பகருகிறது.[17]

'நடுவூர் மன்றத்து அடி பெயர்ந்தாடி' என்ற சிலப்பதிகார அடியில் உள்ள மன்று, ஊர் மன்றத்தையே குறிக்கிறது [18] 'மாத

வரடிகளும் மன்றமும் பொதியிலும்' என்ற மணிமேகலை அடியில் உள்ள மன்றம் என்பது ஊருக்கு நடுவாய் எல்லாரு மிருக்கும் மரத்தடியைச் சுட்டுகிறது.[19] இதே பொருளைத் திரு முருகாற்றுப்படை அடியில் உள்ள மன்றம் என்பதற்கு நச்சினார்க் கினியர் கொண்டது முன்னரே கூறப்பட்டது.

மேற்கண்ட விளக்கங்களில் இருந்து மன்றம் என்பது ஊருக்கு நடுவே எல்லாரும் கூடும் மரத்தடியைச் சுட்டுவது புலனாகிறது. உரையாசிரியர்கள்தாம் பொதியில் என்பது அம்பலத்தையும், மன்றம் என்பது ஊர்க்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடி யையும் குறிக்கும் என்று வேறுபடுத்திக் காட்டினர். மேலும், மன்றம் என்ற சொல்தான் பழமையானது என்பதையும், அம் பலம் என்ற சொல் உரையாசிரியர்களால் உருவாக்கப்பட்டது என்பதையும் அறியமுடிகிறது. இன்று அம்பலம் என்பது பேச்சு வழக்கில்தாம் இடம்பெற்றுள்ளது. கேரளத்தில் கோயில் இருக்கு மிடம் 'அம்பலம்' என்றே இன்றும் வழங்கப்படுகிறது. கேரளத்தில் கோயிலில் கூத்து நடைபெறும் இடத்தைக் கூத்தம்பலம் என்றும், கூத்துமாடம் என்றும் அழைக்கிறார்கள்.

**சபை**

பதிமூன்றாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு திருப்பம் தோன்றியது. அப்பொழுது வடமொழிவாணர் களின் ஆதிக்கம் தலையெடுத்தது. எனவே, தமிழ் இலக்கியத்தில் பெரும்பாலான வடமொழிச் சொற்கள் புகுந்தன. தமிழ்ச் சொற்கள் வடசொற்களாக மாற்றம் பெற்றவை முதல்இயலிலே விளக்கப்பட்டன.

பிறமொழிச் சொற்கள் தமிழில் வழங்கும்போது, அதற் கேற்ப மாற்றம் பெறும் என்பதைத் தொல்காப்பியரே தெரிவித் துள்ளார்.[20] எனவே, வடமொழியில் உள்ள சபா என்ற சொல், தமிழ்மொழிக்கேற்ப 'சபை' என்று வழங்கப்படுகிறது.

இச்சொல்லை முதன்முதலில் தம்முடைய தில்லைக் கலம்பகத்தில், 'பேர்கொண்ட கனகசபைப் பெரும்பற்றப் புலியூரோய்' என்று இரட்டைப் புலவர்கள் பயன்படுத்து கின்றனர்.[21] இந்நூலுக்கு அடுத்து, 'கனகசபை மேவும் எனது குருநாத' என்று திருப்புகழில் அருணகிரிநாதர் குறிப்பிடு கிறார்[22]. மேற்கண்ட நூல்களில் 'கனகசபை' என்பது பொன் னால் வேயப்பட்ட சபை என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. சங்க காலத்திலேயே 'சபா' எனும் வடமொழிச் சொல் திரிந்து

'அவை' என்று தமிழ்ச் சொல்லாக்கம் பெற்றதாகக் கொள்ள லாம்.

### ஐந்தின் சிறப்பு

பழந்தமிழர்களிடம் ஐந்து என்ற தொகை எண் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. இதனை ஐங்குழு, ஐந்தவத்தை, ஐந்திணை, ஐந்திலக்கணம், ஐந்தெழுத்து, ஐந்தொழில், ஐம்படை, ஐம்பால், ஐம்புலன், ஐம்பூதம், ஐவகை மன்றம் என்ற சொல்லாட்சிகள் உணர்த்துகின்றன. இவற்றின் சிறப்பை உணர்ந்த வடமொழிவாணர்கள் ஐந்து என்பதற்குத் தம் மொழியில் உள்ள 'பஞ்ச' என்ற சொல்லைப் பயன்படுத்தத் தொடங்கினர்.

### இறைவனின் ஐவகை மன்றங்கள் (அ) பஞ்சசபை

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கச்சியப்ப சிவாச்சாரியர் தான் முதன்முதலில் தம்முடைய கந்தபுராணத்தில், 'ஐவகை மன்று தொறாடிய வள்ளல்' என்று குறிப்பிட்டுள்ளார்[23]. இந்த ஐவகை மன்றுகளையும் குறிப்பிட்டு முதன் முதலில் இரட்டைப்புலவர் (கி.பி. 14-ம்நூ.) பாடியுள்ளனர். இதனை, 'குடதிசை யதனில் மருவு குற்றாலம்' என்ற பாடல் புலப்படுத்துகிறது.[24] திருக்குற்றாலநாதருலாவும், 'நம் புலியூர், கூடல் ஆலங்காடு குற்றாலம் நெல்வேலி, ஆடலார் மன்றம் அவை ஐந்தும்'[25] என்று ஐவகை மன்றங்களைச் சுட்டுகிறது. இறைவன் ஆடல் புரிவதற்கு அமைக்கப்பட்டவைதான் இத்தலங்கள் ஐந்தும், எனவே, இதனடிப்படையில் தான் ஐவகை மன்றங்கள் என்ற பெயர் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

இந்த ஐவகை மன்றங்களிலும் இறைவன் ஆடியதற்கு ஒரு காரணம் கூறப்படுகிறது. ஸ்ரீநடராஜப் பெருமான் திருவாலங்காட்டில் திருக்கூத்து ஆடியாடி இளைப்புற்றான். இதனைத் தாங்க முடியாமல் சற்று குளிர்ந்த இடத்திற்குச் செல்லலாம் என்றெண்ணிச் சிதம்பரத்தை அடைந்தான். அங்கும் ஆடினான். அங்கும் மேலும் வெப்பமாயிற்று. இளைப்பும் அதிகரித்தது. இன்னும் கொஞ்சம் தெற்கு நோக்கிச் சென்றால் தென்றல் காற்று வருமென்று நினைத்து மதுரையை அடைந்தான். அங்கும் ஆடினான். அங்கும் குளிர்ச்சி ஏற்படவில்லை. தன் களைப்பும் நீங்கவில்லை. மேலும், தெற்கு நோக்கிச் செல்ல எண்ணித் திருநெல்வேலிக்குச் சென்று அங்கு ஆடினான். ஆயினும் வெப்பம்

தணியாததால் இன்னும் சற்றுத் தெற்கு செல்லலாம் என்று நினைத்துக் கடைசியாகத் திருக்குற்றாலம் போய்ச் சேர்ந்தான். அங்கு ஆடியதும் உடம்பு இளைப்பும் தீர்ந்து, குளிர்ச்சியும் ஏற் பட்டுச் சுகமாக இருந்தான். எனவே, அப்பெருமான் அங்கேயே நிலையாகத் தங்கிவிட்டான் என்று கயப்பாக்கம் சோமசுந்தரம் குறிப்பிடுகிறார்.[26]

இந்த ஐவகை மன்றங்களைப் பற்றிய குறிப்பு பெரிய புராணத்தில் இடம் பெறவில்லை. சேக்கிழார் அமைச்சராக விளங்கிய காரணத்தால், பல இடங்களுக்கு நேரில் சென்று, செவிவழிச் செய்திகளை அறிந்து, தம் இலக்கியத்தில் பயன்படுத் தியுள்ளார். ஐவகை மன்றங்களைப் பற்றிய குறிப்புக்காணப் படாததால், அக்கருத்து அவர் காலத்தில் தோற்றம் பெற்றிருக்காது.

பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த இரட்டைப்புலவர் முதன்முதலில் ஐவகை மன்றங்களைக் குறிப்பதால், இவற்றைப் பற்றிய எண்ணம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கும், கி.பி. பதினான்காம் நூற்றாண்டிற்கும் இடையே தோற்றம் பெற்றிருக்க வேண்டும். இனி,ஐவகை மன்றங்கள் விளக்கப்படு கின்றன.

**மணி மன்றம் (இரத்தின சபை)**

இம்மன்றம் வடார்க்காடு அம்பேத்கார் மாவட்டத்தைச் சார்ந்த அரக்கோணம் வட்டத்தில் உள்ள திருவாலங்காட்டில் வடாரண்யேசுவர சுவாமி திருக்கோயிலில் அமைந்துள்ளது. வட ஆரண்யம் என்பதற்கு ஆலங்காடு என்று பொருள். எனவே, இத்தலம் ‘வட ஆரண்யம்’ என வடமொழியிலும், ‘ஆலங்காடு’ எனப் பழகு தமிழிலும் அழைக்கப் பெறுகிறது.

இங்கு ஆடல்வல்லான் தன்னுடைய இடது திருவடியை அண்டமுற உயர்த்தி ஆடும் அற்புதக் காட்சி வேறு எங்கும் காண இயலாத வியத்தகு காட்சியாகும். இதனைக் கண்டு களித்த காரைக்காலம்மையார். ‘வீசியெடுத்த பாதம் அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன் இடம் திருவாலங்காடே’ என்று போற்றுகிறார்[27]. இச்செய்தியைத் திருவாலங்காட்டுக் கல்வெட்டும், ‘அண்டமுற நிமிர்ந்தருளின நாயனார்’ என்று குறிப்பிடுகிறது.[28]

**ஊர்த்துவத் தாண்டவம்**

காளியுடன் ஆடினபடியால் காளி தாண்டவம் என்றும், மிக வேகமாகச் சுழன்று ஆடுவதாகையால் சண்ட தாண்டவம் என்றும், ஒரு காலைத் தலைவரையில் மேலே தூக்கி ஆடுவ தாகையால் ஊர்த்துவத் தாண்டவம் என்றும், வீடுபேற்றினைத் தருவதாகிய அனுக்கிரகத்தின் பொருட்டுச் செய்வதாகையால் அருள் நட்டம் அல்லது அனுக்கிரக தாண்டவம் என்றும் இதற்கு வேறு பெயர்கள் உள்ளன என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி[29].

வைகானச ஆகமத் திரிவிக்கிரமர் இலக்கணப்படி திருவாலங் காட்டு நடராசரின் இடக்கால் பக்கவாட்டில் நீட்டப்பட்டு விண்ணோக்கி உயர்த்தப்பட்டுள்ளது என்கிறார் கலைக் கோவன்[30]. வைணவர்களுக்குரிய ஆகமம் வைகானச ஆகமம். சைவர்களுக்குரியது சிவாகமம். எனவே, வைகானச ஆகமப்படி திருவாலங்காட்டு நடராசரை விஷ்ணுக்கிராந்தம் என்று கலைக் கோவன் கூறுவது பொருந்தாது.

காளிக்கும் இறைவனுக்கும் நேர்ந்த ஆடற்போட்டியில் காதில் இருந்து விழுந்த குழையை, ஆட்டத்தை நிறுத்தாது எடுத்துக் காதில் அணிய, இறைவன் காலை உயர்த்த அதுவே, ஊர்த்துவத் தாண்டவமாகியது. 'ககன முகடு நோக்கி/மேலதாக இடத்தாளையெடுத்து வலத்தாள் ஊன்றி விளைக்கும் நட்டம்' என்று திருவாலங்காட்டுப் புராணம் கூறுவதும் இங்கே கருதத் தக்கது.[31] ஊர்த்துவம் என்பது மேல்நோக்கித் தூக்கப்பட்டுள்ள காலைக் குறிக்கும். ஊர்த்துவம் வேறு; லலாடதிலகம் வேறு.

தில்லைக் காளிக்கும் நடராசருக்கும் போட்டி நடனம் நடந்து, அதில் காளி காலைத் தூக்க முடியாமலோ, பெண்மைப் பண்பிற்காக நாணிக் காலைத் தூக்காமலோ தோல்வி அடைந் தாள். ஊர்த்துவத் தாண்டவத்தைச் சிவபெருமான் ஆடியதற்கு இக்கதையைக் காரணமாகக் காட்டும் வழக்கம் 14-ம் நூற்றாண் டிற்குப் பின்தான் உருவாகி இருக்க வேண்டும் என்கிறார் பத்மா சுப்பிரமணியம்.[32] ஆனால், திருமூலர், 'காளியோடாடிக் கனகாசலத் தாடி' என்று தம் பாடலில் பாடியுள்ளார்.[33] 'ஆடினார் காளி காண ஆலங்காட்டடிகளாரே'[34] என்கிறார் அப்பர் பெருமான். இதன் மூலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பே காளிக்கும் இறைவனுக்கும் போட்டி நடந்ததாகக் கூறும் கதை தோன்றியிருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

> ''தில்லைவன முடையாளாகிய காளி, அவுணரை அழித்த பின்பும் கோபம் தணியாது மன்னுயிர்களை அழிக்கத் தொடங்கவே தில்லைச் சிற்றம்பலப் பெருமான் ஊர்த்துவத் தாண்டவம் செய்து காளியின் சினத்தை அடக்கி, நீ தில்லையின் வட எல்லையிலே அமர்ந்திருப்பாயாக, என ஆணை தந்தனர் எனவும், ஆடலில் தோற்று நாணிய தில்லைவனமுடையாளாகிய காளி தில்லையின் வடவெல்லையிலே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளாள் எனவும், தில்லைக் காளியைக் குறித்தும் புராண வரலாறு ஒன்று வழங்கி வருகிறது''.

என்கிறார் க. வெள்ளைவாரணனார்.[35] இக்கதையானது புராணப்படி திருவாலங்காட்டுக்கு உரியது. ஆனால், பிற் காலத்தில் வந்தவர்கள் தில்லைக்குச் சிறப்புக் கொடுத்த காரணத்தால், அக்கதையைத் தில்லைக்குச் சேர்த்துக் கூறினர். இதே கருத்தினை, அ. ச. ஞானசம்பந்தன் பின்வருமாறு கூறு கிறார்.

> ''முதலாவது தில்லை நடனம் அமைதியைத் தருவது. ஆலங்காட்டு நடனம் கொடுமையான தாண்டவ மாகும். ஓயாத ஒழியாத போர்களில் ஈடுபட்டு அமைதியை இழந்து தவிக்கும் சோழர்கட்கும், தமிழ் மக்கட்கும் வேண்டப்படுவது அமைதியேயாகலின் ஆலங்காட்டைப் பெரிதுபடுத்தாமல், சேக்கிழார் தில்லையைப் பெரிதுபடுத்திப் பாடியிருத்தல் வேண்டும். ........மேலும் அவர் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த சோழ மன்னர்கள் அனைவரும் தில்லையிலே பெரிதும் ஈடுபாடு கொண்டு பலமுறை அக்கோயிலைப் பொன் வேய்ந்தமையின் காப்பியப் புலவரும் அக்கோயிலில் ஈடுபட்டுப் பாடியிருத்தல் வேண்டும் என்றும் நினைக்கத் தோன்றுகிறது''.[36]

அவர் கூறியதற்கேற்பவே திருவாலங்காட்டுக்குரிய புராணக் கதைக்கேற்ப சிற்பங்களைத் தில்லைக் கோயிலில் அமைத்து விட்டனர். அதாவது, தில்லைப் பொன்னம்பலத்தில் தென்புறத் திலமைந்த நிருத்த சபையில் காளி காண ஆடிய ஊர்த்துவத் தாண்டவ மூர்த்தியின் சந்நிதி அமைந்துள்ளமையாகும். இச்சிற் பங்களுக்குரிய கதையானது திருவாலங்காட்டுக்குரியதாகும்.

முஞ்சிகேச முனிவருக்காகவும் கார்க்கோடனுக்கா இறைவன் திருவாலங்காட்டில் ஆடலைப் புரிந்தான் ெ திருவாலங்காட்டுப் புராணம் தெரிவிக்கிறது.[37]

**அமைப்பு**

திருவாலங்காட்டு ஊர்த்துவத் தாண்டவத் திருமேனி பிரபையில் முப்பத்து மூன்று தீப்பிழம்புகள் காணப்படுகின், பிரபையானது வட்ட வடிவில் அமைந்துள்ளது. சடைகள் ஏழாக இருபக்கமும் பரவியுள்ளன. எட்டுக் கைகள் உள்ெ வலக்கைகளில் துடி, ஈட்டி காணப்படுகின்றன. ஒரு கை ஃ மாகவும், மற்றொன்று பக்கவாட்டில் நீட்டியும் (ரேசிதமா உள்ளன. இடக்கைகளில் தீ, பாம்பு உள்ளன. ஒன்று ே முத்திரையாகவும், மற்றொன்று பக்கவாட்டில் நீட்டி உள்ளன. வலக்கால் முயலகன்மீது ஊன்றிய நிலையில் உள்ெ அவனின் முகத்தில் துன்பக்குறி தெரிகிறது. இடக்கால் ப வாட்டில் நீட்டப்பட்டு, விண்ணோக்கி உயர்த்தப்பட்டுள்ளது.

**பெயர்க் காரணம்**

இரத்தினசபைதான் பஞ்சசபைகளில் முதன்மையா கருதப்படுகிறது. இருப்பினும், இதற்கு இப்பெயர் ஏற்பட காரணம்தான் புலப்படவில்லை. மேலும், இச்சபையின் ே கூரை செப்பினால் வேயப்பட்டுள்ளது. அந்நிலையில் இரத்தி சபை என்ற பெயர் எப்படிப் பொருந்தும்? என்ற எண்ண எழுவது இயற்கை.

மழை, வெய்யில் போன்ற இயற்கைப் பாதிப்புகளுக் ஆட்படாமல் இருக்க, செம்பினைக் கூரையாக வேயும் முன தோன்றியிருக்கக்கூடும். மரம், செங்கல் போன்ற பொருள்களா அமைக்கப்பட்ட கூரை எளிதில் அழியக்கூடியது; மாற்ற பெறக் கூடியது. எனவே, செம்பினால் கூரை வேய்ந்திருக் வேண்டும்.

இரத்தினசபை என்ற பெயர் எப்படி ஏற்பட்டது? என்பதை அக்கோயிலின் சிவாசாரியார் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> ''இச்சபையின் ஓர் அறையில் ஏராளமாக இரத்தினக் கற்கள் இருந்தன. அதன் அருகில் இரகசிய ஒன்று இருக்கிறது. அதனுள் இரத்தினத்தால் செய்ய பட்ட நடராசர் சிலை உள்ளது என்று பரம்பரை

பரம்பரையாகக் கூறிவருகின்றனர். மேலும், கி.பி. 1926-ஆம் ஆண்டு குடமுழுக்குத் திருப்பணியின்போது, திருப்பணிக் குழுவினரின் ஆணையின் பேரில் ஐவர் அந்த இரகசிய அறையை இடித்தனர். அப்பொழுது அந்த அறையை இடித்த ஐவரும் உயிரிழந்தனர். இடிக்கும் பொழுது, அவ்வறையில் இருந்து தோன்றிய ஒளி, அங்கிருந்த அனைவரையும் மயக்கமுறச் செய்தது. எனவே, திருப்பணிக் குழுவினர் இச்சபையின் பின் பகுதியைச் சற்று விரிவுப்படுத்திக் கட்டி, குடமுழுக்கு விழாவினை நடத்தினர்''[38]

என்று அவர் கூறினார்.

**இரத்தினம் ஒரு கல்லா?**

நவமணிகளையும் இணைத்துக் கூறும்பொழுது நாம் நவரத்தினம் என்று கூறுகிறோம். அப்பொழுது இரத்தினம் என்பது எது? என்ற எண்ணம் எழுகிறது. பெரும்பாலோர் இரத்தினம் என்பது மாணிக்கத்தைத்தான் குறிக்கும் என்கின் றனர். இருப்பினும், இரத்தினத்தால் செய்யப்பட்ட நடராசர் சபையில் இடம் பெற்றிருந்ததாலும். நவமணிகளால் சபை அலங்கரிக்கப்பட்டு இருந்ததாலும் இரத்தினசபை என்ற பெயர் தோன்றியிருக்க வேண்டும்.

**பொன் மன்றம்** *(கனகசபை)*

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள சிதம்பரத்தில் நடராசப் பெருமான் திருக்கோயிலில் இச்சபை இடம் பெற் றுள்ளது. இதன் பழைய பெயர் பொன்னம்பலம் என்பது. இத்தலம், தில்லை, புலியூர், பெரும்பற்றப்புலியூர் என இலக்கியங் களிலும், கல்வெட்டுகளிலும் குறிக்கப்படுகிறது.

சிற்றம்பலம் என்ற பெயரும் பொன்னம்பலத்திற்கு உண்டு. சிற்றம்பலம் என்பது சிறிய அம்பலம் என்று பொருள்படும். இந்தச் சிற்றம்பலமே திரிந்து சிதம்பரமாகி இருக்க வேண்டும். சிதம்பரம் என்பது வடசொல். இதற்குச் சித்தாகிய அம்பலத் தில் அறிவு ஒளியாக இருக்கின்ற இறைவன் என்று பொருள். ஆற்றுக்கால்-ஆத்துக்கால், ஆற்றோரம்-ஆத்தோரம் என்றானது போலச் சிற்றம்பலம் சித்தம்பலமாகி பின், சிதம்பரம் என்றாகி இருக்கிறது.

சிதம்பரம் என்ற சொல் முதன் முதலில் திருமந்திரத்தில், 'எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்' என்று திருமூலரால் வழங்கப்பட்டுள்ளது.[39] அவருக்குப்பின் இரட்டைப் புலவர் தில்லைக்கலம்பகத்தில் சிதம்பரம் என்ற சொல்லைப் பயன் படுத்தியுள்ளனர். இதனை, 'வஞ்ச மனத்தைச் சிதம்பரத்து ஆக்கிய வல்லமையை' என்ற அடி சுட்டுகிறது.[40]

இங்கு நடராசப்பெருமான் எல்லா உயிர்களும் உய்ய ஆனந்த தாண்டவம் புரிகிறார். இதனைக் கண்டுகளித்த அடியார்களின் உள்ள நிலையே பல்வேறு பாடல்களாக வெளி வந்துள்ளன. கூத்தப்பெருமான் வீற்றிருக்கும் சிற்சபைக்கும் அதைச் சுற்றியுள்ள பகுதிக்கும் தத்துவ விளக்கம் கூறப் பட்டுள்ளது. அதனை, 'ஆறு சாத்திரம் நாலு வேதம்' என்ற சிவகாமியம்மைப் பிள்ளைத் தமிழ்ப் பாடல் புலப்படுத்தி இருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.[41]

இக்கோயிலில் இறைவன் ஆடல்புரியும் இடம் சிற்சபை எனப்படும். அதற்கு முன்னுள்ள எதிரம்பலம் கனகசபை எனப்படும். கொடிமரத்தின் தெற்கேயுள்ள ஊர்த்துவத் தாண்டவ மூர்த்தியின் சந்நிதி நிருத்தசபை என வழங்கப்படும். உற்சவத் திருமேனிகள் எழுந்தருளியுள்ள சந்நிதி தேவசபை எனப்படும். ஆயிரக்கால் மண்டபம் இராசசபை எனப்படும். இவ்வைந்து சபைகளும், இக்கோயிலிலுள்ள ஐவகை மன்றங் களாகும். இம் மன்றங்களே பிற்காலத்தில் ஐந்து கோயில் களுக்குரியதாக மாற்றம் பெற்றது என்று கூறுதல் பொருந்தாது. பிற இடங்களில் உள்ள மன்றங்களைப் பார்த்து, பிற்காலத்தில் இக் கோயிலிலே அவை மாதிரிகளாக (Model) அமைக்கப் பட்டுள்ளன.

**கோயிலின் தோற்றம்**

திருமூலர் காலத்தில்தான் சிதம்பரம் கோயில் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். ஏனெனில், இவருக்கு முன் வாழ்ந்த காரைக்காலம்மையார் பாடல்களில் சிதம்பரம் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. மேலும், இறைவனே, காரைக்காலம்மை யாரிடம், 'நான் ஆலங்காட்டில் ஆடும் நடனத்தைக் கண்டு ஆனந்தம் கொண்டு எப்பொழுதும் எம்மை பாடுவாய்' என்கிறார்.[42]

நம்முடைய ஆனந்த தாண்டவம் காணவேண்டி வியாக்கிர பாதன் என்னும் பெயரை உடைய பெரிய முனியும் தில்லை

வனத்திலே இருக்கின்றான்; அந்த முனியும் நீயுமாகக் கூடி, நம்முடைய தாண்டவத்தைக் காணக் கடவீர் என இறைவன் பதஞ்சலிக்குக் கூறியதாகக் கோயிற்புராணம் குறிப்பிடுகிறது.[43] எனவே, காரைக்காலம்மையார் காலத்திற்குப் பின்தான் தில்லைக்கோயில் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

தேவர்கள் ஆடற்பெருமானின் ஆடலைக் கண்டு வணங்கி, அம்பலத்தை அமைத்து, அதனைப் பொன்னால் வேய்ந்தார்கள் என்று கோயிற்புராணம் கூறுகிறது.[44] இதற்கு ஆதாரமாக, 'முழுதும் வானுலகத்துள தேவர்கள்' என்ற திருநாவுக்கரசர் தேவாரம் திகழ்கிறது.[45]

சிலப்பதிகாரக் காலத்தில் பொன்னம்பலம் இருந்த காரணத்தினால்தான், அதனை வேறுபடுத்திக் காட்ட வெள்ளியம்பலம் என்று இளங்கோவடிகள் குறித்திருப்பதாக அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.[46] அவருக்கு அடுத்து திருமூலர், 'அடியார் பொன்னம்பலத்து ஆடல் கண்டாரோ' என்று பொன்னம்பலத்தைக் குறிக்கின்றார்.[47] இங்குப் பொன்னம்பலம் என்பது கனகசபையைக் குறிக்கிறது. பொன்னம்பலம், வெள்ளியம்பலம் என்ற வழக்காறு இருப்பினும், ஐவகை மன்றங்கள் பற்றிய எண்ணம் பிற்காலத்தில்தான் தோன்றியது.

கோயிற்புராணம் பதிமூன்றாம் நூற்றாண்டில் எழுதப் பட்டது. இருப்பினும், அது முற்காலச் செய்திகளை விளக்கு கிறது. மேலும், அப்புராணம் இரணியவர்மன் அம்பலத்தினைப் பொன்னால் வேய்ந்தான் என்று கூறுகிறது.[48] புராணங்களைக் கொண்டு பொன்னம்பலம் தோன்றிய காலத்தை வரையறுத்துக் கூற இயலவில்லை. ஏனெனில், புராணங்கள் கற்பனை கலந்தவை.

இரணியவர்மன் என்னும் இரண்டாம் சிம்மவர்மன் (கி.பி. 550-565) தன்னுடைய தென்னாட்டுப் படையெடுப்பின்போது தில்லைக் காட்டிற்கு வந்தான். அங்கிருந்த வியாக்கிரபாதர், பதஞ்சலி என்ற முனிவர்களைச் சந்தித்து, தன்னுடைய 'சரும நோய்' நீங்க வழி கேட்டான். அவர்கள் அவ்வூரின் நடுவில் உள்ள குளத்தில் குளித்துவிட்டு வரும்படிக் கூறினர்.

அவன் பக்திச் சிரத்தையோடு குளத்தில் மூழ்கி நீராடினான். குளத்திலிருந்து வெளியேறும் போது, அவனுடைய மேனி பொன்னிறம் பெற்றதோடு, வெகுநாட்களாக வருத்திக் கொண்

டிருந்த சருமநோயும் நீங்கியது. அதுமுதல் அவன் இரணிய வர்மன் (பொன்னிறமேனி உடையவன்) என அழைக்கப் பட்டான் என்று கோயிற்புராணம் கூறுகிறது.[49]

அதுமுதல், அவன் ஆடல்வல்லானிடத்து இடையறா அன்பு பூண்டு, அரும்பணிகளை ஆற்றத் தொடங்கினான்; முதலில், காடுகளை அழித்து, தில்லை நகரை உருவாக்கினான். பின்னர், காடுகளுக்கு இடையே இருந்த நடராசரின் சிறு கோயிலை விரிவுபடுத்தி, சிற்றம்பலம் எனப் போற்றப்படும் மன்றத்தை அமைத்தான்.[50] இதன் மூலம், ஆறாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இக்கோயில் வளர்ச்சிப் பெற்றதை அறிய முடிகிறது.

பாணினி முனிவர் செய்த வியாகரணத்திற்கு மாபாடியம் என்ற பேருரையினை இயற்றிய பதஞ்சலி முனிவர் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் இருந்தவரென்பது வரலாற்றா ராய்ச்சியாளர் துணிபாகும். எனவே, அப்பதஞ்சலி முனிவரால் வழிபடப்பெற்ற தில்லைச் சிற்றம்பலமாகிய திருக்கோயிலும் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே சிறப்புற்று விளங்கிய தொன்மை வாய்ந்ததென்பது நன்கு துணியப்படும் என்று க. வெள்ளைவாரணன் குறிப்பிடுகிறார்.[51] பதஞ்சலி என்ற பெயரில் பலர் இருந்த காரணத்தால், இங்குக் குறிக்கப்படும் பதஞ்சலி முற்காலத்தவரா? பிற்காலத்தவரா? என்ற ஆராய்ச்சி தீர்ந்தபாடில்லை. மேலும், அப்பதஞ்சலி காலத்தில் கோயில் இருந்ததற்குரிய இலக்கியச் சான்றோ, கல்வெட்டுச் சான்றோ இல்லை. எனவே, சிதம்பரம் கோயில் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்தான் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

**வெள்ளி மன்றம்** *(இரஜித சபை)*

மதுரை மாவட்டத்தில் மீனாட்சி அம்மன் திருக்கோயிலில் இச்சபை இடம் பெற்றுள்ளது. இரஜிதம் என்ற வடமொழிச் சொல்லிற்கு 'வெள்ளி' என்று பொருள். இது தமிழில் வெள்ளியம்பலம் என்று அழைக்கப்படுகிறது.

இங்குக் கூத்தப்பெருமான் பத்துக் கைகளுடன் ஆடல் புரிகின்றான். இறைவன் முதலில் வலத்தாள் ஊன்றி ஆடிய தாகவும், பின் இராசசேகர பாண்டியன் வேண்டுகோளுக்கு இணங்கி, இடத்தாள் ஊன்றி ஆடியதாகவும் திருவிளையாடற் புராணம் தெரிவிக்கிறது.[52] இக்கருத்து ஏற்றுக்கொள்ளக்கூடிய தாக இல்லை.

இறைவன் கால் மாறி ஆடியதற்குப் பாஸ்கரத் தொண்டைமான் ஒரு காரணம் கற்பிக்கிறார்.

> ''வலக்காலை ஊன்றி நின்றபோது சக்தி உதவ வில்லை. ஆதலினால், மலங்கள் அடங்க ஐயனும் அழுத்தமாக ஊன்ற முடியவில்லை. அதனால் மறைத் தல் தொழில் பூரணத்துவம் பெறவில்லை. அத் தொழில் சரிவர நடக்க, சக்தியின் துணை வேண்டி யிருந்திருக்கிறது இறைவனுக்கு. இடப்பாகத்தில் உள்ள சக்தியை நாடியிருக்கிறார். இதனால் கால் மாறி ஆடி, மறைத்தல் தொழிலை கொஞ்சம் அழுத்தமாகவே செய்யத் தம் இடக்காலையே ஊன்றியிருக்கிறார். இவ்வளவுதான் இரகசியம்''[53]

என்கிறார் அவர். தத்துவ அடிப்படையில் அவருடைய காரணம் பொருத்தமாகத் தோன்றுகிறது.

மதுரையில் இறைவன் ஆடும்ஆடலை, 'அதிரவீசி ஆடுவான்' என நம்பி திருவிளையாடல் கூறுகிறது.[54] திருஞானசம்பந்தரும், 'அதிரவீசி ஆடுவாய்' என்று தம் பாடலில் குறிப்பிடுகிறார்.[55] எனவே, மதுரையில் இறைவன் ஆடும் ஆடல் மற்ற ஆடல்களி லிருந்து வேறுபட்டது என்பதை 'அதிரவீசி ஆடுவார்' என்ற தொடர் புலப்படுத்துகிறது.

இக் கோயிலில் முதற் பிரகாரத்தில் கனகசபை, இரத்தின சபை, வெள்ளியம்பலத்தில் இரஜிதசபை உள்ளன. நூற்றுகால் மண்டபத்தில் தேவசபையும், ஆயிரக்கால் மண்டபத்தில் சித்திர சபையும் உள்ளன. இவை, இக்கோயிலிலுள்ள ஐவகை மன்றங் களாகும்.

### தோற்றம்

மதுரைக் கோயிலில் உள்ள வெள்ளியம்பலம் புறநானூற்றில் குறிக்கப்பட்டுள்ளது. அச் சபையில் இறந்த காரணம் பற்றிப் பாண்டியன் ஒருவன், 'வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி' எனப் பெயர் பெற்றான்.[56] வெள்ளியம்பலம் இருந்த தெருவில் வாழ்ந்தவராதல் பற்றி, 'வெள்ளி வீதியார்' என்று ஒரு பெண்பாற் புலவர் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்று நற்றிணைப் பதிப்பாசிரியர் கூறுவதும் இங்கே கருதத்தக்கது.[57]

சிலப்பதிகாரப் பதிகத்தில் சாத்தனார் வெள்ளியம்பலத்தில் தூங்கியதாகக் குறிப்பு இடம்பெற்றுள்ளது. இதனை, 'அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க், கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில், வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தேன்' என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.[58] 'வெள்ளியம்பலத்துட் டுள்ளிய பெருமான்'[59] எனவும், 'இருந்தமிழ்க் கூடற் பெருந்தவர் காண, வெள்ளியம்பலத்துட் டுள்ளிய ஞான்று'[60] எனவும் கல்லாடம் (கி.பி. 10-ம் நூ.) வெள்ளியம்பலத்தைக் குறிக்கின்றது.

பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் நாள்தோறும் பொன்னம்பலக் கூத்தனின் ஆடலைக் கண்டபின் உணவு உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். மதுரையில் இறைவனின் திருமணத்தைக் கண்ட அவர்கள் தங்கள் வழக்கத்தைக் கூற, அவர்களுக்காக இறைவன் ஆடல்புரிந்தான் என்று திருவிளையாடற் புராணம் கூறுகிறது. இதனை, 'முனிவரரிருவர் தேற, அலகிலானந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றாம்' என்ற பாடல் அடிகள் சுட்டுகின்றன.[61]

புராணக் கருத்தைக் கொண்டு, இக்காலத்தில் இறைவனின் ஆடல் இங்குத் தொடங்கப்பெற்றது என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறமுடியாது. மேலும், தேவாரப் பாடல்களில் வெள்ளியம்பலத்தைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை.

**கால்மாறியாடும் நடராசர்**

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் சுவாமி சந்நிதியின் முன்பு இடப்பக்கத்தில் வெள்ளியம்பலம் உள்ளது. அவ்வம்பலத்தில் கால்மாறியாடும் நடராசர் கற்சிலையாகக் காட்சியளிக்கிறார். அதன்மேல் சந்தனாதி தைலம் அல்லது சாம்பிராணி தைலம்தான் பூசப்படுகிறது. அதன்மேல் வெள்ளிக் கவசங்கள் போடப்பட்டுள்ளன.

வருடந்தோறும் வரும் ஆறு அபிடேக நாட்களில் இந்நடராசருக்குத் தைலங்கள்தான் பூசப்படுகின்றன. நீர் கலந்த எந்தப் பொருளும் அபிடேகத்தில் பயன்படுத்தப் பெறுவதில்லை. இந்நடராசருக்குப் பத்துக் கைகள் உள்ளன. வலக்கைகளில் அபயக்கரத்தில் சூலமும், மற்றக்கைகளில் உடுக்கை, அங்குசம், பாசம், கதாயுதம் ஆகியனவும் இடம்பெற்றுள்ளன. இடக்கை

களில் ஒன்று வேழ முத்திரையில் உள்ளது. மற்றக் கைகளில் நெருப்பு, வில், கேடயம், தண்டகம் ஆகியன உள்ளன. காலடியில் உள்ள முயலகன் இடப்புறம் தலை வைத்துப்படுத்துள்ளான் வழக்கமான ஆனந்த தாண்டவத்தில் வலப்பக்கம் தலை வைத்து படுத்திருப்பான். இந்நடராசருக்கு வலப்பக்கத்தில் கால்மாறியாடிய நடராசர் திருமேனியும் வைக்கப்பட்டுள்ளது.

இந்நடராசரைக் கால்மாறியாடிய ஆனந்த தாண்டவர் என்று அழைக்க முடியாது. ஏனெனில், ஆனந்த தாண்டவர் நான்கு கைகளுடன் திகழ வேண்டும் என்று இரண்டாவது இயலிலே கூறப்பட்டது.

**செப்பு மன்றம்** *(தாமிர சபை)*

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தின் தலைநகரான திருநெல்வேலியில் உள்ள நெல்லையப்பர் கோயிலில் இச்சபை இடம்பெற்றுள்ளது. இச்சபையின் மேற்கூரை தாமிரத்தினால் வேயப்பட்டுள்ளது. தாமிரம் என்பதற்குச் 'செம்பு' என்று பெயர். செம்பினால் வேயப்பட்டுள்ளதால் 'தாமிர சபை' என்ற பெயர் வழங்கி வருகிறது. 'செம்பு' என்பது 'செப்பு' என வலித்தும் வழங்கப்படுகிறது.

**பெயர்க்காரணம்**

திருநெல்வேலிப் புராணத்தில் வரும் ஒரு பாடல் தாமிர பரணியைப் பற்றிக் கூறுகிறது. 'ஆதியில் விளையும் ரத்நம்' என்ற பாடலின் மூலம் பொருநை நதியில் தாம்பிரம் கிடைத்ததை அறியலாம் என்கிறார் எஸ். வையாபுரிப்பிள்ளை.[62] எனவே, தாமிரவருணி என்பது தாமிரபரணி என்று பேச்சு வழக்கில் மாறியிருக்கவேண்டும். தாமிரம் மிகுதியாகக் கிடைத்த காரணத்தால், தாமிரத்தைக் கொண்டு மேற்கூரை வேயப்பட்டது.

தாமிரபரணி என்பதற்கு சுந்தரராசன் பின்வரும் காரணத்தைக் கற்பிக்கிறார்:

> ''சம்ஸ்கிருத மொழியில் தாம்ரா என்கிற சொல்லுக்குச் செம்பு என்றோ சிவப்பு என்றோ பொருள் உண்டு. தாம்பிரபரணி என்கிற சொல்லின் பிற்பாதியாகிய பரணி என்கிற சொல்லுக்கு ஓர் இலை அல்லது ஒரு மரம் என்றே பொருள் கூறப்பட்டு விவாதிக்கப்பட்டி

ருக்கிறது. இனி ஆற்றின் பெயர் தாமிரவருணி என்று கொள்ளப்பட்டால் வருணி என்ற சொல் சம்ஸ்கிருதத்தில் உள்ள வர்ணா என்கிற சொல்லின் திரிவு என்று விவாதிக்கப்பட்டிருக்கிறது''[63]

மேலும், தாமிரச்சத்து நிறைந்த தாமிரப் பொருநையே, பின்பு தாமிரபரணியாகத் திரிந்து இருக்கலாம் என்று கணபதிராமன் கருதுகிறார்.[64]

**அமைப்பு**

இச்சபையில் இடம்பெற்றிருக்கும் ஆடல்வல்லான் 'சந்தன நடராசர்' என்று அழைக்கப்படுகிறார். இந்நடராசரின் அமைப்பு இரண்டாம் இயலிலே விரிவாக விளக்கப்பட்டது. இதுவல்லாமல், நடராசப் பெருமானின் திருமேனியும் வேறொரு சந்நிதியில் அமைந்துள்ளது. இத்திருமேனியைப் பற்றியும் இரண்டாம் இயலிலே கூறப்பட்டது.

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்திலும், சிதம்பரனார் மாவட்டத்திலும் செப்பறை, கரிசூழ்ந்தமங்கலம், கட்டாரி மங்கலம், கருவேலங்குளம் ஆகிய ஊர்கள் உள்ளன. இவ்வூர்களோடு தில்லையைச் சேர்த்து, 'ஐவகை மன்றங்கள்' என்றும், 'பஞ்ச சபை' என்றும் அவ்வூரில் உள்ளோர் வழங்குகின்றனர். இவ்வைந்து கோயில்களிலும் உள்ள கூத்தப்பெருமானை ஒரே சிற்பி வடித்தான் என்ற கதையும் வழங்கப்படுகிறது. கட்டாரி மங்கலத்தில் உள்ள கூத்தரை வடித்தவுடன், அதனழகைக் கண்டு பொறாமை கொண்டோர், சிற்பியின் வலக்கை நுனியை வெட்டி விட்டனர் என்ற கதையும் உள்ளது. கருவேலங்குளம் திருக்கூத்தரை வடித்த சிற்பியின் ஒருகை ஊனம் பெற்றது. அக்கையில் ஓர் அகப்பையைக் கட்டிக் கொண்டு இத்திருக்கூத்தரை வடித்தான். திருக்கூத்தரின் அழகில் மயங்கிய சிற்பி, அத்திருமேனியின் கன்னத்தில் கிள்ள, அவ்வடையாளம் இன்றும் அப்படியே உள்ளது [65] இதனாலேயே, இன்று கூத்தப்பெருமானின் கன்னத்தில் ஒரு குழி காணப்படுகிறது.

**ஓவிய மன்றம் (சித்திரசபை)**

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தைச் சார்ந்த தென்காசிக்கு அருகில் உள்ள திருக்குற்றாலத்தில் இம்மன்றம் அமைந்துள்ளது. இங்கு ஆடல்வல்லான் ஓவிய உருவில் காட்சி

அளிக்கிறார். மற்ற இடங்களிலோ உருவ வடிவில் அவர் அருள் புரிகிறார்.

## தோற்றம்

சித்திரசபை என்ற பெயர் யாரால் எப்படித் தோற்று விக்கப்பட்டது? என்பதை 'ஆதியாம் பரையலது' என்ற திருக் குற்றாலத் தலபுராணப்பாடல் பறைசாற்றுகிறது.[66] இதன் மூலம் உமையம்மை காண ஆடிய கூத்தைக் கண்ட பிரமதேவன் சுவரில் எழுதி வைத்தான். வியாசர் முதலியோர் 'சித்திரசபை' என்று இதற்குப் பெயரிட்டு அழைத்தனர். இக்கருத்து மேலும் ஆய்விற்குரியது.

சித்திரசபைக்குப் பராக்கிரம பாண்டியன் செப்போடு வேய்ந்த செய்தியைத் திருக்குற்றாலக் குறவஞ்சி குறிப்பிடு கின்றது. இதனை, 'நன்னகர்க் குற்றாலம் தன்னில்' என்ற பாடல் புலப்படுத்துகிறது.[67] இச்செய்தியையே,

> ''கி.பி. 1660—1721 வரை இருந்த பெரியபட்டம் பெரியசாமி செம்புலி சின்னணைஞ்சாத் தேவரும் சின்னப்பட்டம் இராஜகோபாலத் தேவரும் சேர்ந்து காசி பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1531) செய்த சித்திரசபைக்குச் செப்போடு வேய்ந்தார்கள்''[68]

என வரும் குற்றாலநாதர் கோயில் வரலாறு உறுதிப்படுத்து கின்றது.

## அமைப்பு

அவ்வோவிய சபை குற்றாலநாதர் கோயிலின் வடப்பக்கத்தில் அமைந்துள்ளது. இச்சபையில் உள்ள சித்திரங்கள் அனைத்தும் கண்ணைக் கவரும் வகையில் வனப்புடன் வலிவும் பொலிவும் பெற்றுத் திகழ்கின்றன. நடராசர் ஓவியம் வெள்ளை நிறத்தில் அமைந்துள்ளது. அவர் புலித்தோல் அணிந்தவர் என்பதை மஞ்சள் நிற ஆடை உணர்த்துகிறது. சடைகள் பரந்து விரிந் துள்ளன. சடையில் வலப்பக்கம் பிறைச்சந்திரனும், இடப் பக்கம் கங்காதேவியும் காணப்படுகிறாள். வலக்கையில் உடுக்கையும், இடது உள்ளங்கையில் தீயும் உள்ளன. காலடியில் உள்ள முயலகன் படம் விரித்த பாம்பைப் பிடித்துள்ளான். அப்பாம்பின் அடிப்பகுதி முயலகனின் காலடியில் அமைந்துள்ளது. தலைப்பகுதி முயலகனைப் பார்த்தது போல் உள்ளது. முயலக

னின் உடலில் சிவப்புநிறத் துணி கட்டியதுபோல் வரையப்பட்டுள்ளது. கால்களில் சதங்கையும், கைகளில் கடகமு காணப்படுகின்றன. நடராசரின் வெளியே பிரபையானது தீ பிழம்புகளுடன் வரையப்பட்டுள்ளது. அருகில் சிவகாமி தே யும் தீட்டப்பட்டிருக்கிறாள். காலடியில் வலப்பக்கம் பத சலியும் இடப்பக்கம் வியாக்கிர பாதரும் தொழுவது போன் ஓவியம் அமைக்கப்பட்டுள்ளது. அவர் சபையில் ஆடுவதை குறிக்க, சபை ஒன்றும் ஓவியத்தில் வரையப்பட்டுள்ளது இந்த ஓவியமும் தெற்கு நோக்கியே அமைந்துள்ளது. இங்குள் ஓவிய நடராசரை எந்தப் பகுதியிலிருந்து நோக்கினாலு நம்மையே நோக்குவது போன்ற விழி அமைப்பு நோக்க தக்கது.

மன்றத்தின் முன்னர் தெப்பக்குளம் காணப்படுகிறது அதனடுவில் நீராழி மண்டபம் பாங்குடன் திகழ்கிறது. இ மன்றத்தின் மேல் ஓடுகள் செப்புத்தகட்டால் வேயப்பட்டுள்ள இங்கு மேற்கூரையைக் கொண்டு பெயரினை அழைக்காம மன்றத்தின் உள்ளே வீற்றிருக்கும் ஆடல்வல்லானின் ஓவி உருவை நோக்கி, சித்திரசபை என்று பெயர் வழங்கியுள்ளன

**முடிவுரை**

இதுவரை ஐவகை மன்றங்களின் அமைப்பும் அழகு விளக்கப்பட்டன. ஐவகை மன்றங்களே இன்று பஞ்சசபை என்று அழைக்கப்படுகின்றன. மன்றம் வேறு, அம்பலம் வே என்று உரையாசிரியர்கள்தாம் வேறுபடுத்திக் காட்டியுள்ளன மன்றம் என்ற சொல்தான் மிகப்பழமையானது. சபை என் சொல் முதன்முதலில் தில்லைக் கலம்பகத்தில்தான் ஆளப்ப கிறது. அம்பலம் என்ற சொல் முதன்முதலில் சிலப்பதிகாரத்தி கையாளப்பட்டுள்ளது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கச்சியப்ப சிவ சாரியார்தான் முதன்முதலில் கந்தபுராணத்தில் ஐவகை மன்ற களைப் பொதுவாகச் சுட்டியுள்ளார். ஐவகை மன்றுகளையு பெயர் குறிப்பிட்டு முதன்முதலில் இரட்டைப்புலவர்தாம் பா யுள்ளனர். ஐவகை மன்றங்கள் பற்றிய கருத்தே பன்னிரண்டா நூற்றாண்டிற்கும், பதினான்காம் நூற்றாண்டிற்கும் இடை தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

மணி மன்றத்தில் ஊர்த்துவத்தாண்டவர் வீற்றிருக்கிறா அவருடைய அமைப்பும் அழகும் விளக்கப்பட்டன. அம்மன்ற

தின் பெயர்க்காரணம் கூறப்பட்டது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பே காளிக்கும் இறைவனுக்கும் போட்டி நடந்ததாகக் கூறும் கதை தோன்றியிருக்க வேண்டும். இக்கதை திருவாலங்காட்டுக்குரியது. இதனைப் பிற்காலத்தில் சிதம்பரத்திற்குச் சேர்த்துக் கூறிவிட்டனர்.

சிதம்பரம் என்ற சொல்லாட்சி முதன்முதலில் திருமந்திரத்தில்தான் இடம் பெற்றுள்ளது. இச்சிதம்பரம் கோயில் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் வளர்ச்சிப் பெற்றிருக்கிறது.

தாமிரசபை என்ற பெயர்க்காரணம் விளக்கப்பட்டது. திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்திலும், சிதம்பரனார் மாவட்டத்திலும் உள்ள செப்பறை, கரிசூழ்ந்த மங்கலம், கட்டாரிமங்கலம், கருவேலங்குளம் ஆகிய ஊர்களோடு சிதம்பரத்தைச் சேர்த்து, பஞ்சசபை என்று அழைக்கின்றனர். அந்த மாவட்டத்தில் உள்ள நடராசர் 'சந்தன நடராசர்' என்று அழைக்கப்படுகிறார். சித்திரசபையின் பெயர்க்காரணம் கூறப்பட்டது. அச்சபையின் அமைப்பும் அழகும் விளக்கப்பட்டன.

இந்தப் பஞ்சசபை என்ற வழக்காறு ஓர் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்தான் தோற்றம் பெற்றது என்பது வெளிப்படுத்தப் பட்டது. இக்காலத்திலும் இந்த ஐவகை மன்றங்களும் ஆடல் வல்லானின் திருத்தலங்களாகவே விளங்கி வருகின்றன.

## குறிப்புகள்

1. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி, பக். 95-96.
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 116.
3. கழகத் தமிழ் அகராதி, ப. 28.
4. செந்தமிழ் அகராதி, ப. 18.
5. அகநானூறு, பா. 251-உரை.
6. மேற்படி, பா. 167-உரை.
7. குறுந்தொகை, பா. 15-உரை.
8. திருமுருகாற்றுப்படை உரைக்கொத்து, பக். 65-66.
9. சிலப்பதிகாரம், பதிகம், அடிகள் 40-41.
10. சீவகசிந்தாமணி. பா. 2112.
11. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, ப. 3127.
12. செந்தமிழ் அகராதி, ப. 600.
13. கழகத் தமிழ் அகராதி, ப. 687.
14. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 396.
15. குறுந்தொகை, பா. 346-உரை.
16. பதிற்றுப்பத்து, பா. 43:26.
17. மதுரைக்காஞ்சி, அடி. 615.
18. சிலப்பதிகாரம், 12:11.
19. மணிமேகலை, 20:30.

20. தொல்காப்பியம், சொல்லதிகாரம், சூ. 401.

21. இரட்டைப் புலவர், தில்லைக்கலம்பகம், பா. 1.

22. அருணகிரிநாதர், திருப்புகழ், பா. 196.

23. கச்சியப்ப சிவாச்சாரியார், கந்தபுராணம், கடவுள் வாழ்த்து, பா. 16.

24. இரட்டைப் புலவர், மு. கு. நூ., பா. 32.

25. திரிகூடராசப்பக் கவிராயர், திருக்குற்றாலநாதருலா, கண்ணிகள் 271, 272.

26. கயப்பாக்கம் சோமசுந்தரம், பஞ்ச சபைகளும் அருட் பாடல்களும், ப. 4.

27. காரைக்காலம்மையார், மூத்தத் திருப்பதிகம், பா. 4.

28. A. R. E. 482/1905.

29. மயிலை சீனி. வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழு வகைத் தாண்டவம், ப. 77.

30. டாக்டர் இரா. கலைக்கோவன், இரா. வளர்மதி, 'கரண குழப்பங்கள்', **செந்தமிழ்ச் செல்வி**, டிசம்பர் 87, சிலம்பு 62, பரல் 4, ப. 136.

31. திருவாலங்காட்டுப் புராணம், சுநந்தர் உபதேசச் சருக்கம். பா. 36.

32. டாக்டர் பத்மா சுப்ரமணியம், 'தில்லைத் தலத்து நடன சிற்பங்கள்', சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர் கோயில் கும்பாபிஷேக மலர், 1987, ப. 201.

33. திருமூலர், திருமந்திரம், பா. 2700.

34. திருநாவுக்கரசர் தேவாரம், 4:68:8.

35. க. வெள்ளைவாரணனார், தில்லைப் பெருங்கோயில் வரலாறு, ப. 30.

36. அ. ச. ஞானசம்பந்தன், பெரியபுராணம் ஓர் ஆய்வு, பக். 446-47.

37. திருவாலங்காட்டுத் தலபுராண வசனம், பக். 19-22.

38. சுப்பிரமணிய சிவாச்சாரியார் பேட்டியில் கூறியது; நாள்: 26-03-1988.

39. திருமூலர், மு கு. நூ., பா. 2722.

40. இரட்டைப்புலவர், மு. கு. நூ., பா. 15.

41. ஆறு சாத்திரம் நாலுவேத மதில் தூண்
ஆகமங்கள் இருபத் தெட்டுடன்
ஐம்பெரும் பூதங்கள் பதினெண் புராணங்கள்
அரியசிறு தூண் உத்திரம்
ஏறுகலை அறுபத்து நாலு கைம்மர
நாட்டி எழுபத் திரண்டாயிரம்
எழில் வரிச்சுடன் ஆணிபுவனம்
இருநூற் றிருபத்தினாலும்
கூறு தொண்ணூற் றாறுதத்துவம் பல்கணிகள்
கும்பம் ஒன்பது வாசலும்
குலவு சிற்றோடு இருபத் தோராயிரமும்
கூறும் அறுநூறும் ஆகத்
தேறுமொரு பெருவீடு கட்டி விளையாடும் உமை
சிறுவீடு கட்டி யருளே
சிவகாமசுந்தரி யெனும் பெரிய விமலையே
சிறுவீடு கட்டி யருளே''
—கிருஷ்ணையர், சிவகாமியம்மைப் பிள்ளைத் தமிழ், பா. 379.

42. சேக்கிழார், பெரியபுராணம், காரைக்காலம்மையார், புராணம், பா. 61.

43. உமாபதிசிவம், கோயிற்புராணம், பதஞ்சலி சருக்கம் பா. 91.

44. மேற்படி, நடராசச் சருக்கம், பா. 41-43.

45. திருநாவுக்கரசர், மு.கு.நூ., 5:2:8.

46. சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை, ப.23.

47. திருமூலர், மு.கு.நூ., பா. 2694.

48. உமாபதிசிவம், மு. கு. நூ., திருவிழாச் சருக்கம், பா. 14-17.

49. மேற்படி, இரணியவன்மச் சருக்கம், பா 52-54.

50. மேற்படி, திருவிழாச் சருக்கம், பா. 13-17.

51. க. வெள்ளைவாரணன், 'சிதம்பரம்', **தமிழ் முரசு ஆண்டு மலர்**, 1958. ப. 185.

52. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், கான்மாறியாடின படலம், பா. 20, 21.

53. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், கல்லும் சொல் லாதோ கவி, ப. 118.

54. பெரும்பற்றநம்பி, திருவிளையாடற்புராணம், மாறி யாடின திருவிளையாடல் பா 23.

55. திருஞானசம்பந்தர் தேவாரம், 3:52:4.

56. புறநானூறு, பா. 58.

57. நற்றிணை, முன்னுரை, ப. 79.

58. சிலப்பதிகாரம், பதிகம், அடிகள் 39-41.

59. கல்லாடம், பா. 36.

60. மேற்படி, பா. 79.

61. பரஞ்சோதி முனிவர், மு. கு. நூ., பா . 1.

62. எஸ். வையாபுரிப் பிள்ளை, 'தாம்பிரபரணி', **கல்விக் கழகக் கட்டுரைத் திரட்டு,** ப. 27.

63. ச. சுந்தரராசன், 100 ஆண்டுகளுக்கு முன் திருநெல் வேலி மாவட்டம், ப. 29.

64. எஸ். கணபதிராமன், பொருநை நாடு, ப. 36.

65. கே. சுப்ரமணிய அய்யர் பேட்டியில் கூறியது; நாள்: 30.04.1988.

66. திரிகூடராசப்பக் கவிராயர், திருக்குற்றாலத் தலபுரா ணம், பா. 39.

67. ..........., திருக்குற்றாலக் குறவஞ்சி, பா. 62:3.

68. ஏ. சி. ஷண்முக நயினார் பிள்ளை, திருக்குற்றாலத் தல வரலாறு, ப. 38.

இயல் 4

# தமிழ்ப் பண்பாட்டில் நடராசர் வழிபாடு பெறுமிடம்

சென்ற இயல்களில் நடராசர் வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும், எழுவகைத் தாண்டவங்களில் ஆனந்த தாண்டவம் பெறுமிடம், ஐவகை மன்றங்கள் ஆகியன விளக்கப்பட்டன. இனி, தமிழ்ப் பண்பாட்டில் நடராசர் வழிபாடு பெறுமிடம் சுட்டப்படுகிறது. முதலில், பண்பாடு என்ற சொல் விளக்கப் படுகிறது.

## பண்பாடு: சொல்லும் பொருளும்

ஒரு நாட்டின் பண்பட்ட நிலையைக் கூறுவதைப் (பண்+பாடு=பண்பாடு) பண்பாடு என்ற சொல் விளக்குகிறது. பண்படு என்ற சொல்லே, பண்பாடாகியிருக்கிறது. அப் பண்பாடு என்பதற்குக் கலைக்களஞ்சியம் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறது.

> "பண்பாடு என்பது ஒரு சந்ததியார் முந்திய சந்ததியாரிடமிருந்து பெற்ற நடத்தையாகும். சமூக வாயிலாகக் கற்றுக்கொள்வது விலங்கினத்திடமும் காணப்படும். ஆனால், அவை பேச முடியாதிருப்பதால் அவை கற்றுக் கொள்வதும், மிகச்சிறிய அளவாகும். மனிதனிடந்தான் அத்தகைய பண்பாட்டுப் பேறு பேரளவில் ஏற்படுகிறது."[1]

மேலும், கலைக்களஞ்சியம், ஒரு சமுதாயத்திலுள்ள மக்கள்

வாழ்க்கையை நடத்தும் முறையே பண்பாடாகும் என்று மானிடவியல் அடிப்படையில் இலக்கணம் வகுக்கிறது.[2]

மக்களின் பழைய வரலாற்றில் அவர்கள் இயற்றிக்கொண்ட கருவிகள், சமூகப்பழக்கம், வழக்கம், நம்பிக்கை, சமயம் முதலியவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கின்றனர். மக்களின் அறிவுநலம், ஒழுக்க உயர்வு, கொள்கை நலம், பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியவை: மென்மேலும் திருந்திய நிலையே பண்பாடு எனலாம் என்கிறார் அ. தட்சிணாமூர்த்தி.[3]

பண்பாடு என்பதனைப் பின்வருமாறு விளக்குகிறார் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்:

> "பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும், நடை உடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கிறோம். வாழ்வின் பலபல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் இந்தப் பண்பாடென்பது குறிக்கும்; உடலைப் பற்றிய நன்னிலை, மனத்தைப் பற்றிய தூய்மை நிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்."[4]

ஒரு சந்ததியிடம் தோற்றம் பெற்ற பழக்கவழக்கங்கள் மற்றொரு சந்ததியிடம் இடம் பெயருகின்றன. புதிய தலைமுறை பழைய வழக்கங்கள் அனைத்தையும் ஏற்றுக் கொள்வதில்லை; ஒருசிலவற்றை விட்டுவிடுகின்றன. இதற்கு அந்தந்த தலைமுறைக் காலத்தில் உள்ள அரசியல் சமுதாய பொருளாதார சூழல்கள் தாம் காரணம் என்கிறார் க.ப. அறவாணன்[5]. மேலும் அவர்,

> "மனிதன் தன் சமூகத்தின் அங்கமாகத்தான் கற்றவற்றைத் தன் இனத்தாருக்கும், தன் சந்ததியாருக்கும் கற்பிப்பதையே பண்பாடு என்பர். சமூகத்தின் வாயிலாகக் கற்றுக்கொண்டு பிறருக்குக் கற்பித்துக் கொடுக்கும், கற்றுப் பயிலும் நடத்தையையே பண்பாடு என்று குறிப்பர்."

என சு. சக்திவேல் கூறும் விளக்கத்தை ஏற்றுப் போற்றுகிறார்.[6]

மேற்கண்ட விளக்கங்களின் மூலம் ஒரு சமுதாயத்தில் உள்ள மக்களின் வாழ்க்கை முறையே பண்பாடாகும் என்பது பெறப்

படுகிறது. மேலும், ஒரு சந்ததியின் பழக்க வழக்கங்கள் மற்றொரு சந்ததிக்கு இடம் பெயருகின்றன என்பது தெளிவாகிறது.

**தமிழர் பண்பாடு**

தமிழர்களுடைய வாழ்க்கை முறையைப் பிரதிபலிப்பதே தமிழர் பண்பாடு. இதற்குப் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார் மது. ச. விமலானந்தம்.

> ''அண்டை அயலாரை அறிய, அவர் பண்பாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும். பண்பாடும், சமயமும் சார்புடையன; ஒன்று மற்றொன்றின் விளைவு. தனி மனிதன், கூட்டம், குழு, சமூகம் என்ற மும்மை நிலையது. கட்டுறுதி பகுத்தற்குரியது; பன்மை, ஒருமை, சமன்பாடு மூன்றும் பண்பாடு செழித்தற்குரிய பாங்குகள். இத்தகையதே தமிழர் பண்பாடு''[7]

சமயத்தைச் சார்ந்துதான் பண்பாடு தோன்றும் என்பதைப் பின்வருமாறு க.ப. அறவாணன் கூறுகிறார்:

> ''பண்பாடு சமுதாயத்தைச் சார்ந்திருக்கிறது. சமயங்கள் சமுதாயத்தைச் சார்ந்திருக்கின்றன. நிகழ் காலச் சமுதாயத்தில் பண்பாட்டின் கூறுகளான புதிய பழக்க வழக்கங்களைப் புகுத்த வேண்டுமானால், அவற்றைச் சமய வழியாகவோ, அரசியல் சட்ட வழியாகவோதான் அறிமுகப்படுத்த முடியும். கிறித்துவ சமயங்களின் ஆதிக்க காலத்தில் வாழ்ந்த டி.எசு. எலியட் சமயத்தைச் சார்ந்துதான் பண்பாடு தோன்ற முடியும்; வளர முடியும் என்று நம்பினார்''[8]

இதன் மூலம் சமயமும் பண்பாடும் பின்னிப் பிணைந்தவை என்பதை அறியமுடிகிறது. இத்தகையப் பண்பாட்டு வழிச் சமயத்தில் நடராசர் வழிபாடு பெறுமிடம் இங்கே ஆராயப் படுகிறது.

**வழிபாடு: விளக்கம்**

வழிபடு என்ற சொல்லே வழிபாடு என்று காலப்போக்கில் மாறியிருக்க வேண்டும். இங்கு, 'படு' என்னும் துணைவினையே 'பாடு' என முதல்நிலைத் திரிந்த தொழிற் பெயராகத் திரிந்

திருக்கிறது. 'வழிபாடு' என்ற சொல்லுக்கு, 'வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, வணக்கம், பூசனை என்ற பொருள் களைப் பகருகிறது சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி.[9] வணக்கம் என்ற பொருளினைத் தருகின்றது செந்தமிழ் அகராதி.[10] வணக்கம், கோட்பாடு என்ற பொருள் களை நவில்கிறது தற்காலத் தமிழ் அகராதி[11] பூசனை என்ற பொருளைக் கூறுகிறது பிங்கல நிகண்டு.[12] வணக்கம், வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, பூசனை, வழக்கம், சமயக்கோட்பாடு என்ற பொருள்களை வழங்குகிறது கழகத் தமிழ் அகராதி.[13]

## இலக்கியம் காட்டும் வழிபாடு

இலக்கியத்திலும் வழிபாடு என்ற சொல் பெறும் பொருள் ஆராயப்படுகிறது தொல்காப்பியத்தில் வருகின்ற வழிபடு தெய்வம்,[14] வழிபடு கிழமை,[15] வழிபாடு மறுத்தல்[16] என்ற சொற்றொடர்களுக்கு வணக்கம் என்ற பொருளே வழங்கப்படு கின்றது. 'வழிபடுவோரை வல்லறி தீயே' என வரும் புறநானூற்று அடியில் வழிபடுவோர் என்பது வணங்குதல் என்ற பொருளிலே ஆளப்படுகிறது[17] 'வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே' என்ற குறுந்தொகை அடியில் வரும் வழிபடல் என்ப தற்குச் செல்லுதல் என்ற பொருளைக் கொள்ளுகிறார் உ.வே. சாமிநாத ஐயர்.[18]

சிலப்பதிகாரத்தில், 'வந்தனை செய்து வழிபடு தலைக் கோல்[19], 'கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்,[20] என்ற அடிகள் இடம் பெற்றுள்ளன. அவ்வடிகளில் உள்ள வழிபடு, வழிபாடு என்ற சொற்களுக்கு வணங்குதல் என்ற பொருளே கூறப்படுகிறது. 'வழிபாடு வல்லுதலால்' என்ற நாலடியார்ப் பாடலில் வழிபாடு என்பதற்குப் 'பின்பற்றுதல்' என்ற பொருள் வழங்கப்படுகிறது.[21] திருக்கோவையாரில், 'மதிநுதலியை வழி படுத்து' என்ற தொடரில், வழிபடுத்து என்பது பயணமாதல் என்ற பொருளைக் குறிக்கிறது.[22] 'அமரர்கோன் வழிபட்டால்' என்ற திருவாய்மொழி நூற்றந்தாதியில் வழிபட்டால் என்பது 'நேர்செல்லுதல்' எனும் பொருளைத் தருகிறது.[23] காஞ்சிப்புராணத்தில் 'இருமொழியும் வழிப்படுத்தார்' என வருமிடத்தில் வழிப்படுத்தார் என்பதற்குச் 'சீர்திருத்தல்' எனும் பொருள் கூறப்படுகிறது.[24]

மேற்கண்டவற்றில் இருந்து, வழிபாடு என்பதற்குக் கோட் பாடு, சீர்திருத்தல், செல்லுதல், பின்பற்றுதல், வணங்குதல்

என்ற பொருள்கள் வழங்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. முன்னோர் காட்டிய அல்லது வகுத்த வழியில் செல்லுதலே வழி பாடு என வழங்கப்படுகிறது. முத்தியாகிய பேரின்ப நிலையை அடைய இறைவனை வழிபட வேண்டும் எனும் பொருளினையும் வழிபாடு என்ற சொல்லுக்குக் கொள்ளலாம். சங்க காலத்தில் வழங்கப்பட்ட வணங்குதல் (வழிபாடு) என்ற பொருளே பிற் காலத்தில் மறுமலர்ச்சியுற்றிருக்கிறது. இத்தகைய வழிபாட்டு நிலையே இங்கு ஆராயப்படுகிறது. முதலில், நடராசருக்குரிய திருமுழுக்கு விளக்கப்படுகிறது.

## திருமுழுக்கு *(அபிடேகம்)*

வழிபாட்டிற்கு முன் மூலவருக்குத் தினமும் திருமுழுக்கு நிகழ்த்தப் பெறும். ஆனால், நடராசர் திருமேனியோ உற்சவத் திருமேனி. எனவே, தினமும் திருமுழுக்குக் கிடையாது; வழி பாடு மட்டும் உண்டு. அத்திருமுழுக்குகள் ஓராண்டிற்கு ஆறு தான் நடராசருக்கு நடைபெறும். அத்திருமுழுக்குகள் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் விடியற்காலையிலும், மாசி மாதம் வளர்பிறைச் சதுர்த்தசியில் காலையிலும், சித்திரை மாதம் திருவோண நட்சத்திரத்தில் உச்சிக்காலத்திலும், ஆனி மாதம் உத்திரத்தில் மாலையிலும், ஆவணி மாதம் வளர்பிறைச் சதுர்த்தசியில் இரவிலும், புரட்டாசி வளர்பிறைச் சதுர்த்தசி திதியில் அர்த்த ஜாமத்திலும் நடைபெறும். தொல் காப்பியர் சிறுபொழுதுகளாக, காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை என்று கூறுவதைப்போல, கூத்தப் பெருமானுக்கும் ஆறு பொழுதுகளில் ஒவ்வோர் ஆண்டிலும் திருமுழுக்குகள் நடைபெறுகின்றன. இச்செய்தியினை,

> ''சித்திரையில் ஓணமுதல் சீரானி உத்தரமாம்
> சத்ததனு வாதிரையின் சார்வாகும்—பத்தி
> மாசிஅரி கன்னி மருவு சதுர்த்தசிமன்
> றீசரபி டேகதின மாம்''

என்ற பெண்பாவினால் அறிய முடிகிறது என்கிறார் க. வெள்ளைவாரணனார்.[25]

## ஐவகை மன்றங்களில் திருமுழுக்கு

தில்லை நடராசப்பெருமானுக்கு ஆண்டிற்கு ஆறு திருமுழுக்குகள் நடைபெறுகின்றன. அத்திருமுழுக்குகளில் ஆனி உத்திரத்தன்றும், மார்கழித் திருவாதிரையன்றும் ஆயிரக்கால்

மண்டபத்தில் விடியற்காலை திருமுழுக்கு நடைபெறும். சித்திரை மாதம் திருவோண நட்சத்திரத்திலும், ஆவணி, புரட்டாசி, மாசி மாத சதுர்த்தசி திதியிலும், கனகசபையில் மாலையில் திருமுழுக்கு நிகழும்.

அத்திருமுழுக்குகளில் ஆனித் திருமஞ்சனமும், மார்கழித்திருவாதிரையும் முக்கியமானவை. திருவாதிரைத் திருநாளன்று விடியற்காலையில் நடராசருக்குத் திருமுழுக்குச் செய்யும் பொழுது, திருமுடியில் ஊற்றுகின்ற நீரும், பாலும் அப்படியே காலடியில் வந்து விழுவது மிகவும் சிறப்பாக இருக்கும். அத்திருமுழுக்கின் ஒரு பகுதியாக மலர்முழுக்கு நடைபெறும். அப்பொழுது நடராசர் பூமலையின்மேல்ஆடுவது போன்று தோற்றமளிக்கும்.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் நடராசருக்குரிய ஆறு திருமுழுக்குகளில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்திரம் தவிர மற்ற நான்கு திருமுழுக்குகள் நடைபெறுவதில்லை. மார்கழித் திருவாதிரைக்கு முந்தியநாள் அர்த்தஜாம காலத்தில் சொக்கநாதர், பித்தளையாலான கண்ணாடி, வெள்ளியம்பல நடராசர் ஆகிய மூவருக்கும் திருமுழுக்கு நடைபெறும். சுவாமியின் பிரதிபிம்பம் நடராசர் திருமேனியாகும். எனவே, பித்தளையாலான கண்ணாடி பாதி இலிங்கத்தையும்,பாதி நடராசரையும் பார்த்து வைக்கப்பட்டிருக்கும். இத்திருமுழுக்கிற்குப் பின் தான் தரிசனம் நிகழும். இதைப்போன்றே, ஆனித் திருமஞ்சனத்தன்றும் நடைபெறும்.

மதுரையிலுள்ள கால்மாறியாடும் நடராசர் சிற்பம் கல்லால் ஆனது. இச்சிற்பத்தின்மேல் நீர் ஊற்றுவதே கிடையாது. மார்கழித் திருவாதிரைக்கு மட்டும் சந்தனாதி தைலம், சாம்பிராணி தைலம் ஆகியன பூசப்படுகின்றன. அன்று சிறப்பான முறையில் பூவலங்காரமும் சிறப்பு ஆராதனையும் நடைபெறும்.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் நடராசருக்கு ஆறு திருமுழுக்குகள் நடைபெறுகின்றன.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் ஆனி மாதமும், மார்கழி மாதமும் சந்தன நடராசருக்குப் புதிய சந்தனம் சாத்தப்படும். அக்கோயிலில் உள்ள இரண்டு உற்சவத் திருமேனிகளுக்கும் ஒவ்வொரு மாதமும் திருவாதிரையன்று திருமுழுக்கு நடைபெறும். தாமிரசபையில் உற்சவத் திருமேனியை வைத்துதான் மார்கழி, ஆனி மாதங்களில் திருமுழுக்கு நிகழும். சௌந்தர்ய சபையில் உள்ள நடராசர் திருமேனிக்கும் ஒவ்வொரு மாதமும் திருவாதிரையன்று திருமுழுக்கு நடைபெறும்.

குற்றாலம் குற்றாலநாதர் கோயிலில் நடராசருக்கு ஆறு திருமுழுக்குகள் நடைபெறுகின்றன.

## மற்ற கோயில்களில் திருமுழுக்கு

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலிலும், கும்ப கோணம் நாகேஸ்வரன் கோயிலிலும், பட்டீஸ்வரம் தேனுபுரீ சுவரர் கோயிலிலும், திருவலஞ்சுழி சடைமுடிநாதர் கோயிலி லும், திருப்புறம்பயம் சாட்சிநாதர் கோயிலிலும், தாராசுரம் ஐராவதேசுரர் கோயிலிலும், திருச்செங்கோடு கைலாசநாதர் கோயிலிலும், அவிநாசி அவிநாசிலிங்கேஸ்வரர் கோயிலிலும், குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலிலும், திருச்சி தாயுமானவர் கோயிலிலும், திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் கோயிலிலும், திருவெறும்பூர் எறும்பீசுவரர் கோயிலிலும், திருவாசி மாற்று ரைவரதீசுவரர் கோயிலிலும், கடம்பர்கோயில் கடம்பவனேஸ் வரர் கோயிலிலும், இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயி லிலும், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலிலும், திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலிலும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலிலும், திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலிலும், திருச்சுழி திருமேனிநாதர் கோயிலிலும், திருவாப் பனூர் திருவாப்புடையார் கோயிலிலும், தென்காசி காசிவிசுவ நாதர் கோயிலிலும், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயி லிலும், பாபநாசம் பாபவிநாசர் கோயிலிலும் உள்ள நடராசர் திருமேனிகளுக்கு மார்கழித் திருவாதிரையன்று திருமுழுக்கு மிகவும் சிறப்பான முறையில் நடைபெறுகிறது.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலிலும், திருவையாறு பஞ்ச நதீஸ்வரர் கோயிலிலும், கீழ்வேளூர் அட்சயலிங்க சுவாமி கோயி லிலும், திருவாரூர் அரநெறியப்பர் கோயிலிலும், மாயவரம் மாயூரநாத சுவாமி கோயிலிலும், திருவெண்காடு சுவேதாரண் யேஸ்வரர் கோயிலிலும், சீர்காழி தோணியப்பர் கோயிலிலும், திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலிலும், திருவான் மியூர் மருந்தீசுவரர் கோயிலிலும், சிந்தாதிரிப்பேட்டை ஆதிபு ரீஸ்வரர் கோயிலிலும், மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலிலும் உள்ள நடராசர் திருமேனிகளுக்கு மார்கழித் திருவாதிரையன்று வெகு சிறப்புடன் திருமுழுக்கு நடைபெறுகிறது.

சுவாமிமலை சுவாமிநாதசுவாமி கோயிலில் சபாபதிபாகுலே சுப்பிரமணியர் திருமேனிக்கு மார்கழித் திருவாதிரையன்று திருமுழுக்கு நடைபெறுகிறது. அக்கோயிலில் உள்ள நடராசர் சுதைச்சிற்பத்திற்குச் சாம்பிராணி தைலமும் புனுகும் மார்கழித் திருவாதிரையன்று சாத்தப்படுகின்றன.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலில் உள்ள நடராசர் திருமேனிக்கு ஒவ்வொரு மாதமும் திருமுழுக்கு நடைபெறுகிறது. அக்கோயிலின் மரகதக்கல் நடராசருக்கு மார்கழித் திருவாதிரையன்றுதான், அக்கல்லின் மேலுள்ள சந்தனம் அகற்றப்பட்டு மீண்டும் சந்தனம் பூசப்படுகிறது. அம்மரகதக்கல் நடராசரைக் காண, அன்று மட்டும் ஆயிரக்கணக்கில் மக்கள் திரள்வர்.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயில் நடராசர் சிற்பம் சாந்தாதாரத்தினால் செய்யப்பட்டதாகையால், அச்சிற்பத்திற்குத் திருமுழுக்குச் செய்யப்படுவதில்லை.

திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலின் பிரகாரத்தில் உள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரையன்று மட்டும் சாம்பிராணி தைலம் சாத்தப்படுகிறது.

திருச்சுழி திருமேனிநாதர் கோயிலில் உள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரையன்று சாம்பிராணி தைலம் பூசப்படுகிறது.

திருவாப்பனூர் திருவாப்புடையார் கோயிலில் உள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரையன்று சாம்பிராணி தைலம் பூசப்படுகிறது.

பாபநாசம் பாபவிநாசர் கோயிலில் உள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரையன்று புனுகுடன் சேர்த்து சந்தனம் சாத்தப்படுகிறது.

திருச்சி தாயுமானவர் கோயிலிலும், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலிலும், திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலிலும், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயிலிலும், பாபநாசம் பாபவிநாசர் கோயிலிலும், தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலிலும், திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலிலும், மாயவரம் மாயூரநாதசுவாமி கோயிலிலும், திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலிலும், சீர்காழி தோணியப்பர் கோயிலிலும், திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலிலும், திருவான்மியூர் மருந்தீசுவரர் கோயிலிலும், சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீஸ்வரர் கோயிலிலும், நடராசருக்குரிய ஆறு திருமுழுக்குகளும் சிறப்பாக நடைபெறுகின்றன.

இத்தகைய திருமுழுக்குகள் நடைபெறுவதின் மூலம் தமிழர்கள் நடராசர் மீது கொண்ட பற்றை அறியமுடிகிறது.

வழிபாடு

தமிழ்நாடு முழுவதும் உள்ள கோயில்களில் வெவ்வேறு முறைகளில் நடராசருக்கு வழிபாடு நடைபெறுகிறது. அவ் வழிபாடு கோயில்களில் எப்படி நடைபெறுகிறது என்பது முதலில் விளக்கப்படுகிறது.

## ஐவகை மன்றங்களில் வழிபாடு

தில்லை நடராசர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூசைகள் நடைபெறுகின்றன. விடியற்காலையில் நிகழ்வது பால் நைவேத்தியம். பள்ளியறையில் இருந்து இறைவன் திருவடியை நிவேதனம் செய்த பின்னர், பல்லக்கில் அமர்த்தி சிற்றம்பலத்தில் கொண்டு வந்து சேர்த்தல் மரபு என்கிறார் க. வெள்ளைவாரண னார்.[26]

தினமும் ஆறு காலமும் சிற்சபையிலுள்ள ஸ்படிக லிங்கத் திற்குக் கனகசபையில் அபிடேகம் நடைபெறுகிறது. அதன் பின்னரே கூத்தப்பெருமானுக்கும், சிவகாமியம்மைக்கும் வழிபாடு நடைபெறும். சிற்சபையில் உள்ள இரத்தின சபாபதிக் குத் தினமும் காலை 10-30 மணியளவில் கனகசபையில் அபிடேகம் நடைபெறுகிறது. சிற்சபையிலுள்ள சிதம்பர இரகசியத்திற்கு இரவு 7-30 மணியளவில் வழிபாடு நிகழும். அதன் பின்னரே இரண்டாம்காலப் பூசை எட்டு மணிக்கு நடைபெறும். சிதம்பர இரகசியம், இவ்வியலில், 'பிற செய்திகள்' என்ற துணைத்தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது.

தில்லையில் நடைபெறும் அர்த்தஜாமப்பூஜை மிகவும் புகழ் பெற்றது. ஏனெனில், எல்லாக் கோயில்களிலும் உள்ள திருவருட்கலைகள் அனைத்தும் தில்லை மன்றில் ஆடல்புரியும் கூத்தப்பெருமானிடம் வந்து ஒடுங்குகின்றன. இதனை, அப்பரின் புக்கதிருத்தாண்டகமும் புலப்படுத்துகிறது.[27] அர்த்தஜாமத்தில் தில்லைக் கூத்தனுக்குத் தீபாராதனை நிகழ்ந்த பின்னர், சிற்சபையில் உள்ள பெருமான் திருவடி பல்லக்கில் வைக்கப் பெற்று, வலமாக வந்து, பள்ளியறையில் வைக்கப் பெறும்; பின்னர் ஆராதனை நடைபெறும். அதன்பின்னே சண்டேசு வரருக்கும் பயிரவருக்கும் ஆராதனை நிகழ்த்தப் பெறும். இறுதியில் அர்த்தஜாம அழகர் வழிபாடு நடைபெறும். இத்தகைய வழிபாடுகள் யாருக்காகவும் காலம் தாழ்த்தாமல், குறித்த காலத்தில் தினமும் நடைபெற்று வருகின்றன.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலும் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. ஆனால், நடராசருக்குரிய பூஜை, மீனாட்சியம்மன், சொக்கநாதர் ஆகியோருக்கடுத்துதான் நடைபெறுகிறது.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் தினமும் நான்கு காலப் பூஜைகள்தான் நிகழ்கின்றன. இரத்தின சபையில் உள்ள ஸ்படிக லிங்கத்திற்கும் தினமும் நான்கு காலப் பூஜைகள் நடைபெறுகின்றன. சுவாமி, அம்பாள் ஆகியோருக்குப் பூஜை நிகழ்ந்த பின்னர்தான், நடராசருக்குப் பூஜை நடைபெறு கின்றது.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. ஆனால், சுவாமி, அம்பாள் ஆகியோருக்கடுத்துதான் நடராஜருக்குப் பூஜை நடைபெறுகிறது.

குற்றாலம் குற்றாலநாதர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நிகழ்கின்றன. பிள்ளையாருக்கு அடுத்து நடராச ருக்குத்தான் பூஜை நிகழும்; பின்னர்தான் குற்றால நாதருக்குப் பூஜை நிகழும். இக்கோயிலில் நடைபெறும் தாண்டவத் தீபாராதனை மிகவும் சிறப்பு வாய்ந்தது. இத்தீபாராதனை ஐப்பசி, சித்திரை விசுத் திருவிழாக்களில் ஏழாம் நாள் மாலை யிலும், எட்டாம் நாள் காலையிலும் நடராசருக்கு நடைபெறு கின்றது. திருவாதிரைத் திருவிழாவில் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் நடைபெறுகின்றது.

தாண்டவத் தீபாராதனை ஆனந்த பைரவி இராகத்தில் சாப்பு தாளத்தில் நடைபெறும். இந்த இராக தாளத்திற்கு என்று தனிப்பயிற்சி உடையவர்கள் கோயிலில் உண்டு. இந்தத் தாளத்திற்கேற்ப நர்த்தனம் நடைபெறுகிறது. தொலைவி லிருந்து பார்க்கும் பொழுது தீபம் மட்டும் தாளத்திற்கேற்ப நடனமாடுகின்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது என்கிறார் சொ. சுப்பிரமணிய கவிராயர்.[28]

## மற்ற கோயில்களில் வழிபாடு

இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் சுவாமி, அம்பாள், காசி விசுவநாதர், விசாலாட்சி ஆகியோருக்குப் பின் தான் நடராசருக்குப் பூஜை நடைபெறும்.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. சுவாமி, அம்பாள் ஆகியோருக்கடுத்து நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது. ஒவ்வொரு மாதமும் திருவாதிரை நட்சத்திரத்தன்று நடராசருக்குச் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.

திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. சுவாமிக்கடுத்து நடராசருக்குத்தான் பூஜை நிகழும்.

திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நடைபெறுகிறது. அக்கோயிலில் விநாயகர், சுப்பிரமணியர், சுவாமி ஆகியோருக்கடுத்து நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது.

திருச்சுழி திருமேனிநாதர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நிகழ்கிறது. விநாயகர், சுப்பிரமணியர், சுவாமி ஆகியோருக்கடுத்து நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது.

தென்காசி காசிவிசுவநாதர் கோயிலில் ஆறுகாலப் பூஜை நடைபெறுகின்றது. அக்கோயிலில் சுவாமிக்கடுத்துதான் நடராசருக்குப் பூஜை நிகழும். அக்கோயிலில் மார்கழித் திருவாதிரையன்று தாண்டவத் தீபாராதனை நடைபெறும். அத்தீபாராதனை நான்கு காலம் நடைபெறும். அப்பொழுது ஆனந்த பைரவி இராகத்தில் வாத்தியங்கள் வாசிக்கப்படும். அதற்கேற்ப தீபாராதனை நிகழும்.

பாபநாசம் பாபவிநாசர் கோயிலில் தினமும் நான்குகாலப் பூஜை நடைபெறுகிறது. அக்கோயிலில் சுவாமிக்கடுத்து நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நடைபெறுகிறது. அக்கோயிலில் முதலில் நடராசருக்குத் தான் பூஜை நிகழ்கிறது. பின்னர்தான், தியாகராஜர், இரட்டைப் பிள்ளையார், பிரகதீஸ்வரர் ஆகியோருக்குப் பூஜை நடைபெறுகிறது.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நடைபெறுகிறது. அக்கோயிலில் சுவாமிக்கடுத்துதான் நடராசருக்குப் பூஜை நிகழும். ஆனால் நடராசருக்குத் தினமும் நான்குகாலப் பூஜை நடைபெறுகிறது.

கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலில் தினமும் ஐந்து காலப் பூஜை நடைபெறுகிறது. அக்கோயிலில் சுவாமிக்கடுத்து தான் நடராசருக்குப் பூஜை நடைபெறும். ஆனால், மாலையில் மட்டும் முதல் பூஜை நடராசருக்குத்தான் நிகழும்.

மாயவரம் மாயூரநாதசுவாமி கோயிலில் தினமும் ஆறு காலப் பூஜை நடைபெறுகின்றது. முதலில் நடராசருக்குத்தான் பூஜை நிகழ்கிறது.

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலில் உள்ள ஸ்படிக லிங்கத்திற்குத் தினமும் நான்கு காலங்களில் திருமுழுக்குகள் நடைபெறுகின்றன. அக்கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நடைபெறுகிறது. மாலையில் மட்டும் நடராசருக்கு முதல் பூஜை நிகழ்கிறது. மற்ற நேரங்களில் சுவாமிக்குத்தான் முதல் பூஜை நடைபெறுகிறது. அச்சபையில் உள்ள இரகசியத்திற்குத் தினமும் காலையில் பூஜை நிகழ்கிறது.

சீர்காழி தோணியப்பர் கோயிலில் தினமும் ஆறுகாலப் பூஜை நடைபெறுகின்றது. அக்கோயிலில் மாலை வேளையில் விநாயகருக்கு அடுத்து நடராசருக்குப் பூஜை நடைபெறும்; மற்ற நேரங்களில் சுவாமிக்கடுத்து நடராசருக்குப் பூஜை நிகழும்.

சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீஸ்வரர் கோயிலில் தினமும் நான்கு காலப்பூஜை நடைபெறுகின்றது. அக்கோயிலில் விநாயகர், சுவாமி ஆகியோருக்கடுத்துதான் நடராசருக்குப் பூஜை நடைபெறும்.

இதன்மூலம் தில்லையில் மட்டும் நடராசருக்குப் பூஜை நடைபெற்றபின் மற்ற சுவாமிகளுக்கு நடைபெறும் என்பதை அறியமுடிகிறது. ஏனெனில், அக்கோயிலில் நடராசர்தான் முதன்மையானவர். மற்ற கோயில்களில் சிவலிங்கம்தான் முக்கியத்துவம் வாய்ந்தது. எனவே, அதற்கடுத்துதான் நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது. திருவெண்காட்டில் தில்லையில் உள்ளதுபோல் சபை அமைந்துள்ளதால், மாலையில் மட்டும் நடராசருக்கு முதல் பூஜை நடைபெறுகிறது. சோழர்களின் குலத்தெய்வமாக நடராசர் திகழ்ந்ததால், அவர்கள் கட்டிய தஞ்சைப் பிரகதீஸ்வரர் கோயிலில் நடராசருக்கு மாலையில் முதல் பூஜை நடைபெறுகிறது.

தென்காசி காசிவிசுவநாதர் கோயிலிலும், குற்றாலம் குற்றாலநாதர் கோயிலிலும்தான் தாண்டவத் தீபாராதனை

மிகச்சிறப்புடன் நடைபெறுகின்றது. தமிழகத்தில் வேறெந்தக் கோயில்களிலும் இத்தீபாராதனை நிகழ்வதில்லை. இத்தீபாராதனை தமிழர்களின் கலைப் பண்பாட்டில் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

## திருவாதிரைத் திருவிழா

நடராசரின் ஆறு திருமுழுக்குகளுள் ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் திருவாதிரையும் மிகவும் சிறப்பு வாய்ந்தவை என்பது முன்னரே கூறப்பட்டது. அவற்றுள்ளும் மார்கழித் திருவாதிரைத் திருவிழாதான் மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஏனெனில், பழங் காலந்தொட்டே இலக்கியங்களில் ஆதிரையான் என்ற சொல் லாட்சி இடம்பெற்றுள்ளமையேயாகும்.

மார்கழி மாதத்தில்தான் திருவாதிரை நட்சத்திரக் கூட் டத்தைப் பார்க்கலாம். மத்தியில் திருவாதிரை நட்சத்திரம் பிரகாசமாய்த் தோன்றும். சில நட்சத்திரங்கள் இதைச் சுற்றி யிருக்கும். இவற்றை மிகவும் நுண்மையாய்ப் பார்க்க கூத்தப் பெருமான் திருமுகத்தைப் போலவும், அவன் ஒரு காலை ஊன்றி, ஒரு காலைத் தூக்கி நடனமாடுவது போலவும் தோற்றம் அளிக்கும் என்கிறார் ஏ. சி. ஷண்முக நயினார்.[29]

திருவாதிரைத் தரிசனத்தின்போது ஐந்தொழில் நடைபெறு கிறது. நடராசரைத் திருமுழுக்கிற்கு எழுந்தருளச் செய்வது 'தோற்றம்' ஆகும். திருமுழுக்குச் செய்ய காப்புக் கட்டுதல் காத்தலைக் குறிக்கும். பெருமானுக்குக் கறுப்புச் சாந்தணிதல் அழித்தலைக் குறிக்கும். வெண்மையாடையைச் சாத்துதல் மறைத்தலைக் குறிக்கும். திருமுழுக்கிற்குப்பின் காட்சி கொடுத்தல் அருளைக் கொடுக்கும்.

## இலக்கியம் காட்டும் ஆதிரை விழா

ஆதிரை விழாவானது, சிவபெருமானுக்குக் கொண்டாடப் பட்டது என்பதைப் பரிபாடல் தெரிவிக்கிறது.[30] கலித்தொகையும் இறைவனைக் கிடைத்தற்கரிய ஆதிரை நாளையுடையவன் என்று சுட்டுகிறது.[31] ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞான சம்பந்தரும் எலும்பைப் பெண்ணாக்கப் பாடிய பாடலில், 'ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்' என்று பாடி யுள்ளார்.[32] திருவாதிரைத் திருவிழா ஆரூரில் எப்படி நடை பெறுகிறது என்பதைத் திருவாரூர் திருவாதிரைத் திருப்பதி

கத்தில் அப்படியே படம்பிடித்துக் காட்டியுள்ளார் அப்பர் பெருமான்.[33] இதன்மூலம் சங்ககாலந்தொட்டே சீரும் சிறப்புமாகத் திருவாதிரைத் திருவிழா கொண்டாடப்பட்டதை அறிய முடிகிறது.

### கல்வெட்டுக் கூறும் ஆதிரை விழா

சோழர்களும், பாண்டியர்களும் விழாக்களுக்காக நிவந்தங்கள் வழங்கினர் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. முதல் இராசேந்திர சோழ தேவராகிய கங்கை கொண்ட சோழனது இருபத்து நான்காவது ஆட்சியாண்டில் ஸ்ரீராஜேந்திர சோழதேவர் அணுக்கி நக்கன் பாவை என்பாள் திருவானித் திருநாளில் திருச்சிற்றம்பலமுடையாராகிய கூத்தப்பெருமான் எழுந்தருளும் நாளில், வேண்டும் செலவுக்கும் அமுது படிக்கும் அப்பொழுது மாகேஸ்வரர் ஆயிரவர்க்கு சட்டிச்சோறு கொடுத்தற்கும், மார்கழித் திருவாதிரைத் திருநாளுக்கு வேண்டும் செலவு கட்கும், திருமாசித் திருநாளில் திருத்தொண்டத் தொகை விண்ணப்பஞ் செய்தற்குமாக நிலமளித்த செய்தி, சிதம்பரம் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளது என்று வெள்ளை வாரணனார் குறிப்பிடுகிறார்.[34]

இதன்மூலம், ஆனித்திருமஞ்சனம், மார்கழித் திருவாதிரை, மாசித்திருநாள் ஆகிய விழாக்கள் சோழர் காலத்தில் தில்லையில் கொண்டாடப்பட்டதை அறிய முடிகிறது. ஆனால் இன்றோ, மாசி மாதம் தில்லையில் திருவிழா நடைபெறுவதில்லை; மற்ற இரண்டு விழாக்கள்தாம் மிகவும் சிறப்புடன் கொண்டாடப் படுகின்றன.

முதலாம் இராசேந்திரனது இருபத்தொன்பதாம் ஆட்சி யாண்டுக் கல்லெழுத்துக்குரிய (1012 + 29 = கி. பி. 1041) காமரசவல்லிக் கல்லெழுத்து மார்கழி, வைகாசி மாதங்களில், திருவாதிரைத் திருநாட்களில் மூன்று முறை சாக்கைக் கூத்து ஆடச் சாக்கைமாராயன் விக்கிரம சோழன் என்பார்க்குக் காமரசவல்லிச் சதுர்வேதி மங்கலத்தார் நிலம் அளித்தனர் எனப் பகர்கின்றது.[35] திருப்பள்ளியெழுச்சிக்காகவும் திருவாதிரை நாளில் திருவெம்பாவை விண்ணப்பம் செய்வதற்காகவும் வீரராசேந்திர சோழன் நிவந்தம் வழங்கினான் என்பதைத் திருவொற்றியூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது என்கிறார் கா. ம. வேங்கடராமையா.[36]

முதலாம் இராஜராஜன் தனது பதினைந்தாவது ஆட்சி யாண்டில் (985+15=கி.பி. 1000) மார்கழித் திருவாதிரை விழாவின்போது அக்கரதலை வழங்க நிலத்தைக் கொடுத்துள்ளான் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[37] மேலும், அவன் மார்கழித் திருவாதிரையன்று 'தலவகரசாம வேதம்' ஓத பதினைந்து களஞ்சு தங்கத்தை வழங்கினான் என்று ஒரு கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.[38]

சுந்தரபாண்டியதேவன் தனது பத்தாவது ஆட்சியாண்டில் (1278+10=கி.பி.1288) மார்கழித் திருவாதிரையன்று இறைவனின் திருமுழுக்கிற்கும், பூசைக்கும் நிலத்தை வழங்கினான் என்கிறது ஒரு கல்வெட்டு.[39] இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனும் மார்சழித் திருவாதிரை விழாவிற்கு நிவந்தம் வழங்கினான் என்கிறது சல்வெட்டு.[40] அக்கல்வெட்டு அவனுடைய பன்னிரண்டாம் ஆட்சியாண்டைச் சார்ந்தது (1238+12= கி.பி. 1250).

இக்கல்வெட்டுகளின் மூலம் விழாக்கள் மிகவும் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப்பட்டதை அறிய முடிகிறது. மேலும், அரசர்கள் நடராசர் மேல் கொண்ட பக்தியும், அவர்களின் கொடைத்திறமும் தெள்ளத் தெளிவாகப் புலனாகின்றன.

### ஐவகை மன்றங்களில் திருவாதிரை விழா

சிதம்பரம் நடராசர் கோயிலில் நடைபெறும் திருவிழாக்களுள், பெரிய திருவிழாக்கள் இரண்டு. அவை ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் திருவாதிரையுமாகும். மார்கழித் திருவாதிரையின்போது பத்து நாட்கள் விழா நடைபெறும். ஒன்பதாம் நாள் விடியற்காலையில் கூத்தப்பெருமானும் சிவகாமியம்மையும் சிற்றம்பலத்தினின்று எழுந்தருளித் தேர்மேல் அமர்ந்து திருவீதியில் உலா வருவர். மாலையில் தேரிலிருந்து இறங்கி, ஆயிரக்கால் மண்டபத்திற்கு எழுந்தருள்வர். மறுநாள் பலரும் கண்டு மகிழ, விடியற்காலையில் திருமஞ்சனம் கொண்டருள்வர். நண்பகலில் ஆயிரக்கால் மண்டபத்தினின்று புறப்பட்டு நடனக்காட்சியை அன்பர்கட்கு அருளிச் சிற்றம்பலத்திற்கு எழுந்தருள்வர். கூத்தப்பெருமான் நடனமாடிக் கொண்டு வரும் அழகிய காட்சியே தரிசனம் எனச் சிறப்பித்துப் போற்றப்பட்டு வருகின்றது. தேர்த்திருவிழாவிற்குக் கூத்தப்பெருமான் புறப்பட்டு வரும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அப்படியே அவர் ஆடிக்கொண்டு வருவது போலவே தோன்றும்.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் இரத்தினசபையில் ஒன்று, கனகசபையில் மூன்று, வெள்ளியம்பலத்தில் ஒன்று என ஐந்து நடராசர் திருமேனிகள் உள்ளன. இவ்வைந்து நடராசர் திருமேனிகளும் மார்கழித் திருவாதிரையன்று புறப்படும். இந்நடராசர் திருமேனிகளுள் வெள்ளியம்பல நடராசர் திருமேனி கஜசம்ஹார விமானத்தில் புறப்படும். மற்ற நடராசர் திருமேனிகள் சப்பரத்தில் எழுந்தருளும்.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் மார்கழித் திருவாதிரையன்று ஊர்த்துவத் தாண்டவ நடராசர் திருமேனி புறப்படும். திருவாதிரையன்று விடியற்காலை வெள்ளை சாத்துபடி உற்சவம் நடைபெறும். அப்பொழுது நடராசர் விநாயகர் கோயில் வரை சென்று வருவார். வெள்ளை சாத்துபடி என்பது வெண்மையான பூக்களாலான அலங்காரம். வெண்மையான பூக்கள் கிடைக்காத வேளையில், மற்ற நிறப் பூக்களைச் சாத்தி, அதன்மேல் வெண்துணியால் மூடிவிடுவர்.

அன்று காலை எட்டு மணியளவில் நடராசர் புறப்பட்டுப் பழையனூர் செல்வார். பழையனூர் என்பது திருவாலங்காட்டி லிருந்து இரண்டு மைல் தொலைவில் அமைந்துள்ளது. அவ்வூர் வீதிகளில் வலம்வந்த பின், பன்னிரண்டு மணியளவில் நடராசர் திருவாலங்காடு திரும்புவார். திருவாலங்காட்டில் மாடவீதி களில் வலம் வந்தபின் ஒரு மணியளவில் அனுக்கிரகத் தரிசனம் நடைபெறும்.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் உள்ள பெரிய நடராசர் திருமேனி வெளியே புறப்படுவது இல்லை; சிறிய நடராசர் திருமேனிதான் விழாக்காலங்களில் புறப்படும். திருவாதிரையன்று விடியற்காலை இரண்டு மணி முதல் நடராச ருக்குத் திருமுழுக்கு நடைபெறும். இத்திருமுழுக்கு தாமிர சபையில் நிகழும். திருமுழுக்கு முடிந்தவுடன் தீபாராதனை யுடன், திருவெம்பாவை இருபது பாடல்களும் பாடப்பெறும்; பின்னர் நடனம் நிகழும். இந்நடனத்தை இறைவன் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகியோருக்காக ஆடியதாகப் புராணக் கதை. எனவே, அவர்களைப்போல் இருவரும், முனிவராக ஒருவரும் வேடந்தரித்து தரிசனம் காண்பர். அறுபத்துமூன்று நாயன்மார் களும், பஞ்சமூர்த்திகளும் அத்தரிசனத்தைக் காண வருவர். அம்பாள் மட்டும் தனியாக ஒரு மூலையில் இருந்து தரிசனம் காண்பாள்.

இக்கோயிலுக்குரிய பதஞ்சலி, வியாக்கிரபாதர் புராணக் கதை, சிதம்பரம் நடராசர் கோயிலுக்குரியது. அதன் சிறப்புக் கருதி, அக்கதையை இக்கோயிலுக்கும் சேர்த்துக் கூறினர்.

குற்றாலம் குற்றாலநாதர் கோயிலில் மார்கழித் திருவா திரைக்குப் பத்துநாள் உற்சவம் நடைபெறும். அவ்விழாவில் ஏழாம் நாள் இரவு நடராசர் வெள்ளை சாத்தியுடன் புறப் படுவார். புறப்படுவதற்கு முன் தாண்டவத் தீபாராதனை நடைபெறும். இரதவீதி வழியாக நடராசர் சித்திரசபைக்குச் செல்வார்; மறுநாள் காலை பச்சை சாத்தியுடன் தாண்டவத் தீபாராதனை சித்திரசபையில் நடைபெறும். அதன்பின் இரத வீதி வழியாக நடராசர் குற்றாலநாதர் கோயிலுக்குத் திரும்பு வார். பச்சை சாத்தி என்பது பச்சை மலர்களாலான மாலை களைக் குறிக்கும்.

## மற்ற கோயில்களில் திருவாதிரை விழா

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலிலும், கோனேரி ராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலிலும், பட்டீஸ்வரம் தேனுபுரீசுவரர் கோயிலிலும், பேரூர் பட்டீசுவரர் கோயிலிலும், திருச்செங்கோடு கைலாசநாதர் கோயிலிலும், அவிநாசி அவிநாசி லிங்கேஸ்வரர் கோயிலிலும், திருச்சி தாயுமானவர் கோயிலிலும், திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் கோயிலிலும், கடம்பர்கோயில் கடம்பவனேஸ்வரர் கோயிலிலும், திருவாடானை ஆதிரத்னேஸ் வரர் கோயிலிலும், திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலிலும், திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலிலும், திருச்சுழி திருமேனிநாதர் கோயிலிலும், திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலிலும், மாயவரம் மாயூரநாதசுவாமி கோயிலிலும், திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலிலும், சீர்காழி தோணியப்பர் கோயிலிலும் உள்ள நடராசர் திருமேனிகள் மார்கழித் திருவாதிரையன்று புறப்பட்டு, வீதியுலா வந்து, ஆனந்த தாண்டவக் காட்சியை நல்குகின்றன.

கும்பகோணம் நாகேஸ்வரன் கோயிலிலும், திருவலஞ்சுழி சடைமுடிநாதர் கோயிலிலும், திருப்புறம்பயம் சாட்சிநாதர் கோயிலிலும், தாராசுரம் ஐராவதேசுரர் கோயிலிலும், திருவெறும்பூர் எறும்பீசுவரர் கோயிலிலும், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலிலும், தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலிலும், கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலிலும், திருவாரூர் அரநெறியப்பர் கோயிலிலும், திருவொற்றியூர் தியாகராஜசுவாமி கோயிலிலும், திருவான்மியூர் மருந்தீசுவரர்

கோயிலிலும் உள்ள ஆனந்த தாண்டவத் திருமேனிகள் மார்கழித் திருவாதிரையன்று மட்டும் புறப்படுகின்றன. மற்ற நாட்களில் புறப்படுவதில்லை.

சுவாமிமலை சுவாமிநாதசுவாமி கோயிலில் சபாபதி பாகுலே சுப்பிரமணியர்தான் மார்கழித் திருவாதிரை அன்று புறப் படுவார்.

குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலில் உள்ள சதுரதாண்டவர் திருமேனி மார்கழித் திருவாதிரைக்கு மட்டும் புறப்படுகிறது.

திருவாசி மாற்றுரைவரதீசுவரர் கோயிலில் உள்ள முயல கனற்ற நடராசர் மார்கழித் திருவாதிரைக்கு மட்டும் புறப்படு கிறார்.

தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலில் திருவாதிரைக்கு முந்திய நாள் இரவு நடராசர் வெள்ளை சாத்துபடியுடன், கொங்கணேஸ் வரர் கோயில் வரை சென்று வருவார். அக்கோயிலில் தீபாராதனை நிகழும். அக்கோயிலுக்குச் செல்லும் பொழுது, மேளவாத்தியமின்றிச் செல்வார்; திரும்பி வரும்பொழுது மிருதங்கம் மட்டும் வாசிக்கப்படும். கோயிலுக்குத் திரும்பியதும் திருமுழுக்கு, தீபாராதனை நடைபெறும். அதன்பின் தரிசனம் நிகழும். பின்னர்தான் நான்கு மாடவீதிகளில் நடராசர் உலா வருவார். அப்பொழுது உலகம் சுபிட்சமாக இருக்க நெல் தெளிக்கப்படுகிறது. அந்த நெல்லைத் தானியத்தோடு சேர்த்து வைத்தால் தானியம் பெருகும் என்ற நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் நடனசபை யிலுள்ள அம்பலவாணர் திருமேனி மார்கழித் திருவாதிரைக்கு மட்டும் புறப்படும்.

மாரியூர் கோயிலில் உள்ள அம்மன் பெயர் மரகதாம்பாள். உத்தரகோச மங்கையில் உள்ளது மரகத நடராசர். எனவே, இங்கிருந்து ஒரு சிறிய நடராசர், மரகத நடராசருக்குப் பதிலா கத் திருவாதிரைத் திருவிழாவன்று அங்குச் செல்வார்.

தென்காசி காசி விசுவநாதர் கோயிலில் திருவாதிரைக்கு நடைபெறும் பத்துநாள் திருவிழாவில் ஏழாம் நாள் இரவும், எட்டாம் நாள் காலையும் நடராசர் புறப்படுவார். ஏழாம் நாள் இரவு ஒன்பது மணிக்கு நடராசர் புறப்பட்டு, வீதியுலா வருவார்; பின் இரண்டு மணியளவில் வெள்ளை சாத்தியுடன்

நடர்ாசர் புறப்பட்டு, கோயிலின் உள்ளே சுற்றி வருவார். அதன்பின் காலையில் பச்சை சாத்தியுடன் நடராசர் புறப்பட்டு வீதியுலா வருவார்.

விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயிலில் மார்கழித் திருவாதிரையன்று காலை நான்கு மணியளவில் நடராசர், தரிசனம் வழங்குவார்; ஆறு மணிக்கு வீதியுலா வருவார். பிற்பகல் ஒரு மணியளவில்தான் அவர் கோயிலுக்குத் திரும்புவார்.

பாபநாசம் பாபவிநாசர் கோயிலில் மார்கழித் திருவாதிரை விழா பத்து நாட்கள் நடைபெறும். அவ்விழாவில் ஏழாம், எட்டாம், பத்தாம் நாட்களில் நடராசர் புறப்படுவார்.

சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீஸ்வரர் கோயிலில் உள்ள நடராசர் திருவாதிரையன்று காலை வெள்ளை சாத்துபடியுடன் விநாயகர் கோயில் வரை சென்று திரும்புவார். விநாயகர் கோயிலின் முன் தீபாராதனை நடைபெறும். பின்னர் நடராசரும், சிவகாமியும் நின்ற இடத்திலேயே ஐந்து சுற்று சுற்றியபின் கோயிலுக்குத் திரும்புவர். மீண்டும் காலை 10 மணியளவில் நடராசர் புறப்பட்டு மாடவீதிகளில் வலம் வருவார்.

சென்னை சிந்தாதிரிப்பேட்டை காய்கறிக்கடை அருகில் மார்கழித் திருவாதிரையன்று சந்திப்பு உற்சவம் நடைபெறும். அன்று சிந்தாதிரிப்பேட்டையில் உள்ள கோயில்களிலிருந்து நடராசர், விநாயகர் முதலியோர் வருவர். நான்கு வீதிகள் கூடும் இடத்தில் இவ்வுற்சவம் நடைபெறும். அப்பொழுது எல்லாக் கோயில் சுவாமிகளுக்கும் நைவேத்தியம், தீபாராதனை மாலை மரியாதை நடைபெறும். தீபாராதனை எல்லா சுவாமிக்கும் ஒரே நேரத்தில் நடைபெறும். இதேபோல் கொத்தவால்சாவடி அருகில் உள்ள அடிபட்ட விநாயகர் கோயிலின் பக்கத்தில் சந்திப்பு உற்சவம் நடைபெறும். அதில் பெத்து நாய்க்கன்பேட்டையில் உள்ள கோயில்களின் நடராசர்,விநாயகர் ஆகியோர் கலந்துகொள்வர். மேற்கண்ட முறையிலேயே அங்கும் தீபாராதனை நிகழும். ஒரே இடத்தில் பல கோயில் நடராசரைக் கண்டு, மக்கள் ஆனந்த வெள்ளத்தில் திளைப்பர். மேற்கண்ட இடங்களில் உள்ள கோயில்களில் நடராசர் இல்லாத நிலையில் விநாயகர் சந்திப்பு உற்சவத்தில் கலந்துக்கொள்வார். எனவே, இச்சந்திப்பு உற்சவம் நடராசர் வழிபாட்டிற்கே உரிய ஒன்று.

## ஐவகை மன்றங்களில் விழாக்கள்

சிதம்பரம் நடராசர் கோயிலில் நடைபெறும் பெரிய திருவிழாக்களுள் ஒன்று ஆனித்திருமஞ்சனமாகும். இவ்விழா பத்து நாட்கள் நடைபெறும். இவ்விழாவில் ஒன்பதாம் நாள் விடியற்காலையில் கூத்தப் பெருமானும் சிவகாமியம்மையும் சிற்றம்பலத்தினின்று எழுந்தருளி, தேர்மேல் அமர்ந்து திருவீதி யில் உலா வருவர். மாலையில் தேரிலிருந்து இறங்கி, ஆயிரக் கால் மண்டபத்திற்கு எழுந்தருள்வர். மறுநாள் பலரும் கண்டு மகிழ திருமுழுக்குக் கொண்டருள்வர். நண்பகலில் ஆயிரக்கால் மண்டபத்தினின்று புறப்பட்டு நடனக் காட்சியை அன்பர்கட்கு அருளி சிற்றம்பலத்திற்கு எழுந்தருள்வர். கூத்தப்பெருமான் நடனமாடிக்கொண்டு வரும் அழகிய காட்சியே தரிசனம் எனச் சிறப்பித்துப் போற்றப்பட்டு வருகின்றது.

மார்கழித் திருவாதிரையன்று மாணிக்கவாசகருக்குப் பத்து நாள் உற்சவம் நடைபெறும். மாலை வேளையில் தீபாராதனை யின் போது, மாணிக்கவாசகரை நடராசர் திருமேனியின்முன் எழுந்தருளச் செய்து, திருவெம்பாவைப் பாடல்கள் பாடப்படும். ஒவ்வொரு பாடலின்பொழுதும் சுவாமிக்குத் தீபாராதனை செய்யப்படும்.

தை மாதம் பூச நட்சத்திரத்திற்குப் பத்து நாட்களுக்கு முன் தொடங்கி, பதஞ்சலி, வியாக்கிரபாதர், சைமினி ஆகிய மும்மூர்த்திகளும் இரவில் எழுந்தருளி, மூன்றாம் பிரகாரத்தில் வலம் வருவர். அவர்கள் மூலநாதர் சந்நிதி வந்தவுடன், சுவாமிக்கு அர்த்தஜாம தீபாராதனைச் செய்யப்படும். அப்பொழுது மேற்கண்ட மும்மூர்த்திகளுக்கும் தீபாராதனை செய்யப்படும். தைப்பூசத் தினத்தன்று காலையில், பஞ்சமூர்த்திகளுடன், பதஞ்சலி, வியாக்கிரபாதர், சைமினி முனிவரும் வீதியுலா வருவர். அன்று கனகசபையில் 15 மூட்டை அரிசிக்குத் தயிர்சாதப் பாவாடையுடன் தீபாராதனை நடக்கும். அன்றுதான் மேற்கண்ட மும்மூர்த்திகளும் இறைவனின் ஆனந்த தாண்டவத்தைக் கண்டு களித்த நாள். இறைவனின் முன் இலை யில் படைக்கப்படும் நைவேத்தியமே பாவாடை எனப்படும்.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் திருமஞ்சனத்தன்றும், மார்கழித் திருவாதிரையன்று நடைபெறும் திருமுழுக்குப்போல் நிகழும். அதன்பின்தான் தரிசனம் நடைபெறும். அக்கோயிலில் மார்கழி மாதம் பத்து நாட்கள் மாணிக்கவாசகர் உற்சவம்

நடைபெறும்; அந்நாட்களில் எச்சந்நிதியிலும் திருவெம்பாவைப் பாடல்கள் பாடப்பெறும்; பஞ்சபுராணம் பாடப் பெறுவதில்லை.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் சித்திரை, ஆவணி, தை, மாசி ஆகிய மாதங்களில் பெரிய திருவிழாக்கள் நடைபெறும். அத்திருவிழாக்களில் ஏழாம் நாள் காலை நடராசர் புறப்படுவார். அவ்விழா ஊடல் உற்சவம் என்று அழைக்கப்படுகிறது. நடராசர், சிவகாமியுடன் வீதியுலா வந்தபின், கம்பத்தடி மண்டபத்திற்கு வரும்பொழுது, சிவகாமி உள்ளே வந்துவிடுவார். அப்பொழுது சுந்தரமூர்த்தி இருவருக்கும் தூது வருவார். பின்னர் நடராசர் கம்பத்தடி மண்டபத்தை மூன்று முறை வலம் வருவார். மூன்றாவது சுற்றின்போது நடராசருடன் சிவகாமியும் உடன் வந்து சுற்றுவார். பின்னர், இருவரும் கோயிலினுள் செல்வர். மக்கள் வாழ்க்கையில் நிகழும் ஊடலை, காலப்போக்கில் இறைவனுக்கும் அமைத்து விட்டனர். அதன் விளைவாகவே, 'ஊடல் உற்சவம்' நடைபெறுகிறது.

திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலில் பங்குனி மாதம் பெருந்திருவிழா நடைபெறும். அத்திருவிழாவில் பத்தாம் நாள் உத்திரத்தன்று நடராசர் வீதியுலா வருவார். மார்கழித் திருவாதிரையன்று நிகழ்ந்தது போல், பங்குனி உத்திரத்தன்றும் நடைபெறும். நடராசருக்குப் பதினோராவது நாள் சாந்தி அபிடேகம் நிகழும்; அதன் பின்னர், இரத்தின சபைக்கு எழுந்தருள்வார்.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் ஆனியில் நடைபெறும் பத்து நாள் விழாவில் ஏழாம் நாள் சிறிய நடராசர் திருமேனி புறப்பட்டு வீதியுலா வரும். ஆனி மாதத்தன்று தாமிர சபை நடராசருக்குச் சந்தனம் சாத்தப்படுகிறது. அக்கோயிலில் பத்துநாள் மாணிக்கவாசகர் உற்சவம் நடைபெறுகிறது. அவ்விழாவின் போது, கோயிலில் தேவாரம் பாடப்பெறுவதில்லை; திருவெம்பாவைப் பாடல்கள்தான் பாடப்பெறும்.

அக்கோயிலில் சௌந்தர்ய சபையில் உள்ள நடராசர் தைப்பூசம் கழிந்த மறுநாள் தரிசனம் புரிவார். அவர் நடனமாடியபின் மறைந்திடுவார். அம்பாள் பொற்றாமரைக் குளம், கருமாரி தீர்த்தம் ஆகிய இடங்களில் எல்லாம் தேடிவிட்டு, சந்தி விநாயகர் கோயிலுக்குச் சென்று விடுவார். அப்பொழுது சுவாமி ரிஷப வாகனத்தில் சென்று காட்சி கொடுப்பார். உமாதேவிக்காக இறைவன் ஆடியதை இந்நிகழ்ச்சி குறிக்கிறது.

ாலம் குற்றாலநாதர் கோயிலில் ஐப்பசி விசுத்திருவிழா,
மாத இறுதியில் தொடங்கி, ஐப்பசி விசுவோடு பத்து
முடிய நடைபெறும். அத்திருவிழாவில் ஏழாம்நாள்
ள்ளை சாத்தியுடன் தாண்டவத் தீபாராதனை நடை
பின்னர் அவர், இரத வீதி வழியாகச் சித்திரசபைக்குச்
மறுநாள் காலை பச்சை சாத்தியுடன் தாண்டவத்
னை நடைபெறும்; பின்னர் இரத வீதி வழியாகக்
குத் திரும்புவார். இதைப் போலவே, சித்திரை விசுத்
ும் பத்து நாட்கள் நடைபெறும். அத்திருவிழாவும்
ாத இறுதியில் தொடங்கி, சித்திரை விசுவோடு பத்து
நிகழும். ஐப்பசி விசுத் திருவிழாவில் ஏழாம்நாள்
ிறது போல், சித்திரை விசுத் திருவிழாவிலும் நடராசர்
ட்டாம்நாள் காலை திரும்புவார்.

**பில்களில் விழாக்கள்**

கேஸ்வரம் நாகநாதசுவாமி கோயிலில் கார்த்திகை
த்து நாட்கள் நடைபெறும் பெரிய திருவிழாவில்
ற்சவம்) ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாவன்று இரவு
புறப்படுவார்.

டைமருதூர் மகாலிங்கசுவாமி கோயிலில் நடை
ரிய திருவிழாவில் ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழா
ம்; மறுநாள் காலை நடராசர் புறப்படுவார்.

ாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயிலில் தை மாதம்
ம் பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை
புறப்படுவார்.

ஙரிராஜபுரம் உமாமகேசுவரர் கோயிலில் போதிய
இல்லாத காரணத்தால், பெரிய திருவிழா நடத்
்லை. திருவிழாவின்போது பத்தாம் நாள் காலை
புறப்படுவார்.

காணம் நாகேஸ்வரன் கோயிலிலும் போதிய வரு
மயால், ஆனித்திருமஞ்சன விழாவும், பெரிய
ம் நடைபெறுவதில்லை.

்வரம் தேனுபுரீஸ்வரர் கோயிலில் ஆனித் திருமஞ்
ம், பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலையும்
புறப்படுவார்.

திருச்சக்திமுற்றம் சிவக்கொழுந்தீசர் கோயிலில் பெரிய திருவிழா போதிய வருமானம் இல்லாத காரணத்தால் நின்று விட்டது.

நல்லூர் கலியாணசுந்தரேசுவரர் கோயிலில் பெரிய திருவிழா தற்போது நடைபெறுவதில்லை. அவ்விழா நடைபெற்றபோது, பத்தாம் நாள் காலை தேர்க்கால் பார்ப்பதற்குச் சதுர தாண்டவ நடராசர் திருமேனி எடுத்துச் செல்லப்பட்டது.

திருவலஞ்சுழி சடைமுடிநாதர் கோயிலில் மார்கழித் திருவா திரைத் தவிர மற்ற விழாக் காலங்களில் நடராசர் புறப் படுவது கிடையாது.

சுவாமிமலை சுவாமிநாதசுவாமி கோயிலில் சபாபதி பாகுலே சுப்பிரமணியர் திருமேனிதான் பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை தேர்க்கால் பார்க்க புறப்படும்.

திருப்புறம்பயம் சாட்சிநாதர் கோயிலிலும், தாராசுரம் ஐராவதேசுரர் கோயிலிலும் பெரிய திருவிழா, தற்போது நடைபெறுவதில்லை.

பேரூர் பட்டீசுவரர் கோயிலில் பங்குனி மாதம் நடைபெ றும் பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை கோமுனி, பட்டிமுனி, சுந்தரமூர்த்தி, அதிமூர்க்கம்மன் ஆகிய நால்வருக் கும் நடராசர் காட்சியளிக்கிறார். கோமுனி, பட்டிமுனி ஆகிய முனிவர்களுக்காக இறைவன் பங்குனி மாதம் பேரூரில் நடனம் புரிந்தான் என்று பேரூர்ப்புராணம் தெரிவிக்கிறது.[41]

அக்கோயிலில் ஆனித் திருமஞ்சனத்தன்று நாற்று நடல் உற்சவம் நடைபெறுகிறது. சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் தாமி ருக்கும் இடம் தெரியக்கூடாது என்பதற்காக, இறைவனும் இறைவியும் பள்ளன் பள்ளியாக வயலில் வேலை செய்கின்றனர். நந்தி தேவரிடமும் தாமிருக்குமிடம் கூறவேண்டாம் என்று இறை வர் கட்டளையிடுகிறார். ஆனால், நந்திதேவர் சுந்தரமூர்த்தி வந்தவுடன், இறைவன் வயலில் வேலை செய்யுமிடம் நோக்கி, தலையைத் திருப்பிக் காட்டுகிறார். சுந்தரமூர்த்தியும் இறைவ னைக் கண்டு வணங்குகிறார். இச்செய்தியை விளக்கும் வகை யில், இன்றும் உற்சவம் நடைபெறுகிறது.

திருச்செங்கோடு கைலாசநாதர் கோயிலில் பெரிய திருவிழா நடைபெறுவதில்லை. அவ்வூரிலுள்ள அர்த்தநாரீசுவரர் கோயில் திருவிழாவிற்குத்தான் கைலாசநாதர் கோயிலில் உள்ள நடராசர்

புறப்படுவார். அக்கோயிலில் ஆனித் திருமஞ்சனத்தன்று நடராசர் புறப்பாடு உண்டு; வைகாசி மாதப் பெரிய திருவிழா விலும் தேர்த்திருவிழாவிற்கு மறுநாள் காலை நடராசர் புறப்படுவார்.

கொடுமுடி மகுடேசுவரர் கோயிலில் சித்திரை மாதப் பெரு விழாவில் பத்தாம் நாள் காலை குஞ்சித தாண்டவர் என அழைக்கப்படும் சதுரதாண்டவர் புறப்படுவார்.

அவிநாசி அவிநாசிலிங்கேஸ்வரர் கோயிலில் மார்கழி மாதம் மாணிக்கவாசகருக்குப் பத்து நாட்கள் உற்சவம் நடைபெறு கிறது. அக்கோயிலில் பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை நடராசர் புறப்படுவார்.

திருச்சி தாயுமானவர் கோயிலில் ஆனித் திருமஞ்சனத்தன் றும், சித்திரைப் பெருவிழாவில் பத்தாம் நாள் காலையிலும் நடராசர் புறப்படுவார்.

திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் கோயிலில் ஆனித் திருமஞ் சனத்தன்றும், தை மாதப் பெருவிழாவில் பத்தாம் நாள் காலையிலும், பங்குனி மாதப் பெருவிழாவில் பத்தாம் நாள் காலையிலும் நடராசர் புறப்படுவார்.

கடம்பர்கோயில் கடம்பவனேஸ்வரர் கோயிலில் மாசிமாதப் பெருந்திருவிழாவில் பத்தாம் நாள் காலை முயலகனற்ற நடராசர் வீதியுலா வருவார்.

இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் இராஜசபை யில் உள்ள சபாபதி திருமேனி எந்த விழாவிலும் புறப்படுவ தில்லை. தேவசபை சிதம்பரேசுவரர் மாசி மாதப் பெருந்திரு விழாவில் புறப்படுவார். மாசி மாதப் பெரிய திருவிழாவில் ஏழாம் நாள் இரவிலும், எட்டாம் நாள் காலையிலும் நடராசர் புறப் படுகிறார். ஏழாம் நாள் இரவு நடராசர் ஆடும்போது கணை யாழி காணாமல் போகிறது. சிவகாமி ஊடல் கொள்கிறாள். சுந்தரமூர்த்தி இருவருக்கும் தூது செல்கிறார். மறுநாள் காலை கணையாழி கிடைத்த மகிழ்ச்சியில் சிவகாமிக்கு அருள் புரிய இறைவர் ஆடல்புரிகிறார். அக்கோயிலில் இராஜசபையின் பின்னே பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய இருவரின் சமாதி யுள்ளது.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலில் மார்கழி மாதம் பத்து நாட்கள் மாணிக்கவாசகர் உற்சவம் நடைபெ

றும். அப்பத்து நாட்களுக்கு முன்பு, அக்கோயிலில் திருப்பள்ளி யெழுச்சி பாடப்படும். மாணிக்கவாசகர் உற்சவம் தொடங்கிய அன்று முதல் திருவெம்பாவைப் பாடல்கள்தாம் பாடப்பெறும். அதாவது காப்புக் கட்டுதலுக்குப் பின் திருவெம்பாவை இசைக் கப்பெறும்; தேவாரப் பாடல்கள் இசைக்கப் பெறுவதில்லை.

திருவாடானை ஆதிரத்னேஸ்வரர் கோயில் பெரிய திருவிழா வில் எட்டாம் நாள் காலை பத்து மணிக்கு, ஊடல் உற்சவம் நடைபெறும். அப்பொழுது நடராசர் புறப்படுவார். வீதியுலா வந்தபின், முதலில் சிவகாமி மட்டும் உள்ளே வந்துவிடுவார். பின்னர் நடை சாத்தப்படும். நடராசர் வெளியே இருப்பார். பதினைந்து நிமிடங்கள் கழித்து அம்பாள் வெளியே வருவார். அப்பொழுது பாஸ்கர சேதுபதி காலம் முதல் இராஜராஜேஸ்வரி நாச்சியார் காலம் வரை இக்கோயிலுக்குக் கொடுத்த நிவந்தங் களின் பட்டயம் வாசிக்கப்படும். பின்னர் ஓதுவார், கணக்கர் ஆகியோருக்கு மரியாதை நிகழும். அதன்பின் தீபாராதனை நடைபெறும். பின்னர் நடராசர் சிவகாமியுடன் உள்ளே வருவார்.

அக்கோயிலில் மார்கழி மாதம் பத்து நாட்கள் மாணிக்க வாசகர் உற்சவம் நடைபெறும். அப்பத்து நாட்களும் நடராசரின் முன் மாணிக்கவாசகரை எழுந்தருளச் செய்து திருவெம்பாவைப் பாடல்கள் பாடப்பெறும். ஒவ்வொரு பாடலின் முடிவிலும் ஆராதனை நிகழும்.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் பெரிய திருவிழா வில் எட்டாம் நாள் காலை நடராசர் புறப்படுவார்.

திருப்புவனம் புஷ்பவனேஸ்வரர் கோயிலில் பங்குனி மாதப் பெரிய திருவிழாவில் எட்டாம் நாள் காலை ஊடல் உற்சவம் நடைபெறும். நடராசர் வீதியுலா வந்தபின், சிவகாமி மட்டும் உள்ளே வருவார். பின்னர் சண்டிகேஸ்வரர் இருவருக்குமுள்ள ஊடலைத் தீர்ப்பார். அதன்பின், இருவருக்கும் தீபாராதனை நிகழும். சிவகாமி வெளியே சென்று, நடராசருடன் உள்ளே வருவார்.

திருச்சுழி திருமேனிநாதர் கோயிலில் பெரிய திருவிழா பங்குனி மாதம் நடைபெறும். அத்திருவிழாவில் எட்டாம் நாள் காலை மட்டையடி உற்சவம் நடைபெறும். ஞானசம்பந்தர் நடராசருக்கும் சிவகாமிக்கும் இடையேயுள்ள ஊடலைத் தீர்த்து

வைப்பார். மார்கழி மாதம் பத்து நாட்கள் மாணிக்கவாசகர் உற்சவம் நடைபெறும். ஊடல் உற்சவமே இக்கோயிலில் மட்டையடி உற்சவம் என்றழைக்கப்படுகிறது.

திருவாப்பனூர் திருவாப்புடையார் கோயிலில் பெரிய திருவிழா தற்போது நடைபெறுவதில்லை.

தென்காசி காசிவிசுவநாதர் கோயிலில் மாசி மாதம் நடைபெறும் பெரிய திருவிழாவில் நடராசர் புறப்படுகிறார்.

விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயிலில் பெருந்திருவிழா தற்போது நடைபெறுவதில்லை. மார்கழி மாதம் பத்து நாட்கள் மாணிக்கவாசகர் உற்சவம் நடைபெறும்.

பாபநாசம் பாபவிநாசர் கோயிலில் சித்திரை மாதப் பெருந் திருவிழாவில் ஏழாம், எட்டாம் நாட்கள் நடராசர் புறப் படுவார்.

திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் ஆனித் திருமஞ் சனத்தன்றும், பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலையிலும் நடராசர் புறப்படுவார்.

கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலில் போதிய வருமானம் இல்லாத காரணத்தால், நடராசருக்குரிய ஆறு திருமுழுக்குகளில் மார்கழி தவிர மற்ற நாட்களில் திருமுழுக்கு, தீபாராதனை மட்டும் நடைபெறுகின்றன; நடராசர் புறப்பாடு கிடையாது; பெரிய திருவிழாவும் நடைபெறுவதில்லை.

திருவாரூர் அரநெறியப்பர் கோயிலில் பெரிய திருவிழாவில் நடராசர் புறப்பாடு கிடையாது.

மாயவரம் மாயூரநாதசுவாமி கோயிலில் அம்பாளுக்காக இறைவன் கௌரி தாண்டவம் ஆடியதாகப் புராணக்கதை. ஒவ்வோராண்டும் ஐப்பசி மாதம் 25-ம் தேதி இவ்விழா நடைபெறுகிறது. அம்மன் மயில் வடிவில் சுவாமிக்குப் பூஜை செய்கிறாள். சுவாமி கௌரி தாண்டவம் ஆடுகிறார். நடராசர் சந்நிதியின் முன் மயில் வடிவில் அம்மன் வர இவ்விழா நடைபெறுகிறது. அப்பொழுது இருவருக்கும் தீபாராதனை நிகழ்கிறது. இன்றும் நடராசருக்கு எதிரே மயிலம்மன் திருமேனி உள்ளது. அக்கோயிலில் பெரிய திருவிழா தற்போது நடை

பெறுவதில்லை. அவ்விழா நடைபெற்ற போது, பத்தாம் நாள் காலை தேர்க்கால் பார்ப்பதற்காக நடராசர் புறப்பட்டார்.

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலில் ஆனித் திருமஞ்சனத்தன்றும், மாசி மாதப் பெருந் திருவிழாவில் பத்தாம் நாள் காலையிலும் நடராசர் புறப்படுவார்.

சீர்காழி தோணியப்பர் கோயிலில் ஆனித் திருமஞ்சனத் தன்றும், பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை தேர்க்கால் பார்ப்பதற்காகவும் நடராசர் புறப்படுவார்.

சிந்தாதிரிப்பேட்டை ஆதிபுரீஸ்வரர் கோயிலில் சித்திரை மாதம் நடைபெறும் பெரிய திருவிழாவில் பத்தாம் நாள் காலை நடராசர் புறப்படுவார்.

பொதுவாக, சோழ மண்டலத்தில் உள்ள கோயில்களில் தேர்க்கால் பார்ப்பது என்ற முறை வழக்கில் உள்ளது. இதற்கு நடராசர்தான் செல்வார். ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழா முடிந்தவுடன், மறுநாள் காலை நடராசர் புறப்படுவார். தேரில் அசைந்தாடி வந்த சோமாஸ்கந்தர், நடராசராக ஆனந்தம் கொண்டு ஆடத்தொடங்கும் விழாவே, காலப்போக்கில் தேர்க் கால் பார்க்கும் விழாவாக மாறியிருக்க வேண்டும்.

### பிற செய்திகள்

சிதம்பரம் நடராசர் கோயிலில், சிவனின் மூவகை நிலை களான அருவம், உருவம், அருவுருவம் ஆகியன காணப்படு கின்றன. அருவம் என்பது சிதம்பர இரகசியத்தைக் குறிக் கிறது. அதாவது கண்ணிற்குப் புலப்படாதது. சிதம்பரம் ஆகாயத்தலம். அச்சபையின் மேலே ஒரு சிறிய துவாரம் உள்ளது. அத்துவாரத்தின் மூலம் ஆகாயம் தெரியும்.

இரகசியத்தில் இயந்திரத்துடன், வெள்ளியாலான வில்வ மாலைத் தொங்க விடப்பட்டுள்ளது. இது, மறைநிலையில் இறைவன் இருத்தற்குக் குறியீடாகவுள்ளது. அவ்விரகசியத் திற்குச் செய்யும் பூஜை, ஆகாயத்திற்குச் செய்யும் பூஜையாகக் கருதப்படுகிறது. இதுவே சிதம்பர இரகசியமாகும். உருவம் நடராசர் திருமேனியைக் குறிக்கும். அருவுருவம் நடராசரின் முன்னுள்ள ஸ்படிக லிங்கத்தைக் குறிக்கும். இம்மூன்றையும் ஒருசேர இன்றும் சிதம்பரம் கோயிலில் காணலாம்.

பேரூர் பட்டீசுவரர் கோயிலில் சிதம்பரம் கோயிலின் சபையைப் போலவே சபை அமைந்துள்ளது. அச்சபை முழுவதும்

கனகசபை என்றழைக்கப்படுகிறது. நடராசர் வீற்றிருக்கும் இடம் வெள்ளியம்பலம் என்று வழங்கப்படுகிறது. அச்சபையிலுள்ள நான்கு தூண்களும் நான்கு வேதங்களைச் சுட்டுகின்றன; ஒன்பது சாளரங்கள், நம் உடம்பில் உள்ள ஒன்பது துவாரங்களைச் சுட்டுகின்றன. சபையின் மேலுள்ள கலசங்கள் ஐந்தும் ஐவகைக் கலைகளைக் குறிக்கின்றன. அக்கோயிலில் உள்ள துர்க்கையம்மன், சாளரத்தின் வழியே இருபத்து நான்கு மணி நேரமும் தூக்கிய திருவடியை நோக்கிக் கொண்டுள்ளாள். இக்கோயிலின் சபை சிதம்பரம் கோயிலின் சபையைப் போல் தத்துவக் கருத்துடையதாக அமைக்கப்பட்டுள்ளது.

திருப்புத்தூரில் இறைவன் ஆடியதற்குப் புராணக்கதை வழங்கப்படுகிறது. வைகாசி நிறைமதி நாளில், சிவசக்தியாகிய கௌரியம்மை சிவன் திரிபுர சங்கார வெற்றிக்களிப்பில் ஆடிய கூத்தினை மறுமுறையும் காண விரும்பி இறைவனிடம் ஆடல் செய்து அருளவேண்டும் என்று வேண்டுகிறார். சிவனும் திருப்புத்தூரில் உள்ள சிற்சபையில் ஆடியருளினார். கௌரி காண ஆடியதால் கௌரிதாண்டவம் என்ற பெயர் பெற்றது. இலக்குமிதேவி இந்த கௌரிதாண்டவத்தைக் கண்டு வழிபட்டாள். அதனால் இதற்கு இலக்குமி தாண்டவம் என்ற பெயரும் உண்டு. இச்சந்நிதிக்கு நேரே இலட்சுமி சந்நிதி உள்ளது. மகாவிஷ்ணு, இலட்சுமிக்காக ஆடிய தாண்டவத்தைப் பார்க்க வந்ததால், நடராசர் சந்நிதியின் வலப்பக்கம் மகாவிஷ்ணு சந்நிதியுள்ளது. இக்கதையானது சைவ-வைணவ இணைப்பிற்காகப் புனையப்பட்டதாகும். அதற்கேற்ப அவ்வுருவங்களையும் கோயில்களில் அமைத்துவிட்டனர்.

மானூர் அம்பலவாணர் கோயிலில் கருவூர்ச் சித்தருக்கு நெல்லையப்பர் காட்சி கொடுத்த இடத்தில் மிகப் பழமையான ஒரு மண்டபம் இருக்கிறது. அதுதான் சித்திரசபை. அதில் வடக்குச் சுவரில் நடராசருடைய சித்திரம் எழுதப்பெற்று வழிபடப்பெற்றது. அவ்விழா இன்றும் நடைபெறுகிறது. ஆனால் ஓவியம்தான் மறைந்த நிலையில் உள்ளது.

கீழ்வேளூர் அட்சயலிங்கசுவாமி கோயிலில் அகத்தியர் வேண்டுகோளுக்கிணங்கி, ஆனிமாதம் மக நட்சத்திரத்தில் நடராசர் கால்மாறியாடி தரிசனம் வழங்கியதாகப் புராணக் கதை. இங்குதான் முதன்முதலில் கால்மாறியாடியது; பின்னர் தான் மதுரையில் ஆடியது என்றும் கூறப்படுகிறது.[42]

திருவெண்காடு சுவேதாரண்யேசுவரர் கோயிலிலும், தில்லைக் கோயிலின் சபை போன்றே சபை அமைக்கப்

பட்டுள்ளது. இங்கும் ஸ்படிகலிங்கமும், இரகசியமும் உள்ளன. இரகசியமானது நடராசர் திருமேனியின் பின்னுள்ளது. பஞ்சாட்சர இயந்திரத்தின் மேலே வெள்ளியில் வில்வமாலைத் தொங்கவிடப்பட்டுள்ளது. அவ்விரகசியத்திற்குப் புனுகு, ஜவ்வாது, சாம்பிராணி தைலம், பச்சைக் கற்பூரம் ஆகியன சாத்தப்படுகின்றன. இங்கும், சிதம்பரத்தைப்போல சிவனின் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூவகை நிலைகளும் காணப்படுகின்றன.

**திருவாதிரைக்களி**

திருவாதிரைக்களி என்பது திருவாதிரையன்று நடராசருக்குப் படைக்கப்படும் ஒரு நைவேத்தியம். அரிசிரவை, வெல்லம் ஆகியவற்றால் செய்யப்படுவதே திருவாதிரைக்களியாகும். அக்களியானது திருவாதிரையன்று நடராசருக்குப் படைக்கத் தொடங்கியதற்கு ஒரு வரலாற்றுச் செய்திக் காரணமாகும்.

சேந்தனார் தில்லையில் விறகு விற்று, அதன்மூலம் வரும் ஊதியத்தால் நாள்தோறும் அடியார்களுக்கு உணவளித்து வந்தார். ஒரு சமயம் பலநாட்கள் தொடர்ந்து மழை பெய்தது. பசியால் வருத்தமுற்ற சேந்தனார், விறகு விற்றுக் கிடைத்த மாவைத் தம் மனைவியிடம் கொடுத்து, களியாக்கும்படிக் கூறினார். பின்னர், சிவனடியாருக்காகக் காத்திருந்தார். சிவபெருமானே சிவனடியாராக வேடங்கொண்டு, சேந்தனார் இல்லம் அடைந்தார். சேந்தனார் அடியாரை வரவேற்று, அக்களியை மகிழ்வுடன் படைத்தார். அக்களியை உண்டு மகிழ்ந்த அடியார், எஞ்சிய களியையும் கேட்டார். சேந்தனாரும் தமக்கு மறுவேளைக்கு வேண்டும் என்று எடுத்து வைக்காமல், ஒரு பழங்கந்தையில், அக்களியை முடிந்துக் கொடுத்தார். இறைவனும், அக்களியை வாங்கிக் கொண்டு பொன்னம்பலத்தை அடைந்தார்.

இது இவ்வாறாக, தில்லைக் கூத்தனுக்குத் தான் நடத்தும் நாள் வழிபாட்டில் பெருமானது திருவடிச் சிலம்பின் ஒலி கேட்டு மகிழ்வதை நியதியாகக் கொண்ட சோழ மன்னன், அவ்வொலியைக் கேளாது, அன்றிரவு முழுவதும் வருந்தி, பின், துயில் கொண்டான். அவனுடைய கனவில் கூத்தன் தோன்றி, 'வேந்தனே, கவலைப்படாதே, இன்று நாம் சேந்தனளித்த களியமுதை உண்ணச் சென்றமையால், நீ நடத்தும் பூசைக்கு வரத் தாழ்ந்தோம்' என்று கூறி மறைந்தருளினார். விழிப்புற்ற சோழ மன்னனும், விடியற்காலையிலே சேந்தனாரைக் காண விரும்பி, தில்லைக் கோயிலுக்குச் சென்றான்.

பொன்னம்பலத்திலே களியமுது சிந்திக் கிடப்பதைக் கண்ட வேந்தன் தான் இரவில் கண்ட கனவின் உண்மையைத் தில்லை வாழந்தணர் பலருக்கும் தெரிவித்தான். அன்று முதலே திருவாதிரைக்களி சிறப்புப் பெற்றது. இறைவனைக் காண்பதால் தோன்றும் களிப்பும், களியை உண்பதால் தோன்றும் களிப்பும், உள்ளத்திற்கு மேலும் களிப்பினை ஊட்டுகின்றன. இதனாலேயே, 'திருவாதிரைக்களி ஒரு வாயளி' என்ற பழமொழியும் எழுந்தது. சேந்தனாருக்கு, இறைவன் செய்த அருளை, 'பூந்தண் பொழில்சூழ்', என்ற பாடலில் நம்பியாண்டார் நம்பிகளும்,[43] 'அவிழ்ந்த துணியில்' என்ற திருக்களிற்றுப்படியாரில் உய்யவந்த தேவநாயனாரும்[44] பாடிப் போற்றியுள்ளனர்.

**பண்பாட்டுச் செய்திகள்**

நடராசர் திருமேனிகள் பல்வேறு அலங்கார அமைப்புகளுடன் அழகாகக் காண்போர் கண்களைக் கவரும் வகையில் வடிக்கப்பட்டன. அத்திருமேனிகளின் சடைகள் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது எனப் பலவகைகளில் அமைக்கப்பட்டன; பிரபையில் தீப்பிழம்புகள் மூன்று, ஐந்து, ஏழு நாக்குகளுடன் வடிக்கப்பட்டன. முயலகனின் துன்பச்சாயல் புலப்படும்படியும் திருமேனிகள் அமைக்கப்பட்டன. நடராசரின் ஆடல் வேகத்தை உணர்த்தும் உடலமைப்பும் திருமேனிகளில் புலப்பட்டன. இவ்வானந்த தாண்டவத் திருமேனிகள் அல்லாத சதுர, ஊர்த்துவ, கால்மாறியாடும் திருமேனிகளும் கோயில்களில் வைத்து வழிபடப்பட்டன.

அத்திருமேனிகள் நல்லூர் கலியாணசுந்தரேசுவரர் கோயிலிலும், கீழக்காடு விருபாக்ஷீஸ்வரர் கோயிலிலும், திருவாசி மாற்றறிவரதர் கோயிலிலும், குமாரவயலூர் ஆதிநாதர் கோயிலிலும், மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலும், திருவாலங்காடு வடாரண்யேசுவரர் கோயிலிலும், கடம்பர்கோயில் கடம்பவனேஸ்வரர் கோயிலிலும், கீழ்வேளூர் அட்சயலிங்க சுவாமி கோயிலிலும், கொடுமுடி மகுடேசுவரர் கோயிலிலும் உள்ளன. பொருப்புமேட்டுப்பட்டித் திருமேனியும் ஆனந்த தாண்டவமல்லாத, கால் மாறியாடிய தாண்டவத்தைக் குறிக்கும். இம்மாறுபட்ட எண்ணமே, தமிழர்கள் கலையின்மீது கொண்ட பற்றையும், ஆர்வத்தையும் புலப்படுத்துகின்றன.

நடராசருக்கு நடைபெறும் திருமுழுக்குகளும், பூஜைகளும் தமிழர்களின் வழிபாட்டு முறைகளை அறிந்து கொள்ள வழி வகுக்கின்றன.

நடராசர் அமைப்பினை, கல், மரம், சுதை, தஞ்சாவூர்த் தட்டு, ஓவியம் ஆகிய எல்லாவற்றிலும் தமிழர்கள் வடித்தனர். அவை, அவர்களின் கலைத்திறனை வெளிப்படுத்துகின்றன.

இன்று எல்லா ஆடலரங்குகளிலும் நடராசர் திருமேனி காணப்படுகிறது. மேலும், கலை ஆர்வலர்களின் வீடுகளின் வரவேற்பறையிலும் நடராசர் வீற்றிருக்கிறார். இவை, தமிழர்கள் ஆடல் பெருமானிடத்துக் கொண்ட அன்பையும், கலையின்மீது கொண்ட பற்றையும் தெரிவிக்கின்றன.

தமிழர்கள் மட்டுமல்லாது, வெளிநாட்டவர்களும், நடராசரின் குனித்த புருவத்திலும், குமிண் சிரிப்பிலும் மயங்கியுள்ளனர். வெளிநாட்டவர்கள் அத்திருமேனியைத் தம் நாட்டிற்குக் கடத்தியும் சென்றுள்ளனர்.

நடராசருக்காகத் தனிச்சந்நிதி அமைத்ததும், அவருக்கென சபை அமைத்ததும், தமிழர்களின் கட்டிடக்கலைத்திறனை வெளிப்படுத்துகின்றன.

**முடிவுரை**

ஒரு சமுதாயத்தில் உள்ள மக்களின் வாழ்க்கை முறையே பண்பாடாகும். மேலும், ஒரு சந்ததியின் பழக்க வழக்கங்கள் மற்றொரு சந்ததிக்கு இடம்பெயருகின்றன. தமிழர்களுடைய வாழ்க்கை முறையைப் பிரதிபலிப்பதே தமிழர் பண்பாடு. சமயமும் பண்பாடும் பின்னிப் பிணைந்தவை. அத்தகையப் பண்பாட்டுவழிச் சமயத்தில் நடராசர் வழிபாடு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது.

முன்னோர் காட்டிய அல்லது வகுத்த வழியில் செல்லுதலே வழிபாடு என்று கருதப்பட்டிருக்கிறது. முத்தியாகிய பேரின்ப நிலையை அடைய இறைவனை வழிபட வேண்டும் எனும் பொருளினையும் வழிபாடு என்ற சொல்லுக்குக் கொள்ளலாம். சங்ககாலத்தில் வழங்கப்பட்ட வணங்குதல் என்ற பொருளே பிற்காலத்தில் மறுமலர்ச்சியுற்றிருக்கிறது.

தொல்காப்பியர் சிறு பொழுதுகளாக ஆறினைக் கூறுவதைப்போல, நடராசருக்கு ஓராண்டில் ஆறு திருமுழுக்குகள், ஆறு வேளைகளில் நடைபெறுகின்றன.

தில்லையில் ஆனித்திருமஞ்சனத்தன்றும், மார்கழித் திருவாதிரையன்றும் நடராசருக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் திருமுழுக்கு நடைபெறுகின்றது. மற்ற நேரங்களில் கனகசபையில் நடைபெறுகின்றது.

மதுரையில் ஆனித்திருமஞ்சனத்தன்றும், மார்கழித் திருவா திரையன்றும், சிவனின் மறுவடிவம் நடராசர் என்பதைக் குறிக்க, பித்தளையாலான கண்ணாடியைப் பாதி இலிங்கத் தையும்,பாதி நடராசரையும் பார்த்து வைத்து திருமுழுக்குச் செய்கின்றனர்.

அக்கோயிலிலுள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரை யன்று மட்டும் சந்தனாதி தைலம், சாம்பிராணி தைலம் ஆகி யன சாத்தப்படுகின்றன.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் சந்தன நடராச ருக்கு ஆனி மாதமும், மார்கழி மாதமும் சந்தனம் புதிதாகச் சாத்தப்படுகிறது.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமி கோயிலில் உள்ள மரகதக்கல் நடராசருக்கு மார்கழித் திருவாதிரையன்று மட்டும் சந்தனம் சாத்தப்படுகிறது.

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயில் நடராசர் சிற்பம் சாந்தாதாரத்தினால் செய்யப்பட்டதாகையால், அச்சிற்பத்திற் குத் திருமுழுக்குச் செய்யப்படுவதில்லை.

திருப்புவனம், திருச்சுழி, திருவாப்பனூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில் கற்சிற்பங்களுக்கு மார்கழித் திருவாதிரையன்று சாம்பிராணி தைலம் பூசப்படுகிறது. பாபநாசம் கோயிலில் உள்ள கற்சிற்பத்திற்கு மார்கழித் திருவாதிரையன்று புனுகுடன் சேர்த்து சந்தனம் சாத்தப்படுகிறது.

நடராசருக்கு நடைபெறும் திருமுழுக்குகள் மூலம் தமிழர்கள் அவரின்மீது கொண்ட பற்றை அறியமுடிகிறது.

தில்லையில் சிற்சபையிலுள்ள ஸ்படிக லிங்கத்திற்கு நாள் தோறும் ஆறுகாலமும் கனகசபையில் திருமுழுக்கு நடைபெறு கிறது. சிற்சபையிலுள்ள சிதம்பர இரகசியத்திற்குத் தினமும் இரவு 7-30 மணிக்கு வழிபாடு நடைபெறுகிறது.

திருவாலங்காடு கோயிலில் இரத்தின சபையில் உள்ள ஸ்படிகலிங்கத்திற்குத் தினமும் நான்குகாலப் பூஜைகள் நடை பெறுகின்றன.

குற்றாலம் கோயிலில் நடைபெறும் தாண்டவத் தீபாரா தனை மிகவும் சிறப்பு வாய்ந்தது.

திருவெண்காடு கோயிலில் சபையிலுள்ள ஸ்படிக லிங்கத்திற்குத் தினமும் நான்கு காலங்களில் திருமுழுக்குகள் நடைபெறுகின்றன. அச்சபையிலுள்ள இரகசியத்திற்குத் தினமும் காலையில் பூஜை நடைபெறுகிறது.

தென்காசி கோயிலிலும் குற்றாலம் கோயிலில் நடைபெறுவதைப்போல் தாண்டவத் தீபாராதனை நடைபெறுகிறது. தமிழகத்தில் வேறெந்தக் கோயில்களிலும் இத்தீபாராதனை நடைபெறுவதில்லை. இத்தீபாராதனை, தமிழர்களின் கலைப் பண்பாட்டில் சிறப்பான இடத்தினைப் பெறுகிறது.

தில்லையில் மட்டும் நடராசருக்குப் பூஜை நடைபெற்றபின் மற்ற சுவாமிகளுக்கு நடைபெறுகின்றது. ஏனெனில், அக் கோயிலில் நடராசர்தான் முதன்மையானவர். மற்ற கோயில்களில் சிவலிங்கம்தான் முக்கியத்துவம் வாய்ந்தது. எனவே, அதற்கடுத்துதான் நடராசருக்குப் பூஜை நடைபெறுகிறது.

திருவெண்காட்டில் தில்லையில் உள்ளதுபோல் சபை அமைந்துள்ளதால், மாலையில் மட்டும் நடராசருக்கு முதல் பூஜை நடைபெறுகிறது. சோழர்களின் குலத்தெய்வமாக நடராசர் திகழ்ந்ததால், அவர்கள் கட்டிய தஞ்சைப் பிரகதீஸ்வரர் கோயிலில் நடராசருக்கு மாலையில் முதல் பூஜை நடைபெறுகிறது.

தமிழகத்திலுள்ள பெரும்பாலான கோயில்களில் தினமும் ஆறுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன.

பழங்காலந்தொட்டே இலக்கியங்களில் ஆதிரையான் என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதால் திருவாதிரை விழா கொண்டாடப்பட்டதை அறியமுடிகிறது.

சோழர்கள் காலத்தில் தில்லையில் கொண்டாடப்பட்ட மாசித்திருநாள் விழா இப்பொழுது கொண்டாடப்படுவதில்லை.

கல்வெட்டுகளின் மூலம் விழாக்கள் மிகவும் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப்பட்டதை அறியமுடிகிறது. மேலும், அரசர்கள் நடராசர் மேல் கொண்ட பக்தியும், அவர்களின் கொடைத்திறமும் தெள்ளத் தெளிவாகப் புலனாகின்றன.

திருநெல்வேலி கோயிலில் பெரிய நடராசர் திருமேனி வெளியே புறப்படுவதில்லை. பதஞ்சலி, வியாக்கிரபாதர் கதையை, இக்கோயிலுக்கும் சேர்த்துக் கூறியுள்ளனர்.

தமிழகத்துக் கோயில்களில் நடராசருக்கு மார்கழித் திருவாதிரைத் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

திருவாலங்காடு கோயிலிலும், தஞ்சை கோயிலிலும், தென்காசி கோயிலிலும், குற்றாலம் கோயிலிலும் சிந்தாதிரிப்பேட்டை கோயிலிலும் நடராசருக்கு வெள்ளை சாத்துபடி செய்யப்படுகிறது.

சிந்தாதிரிப்பேட்டையிலும், கொத்நவால்சாவடி அருகிலும் மார்கழித் திருவாதிரையன்று சந்திப்பு உற்சவம் நடைபெறும். இச்சந்திப்பு உற்சவத்தினால், பல இடங்களில் உள்ள நடராசர் திருமேனிகளை, ஒரே இடத்தில் வணங்க முடிகிறது; நடராசர் கோயில்களில் இல்லாத நிலையில், விநாயகரும் இவ்வுற்சவத்தில் கலந்துக் கொள்வார். இச்சந்திப்பு உற்சவம் நடராசர் வழிபாட்டிற்கே உரிய ஒன்றாகும்.

மாணிக்கவாசகர் உற்சவத்தின்போது பெரும்பாலான கோயில்களில் தேவாரம் பாடப்பெறுவதில்லை; திருவெம்பாவைப் பாடல்கள்தான் பாடப்பெறும்.

நாற்றுநடல் உற்சவத்தின் மூலம், இறைவன் முன் எச்சாதியினரும் ஒன்று என்பதை அறியமுடிகிறது.

கொடுமுடி கோயிலில் சித்திரைமாதப் பெருவிழாவில் சதுரதாண்டவர் புறப்படுவார். இராமேஸ்வரம் கோயிலில் இராஜசபையில் உள்ள சபாபதி எந்த விழாவிலும் புறப்படுவதில்லை.

மதுரை கோயிலிலும், இராமேஸ்வரம் கோயிலிலும், திருவாடானை கோயிலிலும், திருப்புவனம் கோயிலிலும் கொண்டாடப்படும் ஊடல் உற்சவம், திருச்சுழி கோயிலில் மட்டையடி உற்சவம் என்ற பெயரில் நடைபெறுகிறது. மக்கள் வாழ்க்கையில் நிகழும் ஊடலை, காலப்போக்கில் இறைவனுக்கும் அமைத்துவிட்டனர். அதன் விளைவாகவே, இவ்வுற்சவம் நடைபெறுகிறது.

மாயவரம் கோயிலில், மயிலம்மனுக்காக இறைவன் ஆடிய தாண்டவம் கௌரி தாண்டவம் என்றழைக்கப்படுகிறது.

சோழ மண்டலத்தில் உள்ள கோயில்களில் தேர்க்கால் பார்ப்பது என்ற முறை வழக்கில் உள்ளது. இதற்கு நடராசர் தான் செல்வார்.

இத்தகைய விழாக்கள் தமிழகக் கோயில்களில் நடைபெற்று வந்ததின் மூலம், தமிழ்மக்களின் பண்பாட்டில் நடராசர் வழி பாட்டிற்கு முதன்மை இடம் அளிக்கப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

சிவபெருமானின் அருவத்தைக் குறிக்கும் இரகசியம், சிதம்பரம், திருவெண்காடு ஆகிய இடங்களில் உள்ள கோயில் களில் காணப்படுகின்றன.

சிதம்பரம் கோயிலின் சபையைப் போல, பேரூர் கோயிலின் சபைக்கும் தத்துவக் கருத்துக் கூறப்பட்டுள்ளது.

திருப்புத்தூரில் கௌரி காண இறைவன் ஆடியதால், கௌரி தாண்டவம் என்ற பெயர் வழங்கப்படுகிறது. இவ்வாடலுக்கு இலக்குமி தாண்டவம் என்ற பெயரும் உண்டு.

கீழ்வேளூர் கோயிலில் அகத்தியருக்காக இறைவன் கால் மாறியாடிய கதை வழங்கப்படுகிறது. இங்குதான் முதன் முதலில் கால்மாறியாடியது; பின்னர்தான் மதுரையில் ஆடியது என்றும் கூறப்படுகிறது.

திருவெண்காடு கோயிலிலும், தில்லைக் கோயிலைப் போன்றே சபை அமைக்கப்பட்டுள்ளது.

சிறப்பு வாய்ந்த திருவாதிரைக்களி தோன்றிய வரலாறு விளக்கப்பட்டது.

நடராசர் திருமேனிகள் பல்வேறு அலங்கார அமைப்பு களுடன் ஆனந்த தாண்டவமல்லாத மாறுபட்ட தாண்டவ வடிவில் அமைக்கப்பட்டன. அம்மாறுபட்ட எண்ணம், தமிழர் கள் கலையின்மீது கொண்ட ஆர்வத்தைப் புலப்படுத்துகின்றன.

கலைப் பொருட்களில் நடராசர் வடிவம் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது. இதன் மூலம் தமிழர்களின் கலைப் பண்பாட்டுச் சிறப்பு புலப்படுகிறது.

நடராசருக்காகத் தனிச்சந்நிதி அமைத்ததும், அவருக்கென சபை அமைத்ததும், தமிழர்களின் கட்டிடக்கலைத் திறனை வெளிப்படுத்துகின்றன.

## குறிப்புகள்

1. கலைக்களஞ்சியம், ப. 691.
2. மேற்படி, ப. 690.
3. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 4.
4. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், தமிழும் பிற பண்பாடும், பக். 1-2.
5. க. ப. அறவாணன், தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப. 36.
6. மேற்படி, ப. 38.
7. மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், ப. 1800.
8. க. ப. அறவாணன், மு.கு.நூ., ப. 34.
9. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி, ப. 3545.
10. செந்தமிழ் அகராதி, ப. 669.
11. தற்காலத் தமிழ் அகராதி, ப. 348.
12. பிங்கல நிகண்டு, நூ. 415.
13. கழகத் தமிழ் அகராதி, ப. 754.
14. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ. 415.
15. மேற்படி. நூ. 188.
16. மேற்படி, நூ. 109.
17. புறநானூறு, பா. 10.

18. குறுந்தொகை, பா. 9.
19. சிலப்பதிகாரம், 3:120.
20. மேற்படி, 9:40.
21. நாலடியார், பா. 309.
22. திருக்கோவையார், கொளு 214.
23. திருவாய்மொழி நூற்றந்தாதி, பா. 29.
24. காஞ்சிப்புராணம், பா. 249.
25. க. வெள்ளைவாரணனார், தில்லைப்பெருங்கோயில் வரலாறு, ப. 160.
26. மேற்படி, ப. 84.
27. அப்பர் தேவாரம், 6:2:1.
28. சொ. சுப்பிரமணிய கவிராயர், ஆடலரசனின் ஒளிக் கூத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆய்வுமன்ற 80-வது கருத்தரங்கம், ப. 818.
29. ஏ. சி. ஷண்முக நயினார், 'கூத்தப்பெருமானும் குமரகுருபரரும்', **குமரகுருபரன்** மலர் 13-இதழ் 3, ப. 179.
30. பரிபாடல், பா. 8:6.
31. கலித்தொகை, பா. 150:20.
32. திருஞானசம்பந்தர் தேவாரம், 2:47:4.
33. அப்பர், மு. கு. நூ., 4:21:1-10.
34. க. வெள்ளைவாரணனார், மு. கு நூ., ப. 86.
35. A.R.E. 68/1914.
36. கா. ம. வேங்கடராமையா, கல்லெழுத்துக்களில், ப. 5.
37. A.R.E. 68/1914.
38. Ibid. 76/1914.
39. Ibid. 175/1914.
40. Ibid. 285/1928.
41. கச்சியப்ப முனிவர்,பேரூர்ப்புராணம், நிருத்தப்படலம், பா. 55-62.

42. ந. ஜானகிராமன் பேட்டியில் கூறியது, நாள்: 24.02.1990.

43. நம்பியாண்டார் நம்பிகள், கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், பா. 26.

44. உய்யவந்த தேவநாயனார், திருக்களிற்றுப்படியார், பா. 53.

# முடிவுரை

தமிழகத்தில் சிவவழிபாடு காலந்தோறும் இருந்து வந்துள்ளது. சிவபெருமானின் பலவகையான பெயர்களுள், 'ஆடல் வல்லான்' என்ற பெயரேமிகப் பழமையானதாகும். சோழர்கள் காலத்தில் இப்பெயர் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. நடராசர் என்ற சொல் கி.பி. பதிமூன்றாம் நூற்றாண்டில்தான் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

தெய்வத்தின் முன்னர் ஆடியவர்கள், அத்தெய்வமே தமக்கு முன்னோடியாக இருந்து ஆடுவதாகக் கருதினர். அதன் விளைவாகவே, 'ஆடல்வல்லான்' தோற்றம் பெற்றான். இறைவனை, அழித்தல் தொழிலைப் புரிபவனாகக் கருதியவர்கள், அச்செயலைச் சுடுகாட்டில் புரிவதாகக் கூறினர். எனவே, சுடுகாட்டில் ஆடிப்பாடிய சடங்கிலிருந்து ஊழிக்கூத்து தோன்றியது.

சிந்துவெளி காலத்திலேயே ஆடல்வல்லானின் வழிபாடு தோற்றம்பெற்றது. ஐஹோலிலும், பாதாமியிலும் கி.பி. ஆறாம் நூற்றாண்டில்தான் நடராசர் சிற்பங்கள் தோன்றியுள்ளன. தமிழ்நாட்டிலிருந்துதான் நடராசர் வழிபாடு, வடஇந்தியாவிற்குப் பரவியது. முதலாம் இராசராசன் காலத்தில்தான் நடராசருக்குத் தனிச்சந்நிதி அமைக்கப்பட்டது. இன்று எல்லாக் கோயில்களிலும் நடராசருக்குத் தனிச் சந்நிதி அமைக்கப்படுகின்றது.

பேரின்பமயமான நிலையில் இறைவன் ஆடுவதே ஆனந்த தாண்டவம். செம்பியன் மாதேவியார் காலத்தில்தான் சிற்பங்கள் முழுமையான ஆனந்த தாண்டவத் தன்மையைப் பெற்றன. சோழர்களின் குலத்தெய்வமாக நடராசர் விளங்கியதால், அவ் வழிபாடு நாடு முழுவதும் பரவியது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் கிடைத்திருக்கும் திருமேனிகள்தாம் முழுமையான

அமைப்புடன் திகழ்கின்றன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பே ஆனந்த தாண்டவத் திருமேனிகள் இருந்திருக்க வேண்டும் என்பது இலக்கியத்தின்வழி அறியமுடிகிறது.

நடராசர் மட்டுமல்லாமல், கூத்தாடும் விநாயகரும், ஆனந்த தாண்டவ விஷ்ணுவும் கோயில்களில் காணப்படுகின்றனர். சீயமங்கலத்திலுள்ள தூண் சிற்பந்தான் கிடைத்திருக்கும் ஆனந்ததாண்டவச் சிற்பங்களுள் முதன்மையானது. செம்பியன் மாதேவி காலத்தில்தான் முதன்முதலில் ஆனந்த தாண்டவ நடராசர் தேவகோட்டத்தில் இடம்பெற்றார். அடுத்து, உத்தம சோழர் காலத்தில்தான் எல்லாக் கோயில்களிலும் ஆனந்த தாண்டவ நடராசர் சிற்பங்கள் தேவகோட்டத்தில் இடம் பெற்றன.

முற்காலச் சோழர் காலத்தில் கிடைத்த திருமேனிகளில் முதன்மையானது ஒக்கூர் திருமேனி. கிடைத்திருக்கும் ஆனந்த தாண்டவ நடராசர் திருமேனிகளுள் முழு நிறைவானது-முதன்மையானது விருத்தகிரீசுவரர் கோயிலில் உள்ள நடராசர் திருமேனி. பாண்டி மண்டலக் கோயில்களில் வெளியே புறப்படாத திருமேனிகள் மூலவர் திருமேனி என்றழைக்கப் படுகின்றன.

காளிக்கும் இறைவனுக்கும் நடைபெற்ற போட்டிக்கதை திருவாலங்காட்டிற்குரியது; இதனைப் பிற்காலத்தில் சிதம்பரத் திற்குச் சேர்த்துக் கூறிவிட்டனர். சிதம்பரம் கோயில் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் வளர்ச்சிப் பெற்றிருக்க வேண்டும். ஐவகை மன்றங்கள் என்ற வழக்காறு ஓர் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்தான் தோற்றம் பெற்றது. இன்றும் இந்த ஐவகை மன்றங்களும் ஆடல்வல்லானின் திருத் தலங்களாகவே விளங்குகின்றன.

தென்காசி, குற்றாலம் ஆகிய இடங்களிலுள்ள கோயில் களில் தாண்டவத் தீபாராதனை நடைபெறுகிறது. தமிழகத்தில் வேறெந்தக் கோயில்களிலும் இத்தீபாராதனை நடைபெறு வதில்லை. தில்லையில் மட்டும் நடராசருக்குப் பூஜை நடை பெற்றபின், மற்ற சுவாமிகளுக்கு நடைபெறுகின்றது. மற்ற கோயில்களில் சிவலிங்கத்திற்கு அடுத்துதான் நடராசருக்குப் பூஜை நடைபெறுகின்றது.

பழங்காலந்தொட்டே இலக்கியங்களில் ‘ஆதிரையான்’ என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதால், திருவாதிரை விழா கொண்டாடப்பட்டதை அறிய முடிகிறது.

தமிழகத்துக் கோயில்களில் நடராசருக்கு, மார்கழித் திருவாதிரைத் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. மாணிக்கவாசகர் உற்சவத்தின்போது, பெரும்பாலான கோயில்களில் தேவாரம் பாடப்பெறுவதில்லை; திருவெம் பாவைப் பாடல்கள்தான் பாடப்பெறுகின்றன.

நாற்றுநடல் உற்சவத்தின்மூலம், இறைவன் முன் எச்சாதி யினரும் ஒன்று என்பதை அறியமுடிகிறது. மக்கள் வாழ்க்கை யில் நிகழும் ஊடலை, இறைவனுக்கும் அமைத்து விட்டனர். அதன் விளைவாகவே, ஊடல் உற்சவம் கோயில்களில் நடை பெறுகிறது.

சோழ மண்டலத்தில் உள்ள கோயில்களில் தேர்க்கால் பார்ப்பது என்ற முறை வழக்கில் உள்ளது. தேரில் அசைந்தாடி வந்த சோமாஸ்கந்தர், நடராசராக ஆனந்தம் கொண்டு ஆடத் தொடங்கும் விழாவே, காலப்போக்கில், தேர்க்கால் பார்க்கும் விழாவாக மாறியது.

நடராசர் திருமேனிகள் பல்வேறு அலங்கார அமைப்பு களுடன் மாறுபட்ட வடிவில் வடிக்கப்பட்டன. அம்மாறுபட்ட எண்ணமே, தமிழர்கள் கலையின்மீது கொண்ட பற்றையும் பாசத்தையும் புலப்படுத்துகின்றன. நடராசருக்கு நடைபெறும் திருமுழுக்குகளும், வழிபாடுகளும், விழாக்களும் தமிழர்கள் அவரின்மீது கொண்ட பக்தியைப் பறைசாற்றுகின்றன.

இன்று எல்லா ஆடலரங்குகளிலும், வீடுகளின் வரவேற் பறையிலும் நடராசர் வீற்றிருக்கிறார். இவை தமிழர்கள் ஆடல் பெருமானிடத்துக் கொண்ட அன்பையும், கலையின்மீது கொண்ட பற்றையும் தெரிவிக்கின்றன. கலைப் பொருட்களில், நடராசர் வடிவம் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளதால், தமிழர் களின் கலைப்பண்பாட்டுச் சிறப்பு புலப்படுகிறது. தமிழர்களின் கட்டிடக்கலைத்திறனை வெளிப்படுத்துவனவாக, நடராசருக்குத் தனிச்சந்நிதி அமைத்ததும், அவருக்கென சபை அமைத்ததும், விளங்குகின்றன.

நடராசர் வழிபாட்டை, மேற்கொண்டு தத்துவ நோக்கில் ஆராய்வது வரவேற்கத்தக்கது.

இப்படியன் இந்நிறத்தான் இவ்வண்ணத்தான் என்று காட்ட இயலாத இறைவனை, ஆடல்வல்லானாகக் கற்பித்து, அவன் ஆடியனவாகத் தாண்டவங்கள் பற்றிய புராணக்கதைகள் பிற்காலத்தில் பெருகலாயின. இவை யாவும், பேரண்டத்தின் இயக்கத்திற்கு மூல காரணமாகவுள்ள இறைவன் ஆடலின் மூலம் இயங்கிக்கொண்டே இருக்கிறான் எனும் அரிய தத்து வத்தை வெளிப்படுத்துவனவாய் உள்ளன. அத்தகைய இறை வனின் திருமேனிகள் இன்று கலைப்பண்பாட்டின் பெட்டக மாகத் திகழ்கின்றன.

## பின்னிணைப்பு—1

# தேவகோட்டச் சிற்பங்கள்

| மண்டலமும் ஊர்களும் | | கோயில் | உடனுள்ளவை |
|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | |
| 1. | கோனேரிராஜபுரம் | உமாமகேசுவரர் | கா. தே. |
| 2. | ஆடுதுறை | ஆபத்சகாயேசுரர் | காரை. தே. |
| 3. | திருச்சக்திமுற்றம் | சிவக்கொழுந்தீசர் | கா. |
| 4. | திருவலஞ்சுழி | சடைமுடிநாதர் | ,, |
| 5. | திருப்புறம்பயம் | சாட்சிநாதர் | — |
| 6. | தஞ்சாவூர் | பிரகதீசுவரர் | — |
| 7. | மாயவரம் | மாயூரநாதசுவாமி | காரை. |
| 8. | கங்கைகொண்ட சோழபுரம் | கங்கை கொண்ட சோழேச்வரம் | காரை.தே.கா. |

**ஆய்வுக் குறிப்புகள்:**

3, 4, 5 எண்ணுள்ள கோயில்களில் நடராசருக்குச் சடை இல்லை; மற்றவற்றில் உண்டு. பிரபையும், சிவகாமியும் 1 முதல் 8 வரையுள்ள எண்களின் கோயில்களில் இடம் பெறவில்லை; எல்லாக் கோயில்களிலும் தீயானது உள்ளங்கையில் உள்ளது. 3, 4, 6-ஆம் எண்ணுள்ள கோயில்களில் முயலகன் இடம் பெறவில்லை.

| மண்டலமும் ஊர்களும் | | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|---|
| **சோழ மண்டலம்** | | | | |
| 1. | கஞ்சனூர் | அக்நீசுவரர் | வி. | — |
| **பாண்டி மண்டலம்** | | | | |
| 2. | தென்காசி | காசிவிசுவநாதர் | உள். | காரை. பத. வியா. |
| 3. | திருநெல்வேலி | நெல்லையப்பர் | வி. | பத. வியா. |
| 4. | களக்காடு | சத்திவாகீசர் | உள். | — |
| 5. | ஸ்ரீவைகுண்டம் | கைலாசநாதர் | ,, | காரை. |
| 6. | மதுரை | பழைய சொக்க நாதர் | ,, | பத. வியா. |
| 7. | ,, | மீனாட்சியம்மன் | ,, | மா. |
| 8. | ,, | ,, | ,, | — |
| 9. | திருப்பரங் குன்றம் | முருகன் | ,, | — |
| 10. | திருப்புத்தூர் | திருத்தளிநாதர் | ,, | காரை. மா. பத. வியா. |
| 11. | திருப்புவனம் | புஷ்ப வனேஸ்வரர் | வி. | பத. வியா. |
| 12. | திருச்சுழி | திருமேனிநாதர் | உள். | பத. வியா. |
| 13. | திருவாப்பனூர் | திருவாப் புடையார் | ,, | காரை. நந். பத. வியா. |
| 14. | ,, | ,, | ,, | திரு. |
| 15. | பாபநாசம் | பாபவிநாசர் | ,, | காரை. மா. பத. வியா. |
| 16. | சங்கரன் கோயில் | சங்கர நாராயணர் | வி. | காரை. பத. வியா. |
| 17. | உத்தரகோச மங்கை | மங்களநாத சுவாமி | உள். | காரை. பத். வியா. திரு. |

**ஆய்வுக் குறிப்புகள்:**

4-ம் எண்ணுள்ள கோயில் நடராசர் சிற்பத்தில் மட்டும் சடை இல்லை. மற்றவற்றில் உள்ளது. பிரபை, சிவகாமி, முயலகன் ஆகியன 1 முதல் 17 எண்ணுள்ள எல்லாக் கோயில் களிலும் இடம் பெற்றுள்ளன.

# தூண் சிற்பங்கள்

| | மண்டலமும் ஊர்களும் | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | | |
| 1. | திருச்சி | தாயுமானவர் | உள். | — |
| 2. | ,, | உச்சிப்பிள்ளையார் | ,, | — |
| 3. | தஞ்சாவூர் | பிரகதீசுவரர் | வி. | தே. |
| 4. | திருவையாறு | பஞ்சநதீஸ்வரர் | உள். | — |
| **பாண்டி மண்டலம்** | | | | |
| 5. | திருப்பரங்குன்றம் | முருகன் | ,, | — |
| 6. | மதுரை | மீனாட்சியம்மன் | ,, | தே.நந். |
| 7. | இராமேஸ்வரம் | இராமநாதசுவாமி | ,, | — |
| 8. | உத்தரகோச மங்கை | மங்களநாதசுவாமி | ,, | — |
| 9. | திருவாடானை | ஆதிரத்னேஸ்வரர் | வி. | — |
| 10. | திருப்புவனம் | புஷ்பவனேஸ்வரர் | உள். | — |
| 11. | ,, | ,, | ,, | — |
| 12. | திருச்சுழி | திருமேனிநாதர் | வி. | — |
| 13. | ,, | ,, | ,, | — |
| **கொங்குமண்டலம்** | | | | |
| 14. | பேரூர் | பட்டீசுவரர் | உள். | — |
| 15. | ,, | ,, | ,, | — |
| 16. | திருச்செங்கோடு | அர்த்தநாரீசுவரர் | ,, | — |
| **நடுநாடு** | | | | |
| 17. | திருவண்ணாமலை | அருணாசலேசுவரர் | ,, | — |
| **தொண்டைமண்டலம்** | | | | |
| 18. | சிந்தாதிரிப்பேட்டை | ஆதிபுரீசுவரர் | ,, | — |
| 19. | மயிலை | கபாலீசுவரர் | ,, | — |

| 1 | | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| 20. | கந்தகோட்டம் | முத்துக்குமார சுவாமி | உள். | — |
| 21. | திருவொற்றியூர் | தியாகராஜசுவாமி | ,, | — |
| 22. | ,, | ,, | ,, | — |
| 23. | ,, | ,, | வி. | — |
| 24. | மாடம்பாக்கம் | தேனுபுரீசுவரர் | உள். | பத. வியா. |
| 25. | ,, | ,, | ,, | — |
| 26. | ,, | ,, | ,, | — |
| 27. | காஞ்சிபுரம் | ஏகாம்பரநாதர் | ,, | — |
| 28. | ,, | ,, | ,, | — |
| 29. | ,, | கச்சபேஸ்வரர் | ,, | — |
| 30. | ,, | ,, | ,, | — |
| 31. | திருவாலங்காடு | வடாரண்யேசுவரர் | ,, | — |

**ஆய்வுக் குறிப்புகள்:**

13, 16, 18, 27, 28, 29 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் நடராசர் சிற்பத்தில் சடை காணப்படவில்லை. பிரபையானது, 2, 3, 4, 9, 11, 13, 16, 18, 19, 20, 21, 22, 23, 25, 29, 30 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் இடம்பெறவில்லை. 5, 6, 24, 26 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் சிவகாமி இடம் பெற்றுள்ளாள். முயலகன் 1 முதல் 31 எண்ணுள்ள எல்லாக் கோயில்களிலும் காணப்படுகிறான்.

| மண்டலமும் ஊர்களும் | | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | | |
| 1. | கோனேரிராஜபுரம் | உமாமகேசுவரர் | உள். | செம். |
| 2. | கஞ்சனூர் | அக்நீசுவரர் | ,, | பத.வியா. நான். |
| **பாண்டிமண்டலம்** | | | | |
| 3. | பிள்ளையார்ப்பட்டி | கற்பகவிநாயகர் | ,, | — |
| 4. | திருப்புவனம் | புஷ்பவனேஸ்வரர் | ,, | — |
| 5. | சங்கரன்கோயில் | சங்கரநாராயணர் | வி. | — |
| 6. | திருநெல்வேலி | நெல்லையப்பர் | ,, | காரை. முனி.அடி. |
| **தொண்டைமண்டலம்** | | | | |
| 7. | காஞ்சிபுரம் | ஏகாம்பரநாதர் | உள். | — |
| 8. | மாடம்பாக்கம் | தேனுபுரீசுவரர் | ,, | — |
| 9. | திருவொற்றியூர் | தியாகராஜசுவாமி | ,, | பத. வியா. |

**ஆய்வுக் குறிப்புகள்:**

3, 8, 9 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் நடராசர் சிற்பத்தில் சடை காணப்படவில்லை. பிரபையானது 2, 3, 5 எண்ணுள்ள கோயில்களில் காணப்படவில்லை. 1, 3, 4, 5, 7, 9 எண்ணுள்ள கோயில்களில் சிவகாமி இடம் பெறவில்லை. முயலகன் 1 முதல் 9 வரையுள்ள கோயில்களில் இடம் பெற்றுள்ளான்.

| | மண்டலமும் ஊர்களும் | கோயில் | தீ | உடனுள்ள |
|---|---|---|---|---|
| | **சோழ மண்டலம்** | | | |
| 1. | கும்பகோணம் | சோமேசுவர சுவாமி | உள். | — |
| 2. | ,, | ஆதிகும்பேசு வரர் | ,, | பத. வியா. |
| 3. | திருவிடை மருதூர் | மகாலிங்கே சுவரர் | ,, | — |
| 4. | திருவாவடு துறை | கோமுக்தீசு வரர் | ,, | மா. |
| 5. | ,, | ,, | ,, | அடி. |
| 6. | தாராசுரம் | ஐராவதேசு வரர் | — | — |
| 7. | ஆடுதுறை | ஆபத்சகா யேசுவரர் | உள். | — |
| 8. | திருச்சி | தாயுமானவர் | ,, | பத. வியா. |
| 9. | திருவா னைக்கா | ஜம்புகேசுவரர் | — | — |
| 10. | ,, | ,, | உள். | நான். தி. |
| 11. | ,, | ,, | ,, | — |
| 12. | திருவாசி | மாற்றுரை வரதீசுவரர் | வி. | — |
| 13. | கடம்பர் கோயில் | கடம்ப வனேஸ்வரர் | உள். | — |
| 14. | திருவையாறு | பஞ்சநதீஸ் வரர் | ,, | — |
| 15. | ,, | ,, | ,, | — |
| 16. | கீழ்வேளூர் | அட்சயலிங்க சுவாமி | ,, | — |
| 17. | ,, | ,, | — | — |

| 1 | | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| 18. | திருவாரூர் | தியாகராஜ சுவாமி | வி. | — |
| 19. | ,, | ,, | ,, | — |
| 20. | மாயவரம் | மாயூரநாத சுவாமி | உள். | — |
| 21. | ,, | ,, | ,, | — |
| 22. | வைத்தீஸ் வரன் கோயில் | வைத்திய நாதசுவாமி | ,, | — |
| 23. | ,, | ,, | ,, | — |
| 24. | சிதம்பரம் | நடராசர் | ,, | — |
| 25. | ,, | ,, | ,, | மா. பத. |
| 26. | ,, | ,, | ,, | — |
| 27. | ,, | ,, | ,, | பத.வியா. |
| **பாண்டி மண்டலம்** | | | | |
| 28. | மதுரை | மீனாட்சி யம்மன் | ,, | — |
| 29. | ,, | ,, | ,, | — |
| 30. | ,, | ,, | ,, | — |
| 31. | ,, | ,, | ,, | நந். |
| 32. | உத்தரகோச மங்கை | மங்களநாத சுவாமி | ,, | — |
| 33. | ,, | ,, | ,, | — |
| 34. | திருவாடானை | ஆதிரத்னேஸ் வரர் | ,, | பத. |
| 35. | பிள்ளையார்ப் பட்டி | கற்பக விநாயகர் | ,, | பத.வியா. |
| **கொங்கு மண்டலம்** | | | | |
| 36. | பேரூர் | பட்டீசுவரர் | ,, | — |
| 37. | திருச்செங்கோடு | ஆறுமுகசுவாமி | ,, | — |
| 38. | ,, | கைலாசநாதர் | ,, | — |
| 39. | ,, | ,, | ,, | — |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 40. அவிநாசி | அவிநாசிலிங் கேஸ்வரர் | உள். | — |
| 41. ,, | ,, | ,, | நால். |
| **நடுநாடு** | | | |
| 42. திருவண்ணா மலை | அருணாசலேசு வரர் | ,, | — |
| 43. ,, | ,, | ,, | — |
| 44. ,, | ,, | ,, | — |
| 45. விருத்தாசலம் | விருத்தகிரீசு வரர் | ,, | — |
| 46. ,, | ,, | ,, | — |
| 47. ,, | ,, | — | — |
| 48. ,, | ,, | உள். | — |
| 49. ,, | ,, | ,, | — |
| **தொண்டை மண்டலம்** | | | |
| 50. மயிலை | கபாலீஸ்வரர் | ,, | பத.வியா. |
| 51. ,, | ,, | ,, | — |
| 52. ,, | ,, | ,, | — |
| 53. சென்னை | ஏகாம்பரேசுவரர் | ,, | — |
| 54. திருவான்மியூர் | மருந்தீசுவரர் | ,, | — |
| 55. ,, | ,, | ,, | — |
| 56. திருவொற்றியூர் | தியாகராஜ சுவாமி | ,, | — |
| 57. ,, | ,, | ,, | — |
| 58. காஞ்சிபுரம் | சுரகரேசுவரர் | ,, | — |
| 59. ,, | கச்சபேஸ்வரர் | ,, | — |

**ஆய்வுக் குறிப்புகள்:**

1, 2, 3, 4, 5, 7, 8, 10, 11, 14, 15, 16, 20, 21, 34 35, 36, 38, 39, 40, 41, 46, 47, 49, 54, 55, 57, 58 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் நடராசர் சிற்பத்தில் சடை இடம்

பெற்றுள்ளது. 9, 40, 42, 43 ஆகிய் எண்ணுள்ள கோயில்களில் பிரபை இடம் பெறவில்லை. சிவகாமி 7, 10, 11, 18, 24, 28, 29, 30, 31, 37, 45, 46, 47, 50, 53, 54, 55, 59, ஆகிய எண்ணுள்ள கோயில்களில் காணப்பெறவில்லை. 12, 28, 37, 42, 44, 47, 56 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் முயலகன் இடம் பெறவில்லை.

| மண்டலமும் ஊர்களும் | | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | | |
| 1. | கும்பகோணம் | சோமேசுவரசுவாமி | உள். | பத. வியா. |
| 2. | ,, | ஆதிகும்பேசுவரர் | வி. | ,, |
| 3. | ,, | காசிவிசுவநாதர் | ,, | — |
| 4. | சுவாமிமலை | சுவாமிநாதசுவாமி | உள். | - |
| 5. | திருச்சி | மாணிக்கவிநாயகர் | ,, | பத. வியா. |
| 6. | திருவானைக்கா | ஜம்புகேசுவரர் | ,, | ,, |
| 7. | திருவாசி | மாற்றுரை வரதீசுவரர் | வி. | — |
| 8. | திருவையாறு | பஞ்சநதீஸ்வரர் | ,, | பத. வியா. அடி. |
| 9. | திருவெண்காடு | சுவேதாரண் யேசுவரர் | உள். | — |
| 10. | சிதம்பரம் | நடராசர் | ,, | நந். |
| 11. | ,, | ,, | ,, | இந். நந், தி. பி. பத. தே. |
| **பாண்டிமண்டலம்** | | | | |
| 12. | இராமேஸ்வரம் | இராமநாதசுவாமி | ,, | நந். |
| 13. | குன்றக்குடி | ஆறுமுகப் பெருமான் | ,, | மா. |
| 14. | மானூர் | அம்பலவாணர் | ,, | காரை.பத. வியா. |
| **நடுநாடு** | | | | |
| 15. | விருத்தாசலம் | விருத்தகிரீசுவரர் | ,, | — |
| 16. | ,, | ,, | ,, | — |
| **தொண்டைமண்டலம்** | | | | |
| 17. | காஞ்சிபுரம் | ஏகாம்பரநாதர் | ,, | — |
| 18. | ,, | கச்சபேஸ்வரர் | ,, | — |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 19. திருவொற்றியூர் | தியாகராஜசுவாமி | உள். | மா. பத. வியா. |
| 20. திருத்தணி | சகஸ்ர ஈஸ்வரர் | ,, | மா. |
| 21. திருவாலங்காடு | வடாரண்யேசுவரர் | ,, | வியா. |
| 22. ,, | ,, | ,, | இரா. |
| 23. ,, | ,, | உள். | காரை.முனி. |
| 24. ,, | ,, | ,, | ,, |
| 25. ,, | ,, | ,, | ,, |

**ஆய்வுக் குறிப்புகள்:**

*1, 7, 10, 17, 18, 19 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் நடராசர் சிற்பத்தில் சடை காணப்படவில்லை. பிரபையானது 1, 17 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் இடம் பெறவில்லை. சிவகாமி 3, 6, 12, 15, 17, 19 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் காணப்பெறவில்லை. 7–ஆம் எண்ணுள்ள கோயிலில் முயலகன் இடம்பெறவில்லை.*

## மரச் சிற்பங்கள்

| மண்டலமும் ஊர்களும் | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | |
| 1. திருவெண்காடு | சுவேதாரண் யேசுவரர் | உள். | பத.வியா. தே. |
| **பாண்டிமண்டலம்** | | | |
| 2. திருநெல்வேலி | நெல்லையப்பர் | ,, | — |
| 3. மானூர் | அம்பலவாணர் | வி. | — |
| **நடுநாடு** | | | |
| 4. விருத்தாசலம் | விருத்தகிரீசுவரர் | உள். | — |
| **தொண்டைமண்டலம்** | | | |
| 5. திருவொற்றியூர் | தியாகராஜ சுவாமி | ,, | — |

**ஆய்வுக் குறிப்புகள்:**

சடையும் முயலகனும் 1 முதல் 5 எண்ணுள்ள எல்லாக் கோயில்களிலும் நடராசர் சிற்பத்தில் இடம்பெற்றுள்ளன. 1, 4-ம் எண்ணுள்ள கோயில் சிற்பத்தில் பிரபை இடம் பெற வில்லை. சிவகாமி 4-ம் எண்ணுள்ள கோயிலில் மட்டும் இடம் பெற்றுள்ளாள்.

| மண்டலமும் ஊர்களும் | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | |
| 1. கோனேரி ராஜபுரம் | உமாமகேசுவரர் | வி. | பத. வியா. |
| 2. திருவிடை மருதூர் | மகாலிங்கேசுரர் | ,, | அடி. |
| 3. திருவாவடுதுறை | கோமுக்தீசுவரர் | உள். | — |
| 4. பட்டீச்சுரம் | தேனுபுரீசுவரர் | வி. | — |
| 5. திருச்சி | தாயுமானவர் | உள். | பிரு. |
| 6. தஞ்சாவூர் | பிரகதீசுவரர் | வி. | பத. வியா. |
| 7. திருவாரூர் | அரநெறியப்பர் | உள். | — |
| 8. திருவெண்காடு | சுவேதாரண் யேசுவரர் | ,, | — |
| 9. சிதம்பரம் | நடராசர் | வி. | சுந். |
| **பாண்டிமண்டலம்** | | | |
| 10. உத்தரகோச மங்கை | மங்களநாத சுவாமி | உள். | பத. வியா. |
| **நடுநாடு** | | | |
| 11. விருத்தாசலம் | விருத்தகிரீசுவரர் | ,, | ,, |

**ஆய்வுக் குறிப்புகள்:**

2, 9, 11 எண்ணுள்ள கோயில் ஓவியத்தில் சடை காணப்படவில்லை. 8-ம் எண்ணுள்ள கோயில் ஓவியத்தில் பிரபை இடம் பெறவில்லை. சிவகாமி 6,8 எண்ணுள்ள கோயிலில் இடம் பெறவில்லை. 8-ம் எண்ணுள்ள கோயிலில் முயலகன் காணப் பெறவில்லை.

## திருமேனிகள்

| | மண்டலமும் ஊர்களும் | கோயில் | தீ | உடனுள்ளவை |
|---|---|---|---|---|
| **சோழமண்டலம்** | | | | |
| 1. | கும்பகோணம் | ஆதிகும்பேசுவரர் | வி. | — |
| 2. | கீழக்கொற்கை | பிரம்மபுரீசுவரர் | உள். | — |
| 3. | கும்பகோணம் | நாகேஸ்வரன் | வி. | தி.பத. வியா. |
| 4. | ,, | காசிவிசுவநாதர் | உள். | மா.சம். |
| 5. | நாகேஸ்வரம் | நாகநாதசுவாமி | ,, | திரு. |
| 6. | கும்பகோணம் | சோமேசுவரர் | வி. | — |
| 7. | திருபுவனம் | கம்பஹரேசுரர் | உள். | திரு. |
| 8. | திருவிடைமருதூர் | மகாலிங்கேசுவரர் | வி. | — |
| 9. | திருநீலக்குடி | மனோக்ஞாத சுவாமி | உள். | — |
| 10. | திருவிடைமருதூர் | மகாலிங்கேசுவரர் | வி. | — |
| 11. | ,, | ,, | ,, | — |
| 12. | பாணாபுரம் | பாணுபுரீசுவரர் | உள். | — |
| 13. | ஆடுதுறை | ஆபத்சகா யேசுவரர் | ,, | — |
| 14. | திருவாவடுதுறை | கோமுக்தீசுவரர் | வி. | — |
| 15. | கோனேரி ராஜபுரம் | உமாமகேசுவரர் | உள். | பத.வியா. (சு.சி.) |
| 16. | ,, | ,, | வி. | — |
| 17. | ,, | ,, | உள். | — |
| 18. | வைகல் | ஐம்புகாரணி யேசுவரர் | ,, | — |
| 19. | கஞ்சனூர் | அக்நீசுவரர் | ,, | — |
| 20. | திருச்சக்தி முற்றம் | சிவக்கொழுந் தீசுவரர் | ,, | — |
| 21. | முழையூர் | பரசுநாதர் | ,, | — |
| 22. | திருச்சக்தி முற்றம் | சிவக்கொழுந் தீசுவரர் | ,, | — |

| | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| 23. | பட்டீச்சுவரம் | தேனுபுரீசுவரர் | வி. | — |
| 24. | ,, | ,, | உள். | — |
| 25. | நல்லூர் | கலியாண சுந்தரேசுவரர் | வி. | — |
| 26. | திருவலஞ்சுழி | சடைமுடிநாதர் | உள். | — |
| 27. | இன்னம்பூர் | எழுத்தறிநாதர் | ,, | — |
| 28. | தியாகசமுத்திரம் | மகாலிங்கசுவாமி | ,, | — |
| 29. | கீழைப்பழை யாறை | சோமநாதசுவாமி | ,, | — |
| 30. | திருப்புறம்பயம் | சாட்சிநாதர் | ,, | — |
| 31. | தாராசுரம் | ஐராவதேசுரர் | ,, | — |
| 32. | திருச்சி | தாயுமானவர் | ,, | திரு. |
| 33. | திருவானைக்கா | ஜம்புகேஸ்வரர் | வி. | |
| 34. | ,, | ,, | ,, | — |
| 35. | திருவெறும்பூர் | எறும்பீசுவரர் | ,, | மா. திரு. |
| 36. | கடம்பர் கோயில் | கடம்பவனேஸ்வரர் | உள். | — |
| 37. | தஞ்சாவூர் | பிரகதீசுவரர் | ,, | — |
| 38. | ,, | ,, | ,, | மா. |
| 39. | திருவையாறு | பஞ்சநதீஸ்வரர் | ,, | — |
| 40. | கீழ்வேளூர் | அட்சயலிங்கசுவாமி | ,, | — |
| 41. | திருவாரூர் | அரநெறியப்பர் | ,, | — |
| 42. | மாயவரம் | மாயூரநாதசுவாமி | ,, | — |
| 43. | ,, | ,, | ,, | — |
| 44. | ,, | ஐயாறப்பர் | வி. | — |
| 45. | திருவெண்காடு | சுவேதாரண் யேசுவரர் | உள். | — |
| 46. | சீர்காழி | தோணிபுரீசுவரர் | வி. | தே. |
| 47. | திருமுல்லை வாசல் | முல்லைவனநாதர் | உள். | — |
| 48. | சிதம்பரம் | நடராசர் | ,, | — |

| | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| 49. | திருவேட்களம் | பாசுபதேசுரர் | உள். | — |
| 50. | திருக்கழிப்பாலை | பால்வண்ணநாதர் | ,, | — |
| 51. | சிவபுரி | உச்சிநாதேசுவரர் | ,, | — |

பாண்டிமண்டலம்

| | | | | |
|---|---|---|---|---|
| 52. | இராமேஸ்வரம் | இராமநாதசுவாமி | ,, | பத. வியா. காரை. (சு.சி.) |
| 53. | ,, | ,, | ,, | — |
| 54. | ,, | ,, | ,, | — |
| 55. | உத்தரகோச மங்கை | மங்களநாதசுவாமி | ,, | மா. |
| 56. | ,, | ,, | வி. | — |
| 57. | ,, | ,, | உள். | — |
| 58. | மதுரை | மீனாட்சியம்மன் | ,, | — |
| 59. | ,, | ,, | வி. | — |
| 60. | ,, | ,, | உள். | — |
| 61. | ,, | ,, | ,, | — |
| 62. | திருவாடானை | ஆதிரத்னேஸ்வரர் | ,, | மா. பத. வியா. (சு. சி.) |
| 63. | திருப்புத்தூர் | திருத்தளிநாதர் | ,, | — |
| 64. | திருப்புவனம் | புஷ்பவனேஸ்வரர் | வி. | — |
| 65. | திருச்சுழி | திருமேனிநாதர் | உள். | — |
| 66. | திருவாப்பனூர் | திருவாப்புடையார் | ,, | — |
| 67. | தென்காசி | காசிவிசுவநாதர் | வி. | காரை. மா. |
| 68. | ,, | ,, | ,, | — |
| 69. | குற்றாலம் | குற்றாலநாதர் | ,, | — |
| 70. | ,, | ,, | உள். | — |
| 71. | ,, | ,, | ,, | காரை. மா. |
| 72. | சங்கரன் கோயில் | சங்கரலிங்கப் பெருமான் | ,, | காரை. பத. வியா. மா. |
| 73. | திருநெல்வேலி | நெல்லையப்பர் | வி. | — |
| 74. | ,, | ,, | உள். | — |
| 75. | ,, | ,, | ,, | காரை. திரு. |

| 1 | | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| 76. | மானூர் | அம்பலவாணர் | உள். | மா. |
| 77. | விக்கிரமசிங்கபுரம் | சிவந்தியப்பர் | ,, | காரை. மா. |
| 78. | பாபநாசம் | பாபவிநாசர் | ,, | ,, |
| 79. | கட்டாரிமங்கலம் | அழகிய கூத்தர் | ,, | மா. |
| 80. | ஸ்ரீவைகுண்டம் | கைலாசநாதர் | ,, | — |

**கொங்கு மண்டலம்**

| | | | | |
|---|---|---|---|---|
| 81. | பேரூர் | பட்டீசுவரர் | ,, | கோ. ப. திரு. |
| 82. | திருச்செங்கோடு | அர்த்தநாரீசுவரர் | ,, | — |
| 83. | ,, | கைலாசநாதர் | ,, | காரை. மா. |
| 84. | கொடுமுடி | மகுடேசுவரர் | ,, | — |
| 85. | அவிநாசி | அவிநாசிலிங்கேஸ்வரர் | உள். | — |
| 86. | திருமுருகன்பூண்டி | திருமுருகனாதசுவாமி | ,, | — |

**நடுநாடு**

| | | | | |
|---|---|---|---|---|
| 87. | நெய்வேலி | நடராசர் | வி. | — |
| 88. | விருத்தாசலம் | விருத்தகிரீசுவரர் | ,, | — |
| 89. | ஸ்ரீமுஷ்ணம் | நித்தீஸ்வரர் | உள். | — |
| 90. | ,, | ,, | வி. | — |

**தொண்டை மண்டலம்**

| | | | | |
|---|---|---|---|---|
| 91. | காஞ்சிபுரம் | ஏகாம்பரநாதர் | உள். | விநா. |
| 92. | ,, | கச்சபேஸ்வரர் | ,, | — |
| 93. | மணிமங்கலம் | தர்மேஸ்வரர் | ,, | — |
| 94. | திருவாலங்காடு | வடாரண்யேசுவரர் | ,, | — |
| 95. | சென்னை | ஏகாம்பரேசுவரர் | ,, | பத. வியா. |
| 96. | திருவான்மியூர் | மருந்தீசுவரர் | வி. | மா. |
| 97. | திருவொற்றியூர் | தியாகராஜசுவாமி | உள். | மா. திரு. |
| 98. | கந்தகோட்டம் | முத்துக்குமாரசுவாமி | ,, | காரை. மா. பத. வியா. திரு. |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 99. சிந்தாதிரிப் பேட்டை | ஆதிபுரீசுவரர் | வி. | — |
| 100. மயிலாப்பூர் | கபாலீஸ்வரர் | உள். | மா. பத. வியா. திரு. |

## ஆய்வுக் குறிப்புகள்

49, 50, 53, 57, 64, 73, 74, 79, 89, 90, 91 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் நடராசர் திருமேனிகளில் சடை காணப்படவில்லை. பிரபையானது 27, 61, 78 ஆகிய எண்ணுள்ள கோயில்களில் காணப்படவில்லை. சிவகாமி 90-ஆம் எண்ணுள்ள கோயிலில் மட்டும் காணப்படவில்லை. முயலகன் 1 முதல் 100 எண்ணுள்ள கோயில்களில் எல்லாம் இடம் பெற்றுள்ளான்.

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அடி. | — | அடியார் |
| இந். | — | இந்திரன் |
| இரா. | — | இராசசேகர பாண்டியன் |
| உள். | — | உள்ளங்கையில் |
| கா. | — | காளி |
| காரை. | — | காரைக்காலம்மையார் |
| கோ. | — | கோமுனி |
| சம். | — | சம்பந்தர் |
| சு. சி. | — | சுதைச் சிற்பம் |
| சுந். | — | சுந்தரர் |
| செம். | — | செம்பியன் மாதேவி |
| தி. | — | திருமால் |
| திரு. | — | திருமுறைகள் |
| தே. | — | தேவகணங்கள் |
| நந். | — | நந்திதேவர் |
| நால். | — | நால்வர் |
| நான். | — | நான்முகன் |
| ப. | — | பட்டிமுனி |
| பத. | — | பதஞ்சலி |
| பி. | — | பிரம்மா |
| பிரு. | — | பிருங்கி முனிவர் |
| மா. | — | மாணிக்கவாசகர் |
| முனி. | — | முனிவர் |
| வி. | — | விரல் நுனியில் |
| விநா. | — | விநாயகர் |
| வியா. | — | வியாக்கிரபாதர் |

## பின்னிணைப்பு—2
## ஒப்பீட்டு நோக்கில் நடராசர்

| வடிவங்கள் | சடை | பிரபை | சிவகாமி | தீ | முயலகன் | உடனுள்ளவை |
|---|---|---|---|---|---|---|
| கல் | உண்டு | உண்டு | — | உள்ளங்கையில் | உண்டு | உண்டு |
| சுதை | ,, | ,, | உண்டு | ,, | ,, | ,, |
| மரம் | ,, | ,, | — | ,, | ,, | — |
| திருமேனி | ,, | ,, | உண்டு | ,, | ,, | உண்டு |
| ஓவியம் | ,, | ,, | ,, | விரல் நுனியில் | ,, | ,, |

## பின்னிணைப்பு—3

# நடராசர் பற்றிய நூல்கள்

1. அண்ணாசாமி ஐயர், சி., ஆனந்த நடராஜர் பேரில் அழகிய கீர்த்தனம், பிரம்ம வித்தியா யந்திர சாலை, சிதம்பரம், 1890.

2. அம்பலவாணர் வழிபாடு, மலர் வழிபாட்டு வரிசை-5, கழக வெளியீடு, 1967.

3. அருளானந்த மூர்த்திகள், திருவெண்ணெய்நல்லூர், தில்லை நடராஜ பதிகம், ஆ. இராமஞ் செட்டியார் (பதி.) மாதவனிவாச அச்சுக்கூடம், 1878.

4. ஆழ்வாரப்பிள்ளை, எம். தில்லை நடராஜமூர்த்தி கீர்த்தனம், சிந்தாமணி யந்திரசாலை, பாளையங் கோட்டை, 1885.

5. ஆறுமுகம் பிள்ளை, பூ., சோடசப் பிரபந்தம், கலாரத் நாகரம் அச்சுக்கூடம், சென்னை, 1899.

6. இராமலிங்கப்பிள்ளை, சி., நடராஜபதிமாலை, மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை, 1879.

7. ஐயாக்கண்ணு ஓதுவார், சிதம்பரம் கும்பாபிஷேகக் கும்மி, வித்தியா வினோதினி அச்சுக்கூடம், சிதம்பரம், 1891.

8. கண்ணப்ப சோதிடர், கீழ் ஆயக்குடி, பொன்னம்பல நாதர் பதிகம், கே. ஆர். ரெங்கநாதம் & பிரதர்ஸ், மதுரை, 1919.

9. கருணை ஐயர், சிதம்பரநாதர் பதிகம், பொன்னம்பல முதலியார் பதிப்பு, லக்ஷ்மி விலாச சாலை, வண்ணாரப் பேட்டை, 1874.

10. கிருஷ்ணய்யரவர்கள், மாயூரம், ஸ்ரீ நடராஜ தயாநிதி மாலையும், ஸ்ரீ நடராஜ குஞ்சிதபாதப் பதிகமும், வெ. இ., சார்வரி வருடம், சித்திரை மாதம்.

11. கிருஷ்ணசாமி முதலியார் கு. ஆ., (பதி.) சிதம்பர நடராஜர் நடனத் திருப்புகழ் காவடிச்சிந்து, இராஜ ராஜேஸ்வரி பிரஸ், கும்பகோணம், 1916.

12. குருணி ஐயர், சிதம்பரநாதர் பதிகம், சி. மாணிக்க முதலி அண்டு கோ பதிப்பு, மனோன்மணி விலாச அச்சுக்கூடம், 1878.

13. குருநமசிவாய சுவாமிகள், சிதம்பர வெண்பா, புஷ்பரதச் செட்டியார் பதிப்பு, கலாரத்னாகரம் அச்சுக்கூடம், சென்னை, 1868.

14. கோபாலகிருஷ்ண ஐயர், சிதம்பரக்கும்மி, சி. வீராசாமி நாயுடு பதிப்பு, வித்தியா விநோதினி அச்சுக்கூடம், 1878.

15. கோபாலகிருஷ்ண பாரதியார், ஆனைதாண்டவபுரம் சிதம்பரக்கும்மி, நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை, 1919.

16. சபாபதிப்பிள்ளை, ஆர்., மேலைச் சிதம்பரமாகிய திருப்பேரூர் அரசம்பலவாணர் பதிகம், கந்தசாமி முதலியார் பதிப்பு, கலாநிதி அச்சுக்கூடம், கோயமுத்தூர், 1888.

17. சரவண பண்டிதர் (பதி.), சிதம்பரநாதர் பதிகம், வித்யாவினோத அச்சுக்கூடம், 1879.

18. சரவணபிள்ளை, டி., சிதம்பரநாதர் பதிகம், ஸி. மாணிக்க முதலி பதிப்பு, மனோன்மணி விலாசம் அச்சுக்கூடம், சென்னை, 1875.

19. சிவசங்கர தீக்ஷிதர், ஸ்ரீ நடராசர் பேரில் அழகிய கீர்த்தனம், சிவசுப்பிரமண்ய வாத்தியார் பதிப்பு, விக்டோரியா பாண்டியன் அச்சுக்கூடம், ஆனைக்காரன் சத்திரம், 1901.

20. சிவசிதம்பரம் ஓதுவார் மூர்த்தி, நடராஜ கீர்த்தனை, ரா. ம. குமாரசுவாமி பிள்ளைப் பதிப்பு, நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி, 1916.

21. சிவசுப்பிரமணிய ஐயர், ஐ.எஸ்., சிதம்பர மஹாத்மியம் குஞ்சித சரண பிரஸ், சிதம்பரம், 1909.

22. சிவசுப்பிரமணிய வாத்தியார், நடேசர் பதிகம், பத்மநாத சுவாமி பதிப்பு, பிரம்ம வித்தியா அச்சுக்கூடம், சிதம்பரம், 1900.

23. சுந்தர முதலி, பி., (பதி.), பஞ்சாட்சரப்பதிகமும், நடராஜப்பத்தும், சுந்தர விலாச அச்சுக்கூடம், சென்னை, 1892.

24. சுப்பிரமணிய ஐயர், நடராஜ குஞ்சிதபாதம், மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், 1900.

25. சுப்பிரமணிய ஐயர், தஞ்சை (சதாவதானம்), நடராஜ தயாநிதிமாலை, மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், 1900.

26. சுப்பிரமணிய பிள்ளை, சிதம்பர நடேசர் திருவருட்பா, சிதம்பரநாதர் பதிகம், சிவகாமி அம்மை பதிகம், சித்தாந்த வித்தியானுபாலன யந்திரசாலை, 1897.

27. சுப்பிரமணிய பிள்ளை (பதி.), பஞ்சாட்சரப் பதிகம், நடராஜப் பத்து முதலியன, சித்தாந்த வித்தியானு பாலன யந்திரசாலை, சிதம்பரம், 1897.

28. சூதர முதலி, நடேசர் சிந்து, டி.இ. பரசுராம முதலி பதிப்பு, பரப்பிரம்ம முத்திராக்ஷர சாலை, சென்னை, 1878.

29. சொக்கலிங்க செட்டியார், தில்லைவளாகம் நடேசர் பதிகம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை, 1900.

30. நடராஜன், சைதை, பொன்னம்பலக்கூத்தர் நாமாவளி கள், வெ. இ., 1978.

31. நடேசபத்தர், நடராஜர் தெரிசன உற்சவ வழிநடைப் பதம், பிரம்ம வித்தியா யந்திரசாலை, சிதம்பரம், 1894.

32. நாகலிங்க பிள்ளை, சி., நடேசர் மான்மியம், ஆர். நாராயணசாமி ஐயர் பதிப்பு, பிரம்ம வித்தியா அச்சுக்கூடம், சிதம்பரம், 1890.

33. நாராயணசாமி ஐயர், (பதி)., தில்லை நடேசர் பதிகம், பிரம்ம வித்தியா அச்சுக்கூடம், சிதம்பரம், 1890.

34. பக்தவச்சலு செட்டியார், நா., (பதி.), பஞ்சாட்சரப் பதிகம், நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை, 1919.

35. பரமசிவஞ் செட்டியார், ரெட்டியபட்டி, தில்லை யந்தாதி, அருணாசலக் கவிராயர் பதிப்பு, அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை, 1916.

36. மாரிமுத்துப்பிள்ளை, தில்லைவிடங்கன், திருப்புலியூர் வெண்பா, புஷ்பரதச் செட்டியார் பதிப்பு, கலாரத் நாகரம் அச்சுக்கூடம், சென்னைப் பட்டணம், 1868.

37. முத்துத்தாண்டவர், சிதம்பரம் சபாநாதர் பேரில் கீர்த்தனம்—பதம், ஆறுமுக சுவாமிகள் பதிப்பு, பரப் பிரம முத்திராக்ஷர சாலை, திருவொற்றியூர், 1873.

38. முனுசாமி முதலியார், சிறுமணவை, நடராஜப்பத்து, பகடால. முனிரத்தினம் நாயுடு பதிப்பு, கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், இராயவேலூர், 1916.

39. ராஜ கணேச தீக்ஷிதர், க. மீ., (தொகு.). ஸ்ரீ நடேச ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம், ஸ்ரீ நடேச ஸஹஸ்ர நாமாவளி, ஸ்ரீ சிவகாம ஸுந்தரி ஸஹஸ்ர நாமாவளி, தி. கி. நாராயண சுவாமி நாயுடு வெளியீடு, ஆ இ., பதி. இ.

40. வரதராச முதலி, நடராசபதிமாலை, சி. கன்னியப்ப முதலி பதிப்பு. கமலாலய விலாச அச்சுக்கூடம், சென்னை, 1878.

41. வள்ளிநாயகம் பிள்ளை, தில்லைமாலை, கலாரத்னா கரம் அச்சுக்கூடம், 1894.

42. ......, தில்லை வெண்பா அந்தாதி, சண்முக வேலாயுதம் பிள்ளைப் பதிப்பு, கலாரத்நாகரம் அச்சுக்கூடம், 1896.

43. விசுவநாத கனபாடிகள், எ. எஸ்., ஸர்வமான்யம் புத்தூர், நடராஜர் பேரிலும் சிவகாமி பேரிலும்

